# எம்.எஸ்

1

எல்லா ஜீவ நதிகளும் எங்கோ ஒரு சிறு ஊற்றாகத்தான் புறப்படுகின்றன. நடந்த மண்ணிற்கு வண்டலும் வளமும் சேர்த்துச் செல்லும் அந்த நதிகள் ஆரம்பம் ஆவதென்னவோ ஒரு சின்னஞ்சிறு இடத்தில் தான்.

தமிழகத்தின் பிரபலங்கள் பிறந்த இடம் தேடி நடந்தோம். அங்கு அவர்களோடு வாழ்ந்தவர்களை வாழ்க்கைச் சரித்திரத்தின் வீதிகளில் சற்றே பின்னோக்கி அழைத்துச் சென்றோம். இந்தப் பணியில் சில நிமிடங்கள் சிலிர்ப்பானவை. சில பிரமிப்பானவை. சில நெகிழவைத்தவை. சில மகிழவைத்தவை. இதோ நடக்கத் தொடங்குகிறது நதி.

மதுரையில் எப்போதும் சந்தடியுடன் இருக்கும் மேலக் கோபுரத் தெருவிலிருந்து பிரிகிற கிளைச் சந்து மேல அனுமந்தராயன் கோவில் தெரு, குறுகலான அந்தச் சந்தில் நுழைந்ததும் வலது புறம் முகப்பில் வீணைச் சிற்பம் பதித்த வீடு, குழந்தைப்

A

## நதிமூலம்



இசைக்குயிலுடன் கவிக்குயில்



அண்ணன் சக்திவேல்

பருவத்தில் 'குஞ்சம்மா'வாக இருந்த எம்.எஸ். சுப்புலக்ஷ்மியின் பூர்வீக வீடு இதுதான்.

சங்கீதத்திற்குப் பெயர் போன குடும்பம் அது. சுப்புலக்ஷ்மியின் பாட்டி அக்கம்மாள் - வயலின் வித்வான். தாயார் சண்முகவடிவு - வீணையில் ரொம்பப் பிரபலம். குடும்பமே இசையில் திளைத்தது. சண்முக வடிவின் மூன்று குழந்தைகளும் இசைத் துறைக்கு வந்துவிட்டன. மூத்த மகன் சக்திவேல் மிருதங்கம் கற்றுக் கொள்ள, சுப்புலக்ஷ்மி வீணையுடன் வாய்ப் பாட்டு, தங்கை வடிவாம்பாள் அம்மா மாதிரி வீணை. தாயார் சண்முகவடிவு வீணையில் சாதகம் பண்ணும்போது இடையிடையே அந்த ராகத்தை வாய் விட்டுப் பாடுபவர். சின்னப் பெண்ணான சுப்புலக்ஷ்மியும் அந்த ராகத்தை அம்மாவுடன் சேர்ந்து பாடுவார். சங்கீதம் எம்.எஸ்க்கு ஒரு தாய்வழிச் சொத்து.

"இந்த வீட்டிலே தான் சுப்புலக்ஷ்மியம்மா பிறந்து வளர்ந்ததெல்லாம்.. வடக்கே வீணை கனகம்மாள் மாதிரி இங்க சண்முகவடிவம்மாளுக்கு அப்போ நல்ல பெயர். மீனாட்சியம்மன் கோவிலுக்குப் பக்கத்திலே. இந்த வீடு இருக்கிறதாலே... இந்தப் பக்கம் நாதஸ்வரம் வாசிச்சிட்டுப் போற வித்வான்களெல்லாம் இவங்க கிட்டே பாராட்டுப் பெறணும்ங்கிறதுக்காக நல்ல சாகித்யத்தை வாசிப்பாங்க" என்கிறார் எம்.எஸ். சுப்புலக்ஷ்மி பிறந்த வீட்டில் இப்போது குடியிருக்கும் அவரது உறவினரான கே. ராஜு.

ஐந்தாவது வகுப்பு வரை வீட்டுக்கு அருகில் இருந்த பள்ளியில் படிப்பு. அப்புறம் வீடுதான். பாட்டு பிரதானமாகி விட்டது. அப்போது சுப்புலக்ஷ்மியின் வீட்டில் ரேடியோ இல்லை. பக்கத்தில் வீட்டில் இருந்த ரேடியோவிலிருந்து பிரபல வித்வான்கள் பாடுகிற பாடல்கள் காதில் விழ, கூடவே இணைந்து பாடுவார். பேப்பரைச் சுருட்டி ஸ்பீக்கர் மாதிரி வைத்துக் கொண்டுப் பாடிப் பார்த்திருக்கிறார். தினமும் அம்மாவுடன் இணைந்து சாதகம் செய்யச் செய்ய குரலில் மெருகு ஏறத் துவங்கியது.

மதுரையில் சௌராஷ்டிராப் பிரமுகர் வீட்டில் திருமணம் ஒன்றிற்கு வீணை வாசிக்கப் போயிருந்தார் சண்முகவடிவு. கூடவே போன சிறுமியான சுப்புலக்ஷ்மியும் சில பாடல்களை இடையிடையே பாடினார். அதே போல், ஒன்பது வயதிருக்கும். ஒரு இசை நிகழ்ச்சி.



தங்கை வடிவாம்பாள்



அம்மா சண்முக வடிவு

அதில் வீணை வாசிக்கக் கிளம்பும் போது தெருவில் விளையாடிக் கொண்டிருந்த சுப்புலக்ஷ்மியையும் கூட்டிக் கொண்டு போனார். 100 பேர் தான் கூட்டம் மிகவும் உயர்ந்த ரசனையுள்ளவர்கள். அதில் சில பாடல்களைப் பாட - பலரிடமிருந்து கை தட்டல், ஒரே பாராட்டு. வீட்டுக்குத் திரும்பினதும் மறுபடி விளையாடப் போய் விட்டார் சுப்புலக்ஷ்மி.

"எம்.எஸ்ஸம்மாவின் தங்கை வடிவாம்பாள் இளம் வயதிலேயே இறந்துவிட்டார். பிறகு அவங்க அம்மா, அண்ணா சக்திவேல் எல்லோரும் இதே வீட்டிலேதான் இருந்தாங்க... அவங்க காலமானதும் மதுரையில்தான். மதுரைக்குக் கச்சேரிக்கு வந்தாங்கன்னா...இந்த வீட்டுக்கு வருவாங்க. வட நாடு வரைக்கும் சுப்புலக்ஷ்மியம்மா புகழ் பரவியிருக்கிறதாலே மதுரைக்கு வர்ற வடநாட்டவர்கள் இந்த வீட்டைத் தேடிக் கண்டு பிடிச்சுட்டு வந்து நமஸ்கரிச்சுட்டுப் போறாங்க" நினைவு கூர்ந்து சொல்கிறார் எம்.எஸ்.எஸ்.ஸின் உறவினரான எழுபது வயதான லட்சுமியம்மாள்.

வீட்டில் இருந்தாலும் தொடர்ந்து சாதகம். மதுரையிலிருந்து சீனிவாச அய்யங்காரிடம் வாய்ப்பாட்டுக் கற்றுக் கொண்டு, ஹிந்துஸ்தானி இசையை பண்டிட் நாராயணராவிடம் கற்றுக் கொண்டார். அப்போது சுப்புலக்ஷ்மியின் வீட்டிற்குப் பக்கத்திலேயே இருந்த வக்கிலான சுப்பிரமணிய ஐயருக்கு சின்ன வயதிலேயே சுப்புலக்ஷ்மியின் திறமையைப் பார்க்க, அபார சந்தோஷம். இவரது பாடல்கள் மீது அவ்வளவு விருப்பம். ஒரு தடவை சிறுமியாக இருந்த சுப்புலக்ஷ்மியை சாரட் வண்டியில் ராமர் படத்திற்கு அருகில் உட்கார வைத்து தெருக்களில் வலம் வரச் செய்திருக்கிறார்.

சுப்புலக்ஷ்மிக்குப் பதினேழு வயதாகிறபோது சென்னை மியூசிக் அகாடமியில் இசை நிகழ்ச்சி, தாயார் சண்முகவடிவு தம்புரா மீட்ட, பல வித்வான்கள் முன்னிலையில் பாட அந்தக் குரலினிமை பலரை வசியப் படுத்திவிட்டது. விழாவிற்கு வந்திருந்த வித்வானான காரைக்குடி சாம்பசிவஐயர் கொஞ்சம் உணர்வு வயப்பட்டுச் சொன்னார். "குழந்தை உன் தொண்டையிலேயே வீணையை வைச்சுண்டிருக்கேம்மா..."

"இசைப் பாரம்பரியம் உள்ள குடும்பத்தில் மதுரையில் பிறந்து இந்த அளவுக்கு எம்.எஸ். புகழ் பெறக் காரணம் அவருக்கு இசையில் இருக்கும் ஈடுபாடு. கர்நாடக சங்கீதத்தின் நெளிவு சுளிவுகளைப் பரிபூரணமாக உணர்ந்தவர் அவர். மதுரையில் சத்குரு சங்கீத சமாஜத்தில். சில முறை வந்து பாடியிருக்கிறார்கள். 72ல் அரியக்குடி, செம்மங்குடிக்குப் பிறகு இவர்களுக்கு 'மதுர கலா பிரவீணா'



அந்தக் கால எம்.எஸ்.



ராஜு

என்கிற பட்டத்தைக் கொடுத்தோம். தான் பிறந்த ஊரில் இந்தப் பட்டம் கொடுக்கப்பட்டது குறித்து அவர்களுக்கு மிகுந்த சந்தோஷம்" என்கிறார். மதுரையிலுள்ள இசைக் கல்லூரியின் செயலாளரான லக்ஷ்மி நரசிம்மன்.

முப்பதுகளின் கடைசியில் மதுரையைச் சேர்ந்தவர்கள் சிலர் திரைப் படத் துறையில் செல்வாக்குடன் இருந்த நேரம். எம்.எஸ்ஸுக்கு சினிமாவில் நடிக்க அழைப்பு வந்தது. நல்ல கதை. பாட அதிக வாய்ப்பு. ஒப்புக் கொண்டார். சென்னையில் படப்பிடிப்பு நடந்தது.

"எம்.எஸ். சுப்புலக்ஷ்மி 'சேவாதனம்' என்ற படத்தில் நடித்துக் கொண்டிருந்த நாட்கள் அவை. கிண்டியில் இருந்த ஒரு ஸ்டுடியோவில் நாள்தோறும் ஷூட்டிங் நடந்து கொண்டிருந்தது.

பத்திரிகை நிமித்தமாக திரு. சதாசிவம் அடிக்கடி படப்பிடிப்பு நடக்கும் அந்த ஸ்டுடியோவுக்குப் போய் வருவார். அப்போது எம்.எஸ்.ஸுடன் ஏற்பட்ட பழக்கம் மலர்ந்து திருமணத்தில் முடிந்தது என்று எழுதுகிறார் எழுத்தாளரான சாவி. சுதந்திரப் போராட்டத்தில் பங்கு கொண்டிருந்தவரான சதாசிவத்திற்கும், சுப்புலக்ஷ்மிக்கும் திருநீறு மலையில் 1940ல் திருமணம் நடந்தபோது அதை முன்னின்று நடத்தி உதவியவர் 'ஹிண்டு' பத்திரிகை ஆசிரியராக இருந்த கஸ்தூரி சீனிவாசன்.

"எந்தக் கணவரும் தன் மனைவிக்காக இப்படி அக்கறை எடுத்துக் கொண்டு அரும்பாடு பட்டதில்லை என்று எண்ணும்படியாக என் வாழ்வை முற்றிலும் செம்மை செய்து, என் சங்கீதத்தை உருப்படுத்தி என்னுடைய புகழ் வாழ்வை நிர்மாணித்து வருபவர் என்பதிதேவர் (சதாசிவம்) எனக்கு எதுவும் தெரியாது. ஆனால் இரண்டு விஷயங்கள் தெரியும். முதலாவது எனக்கு எதுவும் தெரியாது என்பது தெரியும். இரண்டாவது என் நலமனைத்தும் என்பதிதேவருக்குத் தெரியும்" என்று மேடையிலேயே மனந்திறந்தபடி சதாசிவத்தைப் பற்றி சொல்லியிருக்கிறார் சுப்புலக்ஷ்மி.

சினிமாவுலகைப் பொறுத்தவரை எம்.எஸ். சுப்புலக்ஷ்மி பாடி நடித்தது சேவாதனம், சகுந்தலை, சாவித்திரி, மீரா என்று நான்கே படங்கள். இதில் 'சாவித்ரியில்' சுப்புலக்ஷ்மி நடித்தது நாரதராக. சதாசிவமே தயாரித்து தமிழிலும் இந்தியிலும் வெளியான



லட்சுமியம்மாள்



வீட்டு முகப்பு

மீரா அப்போதைய பாக்ஸ்ஆபீஸ் ஹிட். படம் வெளியானதும் பார்த் தவர்கள்பலருக்குப் பரவசம். சரோ ஜினி தேவி படம் பார்த்து நேசித்த தைப் பற்றி 48ல் 'கல்கி'யில் எழுதி யிருக்கிறார் :

"மீரா படத்தையும், ஸ்ரீமதி சுப்பு லக்ஷ்மியையும் வட நாட்டவருக்கு அறிமுகப்படுத்துவதற்காகத் தாமே படத்தின் ஆரம்பத்தில் திரையில் தோன்றிப் பேசவும் முன் வந்தார் ஸ்ரீமதி சரோஜினிதேவி. அவ்விதம் பேச வந்த பிறகு அதெல்லாம் முடி யாது. எம்.எஸ்.ஸை வட இந்தியர்க ளுக்கு மட்டும் அறிமுகப்படுத்த மாட் டேன். உலகத்துக்கேதான் அறிமுகப் படுத்துவேன்" என்று கூறி ஆங்கிலத் தில் அமுத கீத மொழிகளைப் பொழிந் தார்.

நாற்பது வருடங்களுக்கு மேல் சென்னையில் எம்.எஸ்.எஸ். குடும்பத் துக்கு உறுதுணையாக இருப்பவரான ஆத்மநாதன் பல சம்பவங்களை விவரிக்கிறார்.

"ரஷ்யாவில் மாஸ்கோவில் நடந்த 'இந்தியத்திருவிழா'வில் எம்.எஸ்.எஸ். அவர்கள் கலந்து கொண்ட போது அவர்களுக்கு வயது 72. நிகழ்ச்சி ஆரம் பிக்கும் முன்பு வயதைத் தெரிந்து கொண்ட சில பத்திரிகையாளர்கள் இந்த வயதில் பாடப் போகிறாரா?" என்று கேள்வி எழுப்பினவர்கள், நிகழ்ச்சி முடிந்ததும் வியந்து பாராட்டி னார்கள். உலக அளவில் பல கலைஞர் களின் குரல்களைப் பற்றி ஆய்வு செய்து வரும் இங்கிலாந்தைச் சேர்ந்த ஒருவர், பம்பாயில் இவரது இசை நிகழ்ச்சி நடந்த போது வந்திருந்து நிகழ்ச்சி முடிந்ததும் "நான் இதுவரை ரிக்கார்ட் செய்த குரல்களிலேயே முதல் தரமாக இருக்கிறது உங்கள் குரல்" என்று சுப்புலக்ஷ்மியம்மாவைப் பாராட்டினார்கள்.

பதினைந்து வயது நிறைவடை வதற்கு முன்பு மேடையேறியதிலிருந்து சரிவில்லாமல் என்னவொரு வளர்ச்சி எம்.எஸ்.ஸிடம். இந்தக் குரலிலிருந்த வசீகரம்தான் காந்தியையே ஈர்த்திருக் கிறது. 'ஹரிதும் ஹரோ' என்கிற பாடலை எம்.எஸ். பாடிக் கேட்க வைத்திருக்கிறது. "இந்த வரிகளை மற்றவர்கள் பாடுவதை விட எம்.எஸ். சுப்புலக்ஷ்மி வாசித்தாலே நன்றாக இருக்கும்" என்று காந்தி சொல்ல, "இசையரசிக்கு முன்னால் நான் யார்?" என்று அடக்கத்துடன் கேள்வி எழுப்பி னவர் நேரு. அரியக்குடி, பாலக்காடு மணி ஐயரிலிருந்து, படே குலாம் அலிகான், பண்டிட் ரவி சங்கர், அல்லாரக்கா என்ற சங்கீதக் கலைஞர் களிடையே தான் எம்.எஸ்.ஸுக்கு எவ்வளவு மதிப்பு!

66 அக்டோபரில் ஐ.நா. தினத் தன்று ஐ.நா சபையில் பாடச் சந் தர்ப்பம் கிடைத்துடன் பலரும் எழுந்து நின்று கை தட்டியது எப்.

5

# "வாழ்ந்த வாழ்க்கை நிறைவா இருக்கு"



நரைபோடின தலை. நெற்றியில் சின்னதாக விபூ கீற்று. அதன் கீழ் சற்றுப் பெரிய சிரிப்புடன் குங்குமம். முகம் முழுவதும் கனிந்த சிரிப்பு. எண்பது வயதைக் கடக்கிற இந்த நேரத்திலும் எழுந்து கும்பிட்டபடி வரவேற்றுச் சிரிக்கிறார்.

"எல்லோரும் ஷேமமாக இருக்கணும். அதுதான் முக்கியம். பாடறதெல்லாம் அதுக்காகத்தானே... இவங்க கூட சொல்லுவாங்க... உடம்பிலே 'ஷுகர்' இருக்கறப்போ ஏன் இப்படி மற்றவங்களை நினைச்சுக் கவலைப்படறேன்னு..." நான் பொதுவா... அதிகம் பேசறதில்லை. பாடறதோடு சரி... எல்லாத்தையுமே இவர் பார்த்துப்பார்... என்னைப் பல பாஷைகள் படிக்க வைத்து... ஆளாக்கி... இந்த அளவுக்குக் கொண்டு வந்தது இவர் தான்...! இவர் தான் எல்லாமே..." என்று தன் அருகில் உட்கார்ந்திருந்த 94 வயதான கணவர் சதாசிவத்தைக் காட்டுகிறார்.

மதுரைச் சூழல் பற்றிக் கேட்டதும்

"அங்கே போய் ரொம்ப நாளாச்சு... அப்போவெல்லாம் அங்கே வீட்டை விட்டு வெளியே வர மாட்டோம்... அப்படி இருப்போம்... அங்கே இருந்து வந்து சினிமாவிலே நடிச்சு, பாடி இப்படி ஆனதற்குக் காரணம் கடவுளோட அனுக்கிரகமும், இவரும்தான்..."

மறுபடியும் இயல்பான அந்தச் சிரிப்பு!

பேர்ப்பட்ட பாராட்டு? 1940ல் செம்மங்குடி சீனிவாசய்யரும், ராஜமாணிக்கம் பிள்ளையும் சேர்ந்து கொடுத்த விருதிலிருந்து, பத்மபூஷன், மகஸேஸே விருது, டெல்லிப் பல்கலைக் கழகம் உட்பட ஆறு பல்கலைக் கழகங்களிலிருந்து கொடுக்கப்பட்ட கௌரவ டாக்டர் பட்டம், சர்வதேச இசைக் கவுன்சிலின் உறுப்பினர் என்று எத்தனை வெகுமதி? மதுரையில் சின்னச் சந்துக்குள்ளிருந்த வீட்டுக்குள் இருந்த எம்.எஸ். சுப்புலக்ஷ்மி புகழின் உச்சிக்குப் போக முடிந்தது எப்படி?

"தனிப்பட்ட வாழ்க்கையில் சுப்புலக்ஷ்மி ரொம்ப எளிமையானவர். யாரையும் பாதிக்காத வெகுளித்தனத்துடன் இருப்பவர், இசைதான் அவரது வாழ்க்கை. இருபத்திநான்கு மணி நேரமும் இசை. அதைப் பற்றின பேச்சு, அதன் மீது ஒரு ஈடுபாடு..." என்று சொல்லும் கணவர் சதாசிவம்.

"பட்டம், பதவி எதுவும் பெற எனக்குத் தகுதியில்லை என்றே மனமார உணர்கிறேன். ஏதோ மீனாட்சியின் லீலை. அபலையான என்னை உலகெல்லாம் சுற்ற வைத்து, ஊரெல்லாம் புகழ வைத்து உங்கள் எல்லோருடைய அன்பையும் வாழ்த்தையும் வாங்கித் தருகிறாய்" என்று பட்டவர்த்தனமாகப் பேசினபடி இசை நிகழ்ச்சிகளில் இதுவரை கிடைத்த இரண்டு கோடிக்கும் அதிகமான பணத்தையும் பொது அறக்கட்டளைகளுக்கு வாரி வழங்கி விட்டிருக்கிற எம்.எஸ். சுப்புலக்ஷ்மி.

இந்த இருவரின் ஒருங்கிணைப்புதான் எம்.எஸ். சுப்புலக்ஷ்மி என்கிற பிரபலத்திற்கு அடித்தளம்.

புகழின் உச்சிக்குப் போனாலும் இன்று வரை அவர் பிறந்த ஊரான மதுரை - அவருடன் தவிர்க்க இயலாமல் பற்றுதலுடன் ஒட்டிக் கொண்டிருக்கிறது. அவரது இனிஷியலின் முதல் எழுத்தே மதுரையைக் குறிப்பது தான்!

ஆம்... மதுரை சண்முக வடிவு சுப்புலக்ஷ்மிதான், சுருக்கமாக எம்.எஸ். சுப்புலக்ஷ்மி ஆகியிருக்கிறது.

பேசினர். சிறுவியாபாரிகள் படும் தொல்லை, பெரு வணிகர்கள் அடிக்கும் கொள்ளை, நாட்டில் நடக்கும் கொலைகள் எல்லாம் என் மனசை உறுத்தியது. தடியெடுத்தவன் எல்லாம் தண்டல்காரன் என்ற நிலை கண்டு கொதித்தேன்.

இந்த நிலையில்தான் அரசே நானும் தடி எடுத்தேன். நான் கொடுத்த அடி ஒவ்வொன்றும் சமூகக் கயவர்களை நடுங்கவைத்தது. அதிகாரிகள் என்னைப் பிடிக்க முடியாத நிலையில், கெஞ்சத் துவங்கினர். நான் ஒரு கலகக்காரன்தான். நான் ஏற்கச் சித்தமாக இருக்கிறேன்."

வீணாதி வீணன் பேசி முடித்தான். குலசேகரபாண்டியன் உள்ளம் நெகிழ்ந்து போனவனாக அரியணையிலிருந்து எழுந்து வந்து அவனை மார்புறத் தழுவினான்.

"உன் பேச்சில் சத்தியம் ஒளிர்கிறது. மக்கள் உன்னைப் புகழ்வதை நானறிவேன். நன்மைகள் செய்யாத யாரையும் மக்கள் உள்ளத்தில் போற்ற மாட்டார்கள். உன் மதிநுட்பம்- மாவீரம் இந்த நாட்டுக்குத் தேவை. இனி நீ குற்றவாளியல்ல; இந்தத் தென்பாண்டி நாட்டின் தளபதி. என்

---

**வா**ரியார் பிறமொழி கலந்தும் சொல்லாட்சி புரிவார். அவர் ஒரு சமயம் கூறினார்:

"காபி, பலகாரங்கள் சாப்பிடும் இடத்தை 'கிளப்' என்கிறோம். கிளப் என்றால் கூடுமிடம் என்று சொல்வார்கள். காபி, பலகாரம் நன்றாக இருந்தால் அனைவரும் கூடுவதற்கு அது 'கிளப்'. ஒன்றும் வாயில் வைக்க முடியாவிட்டால் இடத்தை விட்டு கிளப்பு! என்பதற்காகவும் அது கிளப்!"

தகவல் : கே. ராஜேஸ்வரி, மருதாடு.

---

ஆனால், சிறுமை கண்டவிடங்களில் சீறியெழுந்தேனே தவிர, மாற்றாரோடு சேர்ந்து, இந்த ஆட்சியை அபகரிக்க எண்ணவில்லை. மக்களின் துணையோடுதான் என் கலகங்கள் நிகழ்ந்தன. இதோ தாங்கள் வந்து வீட்டீர்கள். நானும் வந்து உண்மைகளைச் சொல்லிவிட்டேன். ஊழல் அதிகாரிகளின் பட்டியலை அவர்கள் செய்த அக்கிரமங்களை உங்களிடம் விவரிப்பதோடு, நான் திரட்டிய செல்வம், என் அரண்மனை, ஆயுதங்கள் எல்லாவற்றையும் ஒப்படைக்கிறேன். யோசித்து, ஒரு நல்ல தீர்ப்பை வழங்குங்கள். அது என் மரண தண்டனை என்றாலும் முதலமைச்சனும் நீயே" என்றான்.

பின்னர் நிகழ்ந்த விஜயநகரப் படையெடுப்பில் குலசேகரப்பாண்டியனுக்காகப் போரிட்டு, உயிர் நீத்த அந்த மாவீரனை மக்கள் போற்றிக் கொண்டாடி, நாட்டுப் பாடலின் நாயகனாகவே ஆக்கிவிட்டதைத்தான் 'வீணாதி வீணன் கதைப்பாடல்கள் எடுத்துரைக்கின்றன!

-சரித்திரம் படைப்போம்

(ஆதாரம்: ஆராய்ச்சிப் பேரறிஞர் நா. வானமாமலை தொகுத்து, மதுரைக் காமராஜர் பல்கலை வெளியிட்ட 'ஐவர் ராஜாக் கதைகள்' நூலில் உள்ளன, வீணாதிவீணன் கதைப் பாடல்கள்)

# இசையரசி எம்.எஸ்.

உருக வைக்கும் தொடர்

ஆர்.சி. சம்பத்

கேட்போர் மனதைத் தனது தெய்வாம்சம் பொருந்திய குரலால் லயிக்கச் செய்யும் அதே நேரத்தில், தானும் அந்த இசையில் நனைந்து, பக்தி வெள்ளத்தில் கரைந்து, உருகி, இசைவடிவமாகவே மாற்றிவிடும் ஈடுஇணையற்ற இறையருட் கலைஞர், 'பாரத ரத்னா'. டாக்டர் எம்.எஸ். சுப்புலட்சுமி. தேனினும் இனிய அந்த மயக்கும் குரலால் கோடானுகோடி ரசிகர்களின் நெஞ்சங்களில் நீங்காத இடம் பெற்றவர்.

கூடல்நகரில் கோலோச்சுகின்ற மீனாட்சியம்மனின் அருள்பார்வை மேலஅனுமந்தராயன் கோயில் தெருவில் வசித்து வந்த ஓர் இசைக்கலைஞரின் குடும்பத்தின் மீது விழுந்தது.

பாரம்பரியமான இசைக்

குடும்பத்தைச் சேர்ந்த சுவாமிநாதன் ஒரு சங்கீத ரசிகர். அவரது மனைவி அக்கம்மாள், பிடில் வாசிப்பதில் தேர்ச்சி பெற்றவர். அந்தத் தம்பதியருக்கு மகளாகப் பிறந்தார் சண்முக வடிவு!

சண்முகவடிவுக்கு வாய்ப்பாட்டு கற்றுக்கொள்ளத்தான் விருப்பம். ஆனாலும் அவரது குரல் சரிவர அமையப் பெறாததால், வாய்ப்பாட்டுப் பயிற்சியை விட்டுவிட்டு, வீணை கற்றுக்கொள்ளத் தொடங்கினார். மிக விரைவிலேயே வீணை இசையில் வித்வத்துவம் பெற்று, தனது 15ஆவது வயதிலேயே தனிக்கச்சேரிகள் செய்யத் தொடங்கினார். வீணை சண்முக வடிவு என்று பிற்காலத்தில் சங்கீத


■ அண்ணன் சக்திவேல்


■ சகோதரி வடிவாம்பாள்

உலகம் போற்றியது.

சங்கீத ரசிகரான பிரபல வக்கீல் சுப்பிரமணிய ஐயரைத் தன் வாழ்க்கைத் துணைவராக ஏற்றுக் கொண்டார் சண்முகவடிவு.

1914-ல் சென்னை மாகாணத்தின் கவர்னராக இருந்த பென்ட்லண்ட் பிரபு, மதுரைக்கு விஜயம் செய்தார். அவருக்கு அளிக்கப்பட்ட விருந்துபசாரத்தில் சண்முகவடிவின் வீணைக் கச்சேரி ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.

அவரது வீணை வாசிப்பில் அகமகிழ்ந்து போன பென்ட்லண்ட் ஒரு தங்கப்பதக்கத்தையே அவருக்கு பரிசளித்தார்.

திருக்கோடிக் காவல் கிருஷ்ணய்யர், மடவார் விளாகம் முத்தையா பாகவதர், வீணை சேஷண்ணா, வீணை தனம்மாள் போன்ற இசை மேதைகள் சண்முகவடிவின் வாசிப்பைப் பாராட்டியுள்ளனர்.

வீணை சண்முகவடிவு பல '78 ஆர்பிஎம்' இசைத்தட்டுகளும் கொடுத்துள்ளார். அவற்றுள் கனம் சீனய்யாவின் குறிஞ்சி ராகப் பதம், 'சிவ தீக்ஷாபரு' மிகவும் பிரபலம்.

சண்முகவடிவின் மகளாக 1916-ம் ஆண்டு, செப்டம்பர் மாதம் 16-ம் தேதி பரணி நட்சத்திரத்தில் பிறந்தார் சுப்புலட்சுமி. 'மதுரை சண்முகவடிவு சுப்புலட்சுமி' என்பதே எம்.எஸ்.சுப்புலட்சுமி ஆயிற்று. ஆனால், வீட்டில் அவரது செல்லப்பெயர் 'குஞ்சம்மாள்.'

இசையில் ஆரம்பப் பாடத்தைத் தன் தாயார் சண்முகவடிவிடமே பயின்றார்.

முறைப்படி, சங்கீதம் பயில ஒரு குரு தேவையென்ற அடிப்படையில்,

மதுரை ஸ்ரீநிவாச ஐயங்காரிடம் சாஸ்த்ரிய சங்கீதம் பயில ஆரம்பித்தார் எம்.எஸ். அதேபோல மாயவரம் வி.வி.கிருஷ்ணய்யர் அவர்களும் எம்.எஸ்.ஸின் ஆரம்ப கால குரு ஆவார். 'சங்கீத கலாநிதி' விருது பெற்றபோது நிகழ்த்திய உரையில் தனக்குக் குருவாக அமைந்தவர்களை ஞாபகமாக நினைவுகூர்ந்து நெகிழ்ந்து போனார் எம்.எஸ்.

தாய் சண்முகவடிவின் வீணைக் கச்சேரிகளில், சிறுமி குஞ்சம்மாவும் உடன் பாடுவது அப்போது வழக்கம். இதனால் சபைக் கூச்சம் நீங்கி, கச்சேரி மேடை சம்பிரதாயங்கள் அனைத்தும் அத்துப்படியானது குஞ்சம்மாவுக்கு!

குஞ்சம்மாளுடன் உடன் பிறந்தவர்கள் இருவர். அண்ணன் சக்திவேல், மிருதங்கம் வாசிப்பதில் நல்ல தேர்ச்சியுள்ளவர் சகோதரி வடிவாம்பாள். ஆனால் மிக இளம் வயதிலேயே அவ்விருவரும் இறைவனடி சேர்ந்தனர்.

முதன்முதலாக எம்எஸ். கச்சேரி அரங்கேறியது எப்படித் தெரியுமா? அதுவும் ஒரு திடீர் அரங்கேற்றம் தான்.

மதுரை சேதுபதி உயர் நிலைப்பள்ளியின் அரங்கில் சண்முகவடிவின் வீணைக் கச்சேரி நடந்துகொண்டிருந்தது. திடீரென்று வாசிப்பதை நிறுத்திவிட்டு, அருகில் அமர்ந்திருந்த எட்டு வயதுச் சிறுமி குஞ்சம்மாளைப் பார்த்து "எங்கே அந்த 'ஆனந்தஜா' பாட்டைப் பாடு!"



■ அன்று : குஞ்சம்மாள்

என்றார் அன்னை. சொன்னதுதான் தாமதம். கொஞ்சமும் சபைக் கூச்சமின்றி கணீரென்று பாட ஆரம்பித்தாள் சிறுமி குஞ்சம்மாள். இப்படித்தான் நடந்தது அவரது அரங்கேற்றம்.

அன்று திடீரென மேடையேறி இந்துஸ்தானி மெட்டில் அமைந்த மராட்டியப் பாடலான 'ஆனந்தஜா' பாடிய அந்தக் குரல்தான், 1940-ல் சிந்துபைரவி ராகத்தில் 'ஆனந்தம் என் சொல்வேனே' பாடி, லட்சக்கணக்கான ரசிக உள்ளங்களை மயக்கியது.

சண்முகவடிவு தனது வீணைக் கச்சேரியை இசைத்தட்டில் பதிவுசெய்ய சென்னை வந்தார். உடன் வந்த பத்து வயதுச் சிறுமி சுப்புலட்சுமி, ஆறு கட்டை சுருதியில் கணீரென்று,



முருகக்கடவுள் மீது பாடினாள். அவரது இசைக்குரலும் இசைத் தட்டில் பதிவானது. 'தி டிவின்' ரிக்கார்டிங் கம்பெனி வெளியிட்ட அந்த இசைத்தட்டு பெரும்புகழ் அடையப்போகிறது என்று அன்றைக்கு யாரும் நினைத்திருக்க நியாயமில்லை.

முதன்முதலாக எம்.எஸ். அவர்கள் பாடி பதிவாக்கப்பட்ட அந்தப் பாடல்; 'மரகத வடிவும் செங்கதிர் வேலும்' வந்த வேகத்திலேயே விற்றுத் தீர்ந்தது. அந்தக் காலத்தில் இசைத்தட்டு உலகில் புதிய சரித்திரம் படைத்தது. செஞ்சுருட்டி ராகத்தில் அமைந்தி ருந்தது அந்தப் பாடல்.

மகளின் பெருமையை அறிந்து, அவளின் சங்கீத வாழ்க்கைக்கு வழிவகுப்பதே தன் லட்சியமாகக் கருதி, மேடைக் கச்சேரிகளிலிருந்து தான் மெதுவாக விலகிக்கொண்டார் சண்முகவடிவு. மகளை பாட்டுக்கச் சேரிகள் செய்ய ஊக்கப்படுத்தினார்.

சிறுமி குஞ்சம்மாள் வளர்ந்து செல்வி சுப்புலட்சுமி ஆனார். பட்டி தொட்டியெல்லாம் கச்சேரிகள் செய்ய... எம்.எஸ். என்பது ஒவ்வொரு வீட்டிலும் ஒலிக்கும் பெயரானது. அப்போது சுப்புலட்சுமிக்கு "எவரி மாட எம்.எஸ்." என்ற பெயர் ஏற்பட்டது. ஏனிந்தப் பெயர்?

(பாடுவார்)





சபாவில் ஏற்கெனவே ப்ரோகிராம் பட்டியல் முடிந்து விட்டதாக ஒரு தகவல். குறிப்பாக, மாலை நேர ஸ்லாட்டுகளுக்கு வித்வான்களிடையே ஏகப்பட்ட போட்டா போட்டியாம்; சிபாரிசுகளாம்.

■ **டி**.வி. சீரியல்கள் டைட்டில் சாங் என்றாலே நித்யஸ்ரீயைக் கூப்பிடுங்கள் என்ற காலம் மெதுவாக போய் இப்போது புயலாக உள்ளே நுழைபவர் சின்மயி. நிறைய சீரியல்களுக்கு கமிட் ஆகியுள்ளாராம்.

■ **'ரா**க வைபவம்' என்கிற பெயரில் மாதம் ஒரு முறையாவது ஒரு நிகழ்ச்சி நடத்துகிறார் குன்னக்குடி வைத்தியநாதன். இந்த ப்ரோக்ராமில் கர்நாடக சங்கீத பாடகர்கள் மற்றும் பாடகிகளை ஒரே மேடையில் உட்கார வைத்து, ராகங்களைப் பாடச் சொல்கிறார். பின்னர் அந்த ராகங்களுக்குரிய லட்சணங்களை எளிமையாக விளக்குகிறார். குன்னக்குடியாரின் இந்த ராக வைபத்திற்கு ஹவுஸ்ஃபுல் கூட்டம்!

■ **'பா**ய்ஸ்' படத்தில் முழுக்க முழுக்க சாஸ்த்ரிய சங்கீதத்தில் அமைந்த ஒரு பாடல் பெரிய ஹிட்டாகும் என்று கோலிவுட் வட்டாரம் சொல்கிறது. ஏ.ஆர். ரஹ்மான் 'என்னவளே' ஸ்டைலில் கொஞ்சம் ஹிந்துஸ்தானியையும் கலந்து அசத்தியிருக்கிறாராம்.

■ **ந**டிகர் விஜயகுமாரின் மகன் அருண்குமார் கர்நாடக சங்கீதத்தை முறைப்படி கற்றுக் கொள்கிறார். வித்வான் ஆண்டாங்கோயில் சிவகுமார் இவரது வீட்டுக்கு அவ்வப்போது சென்று கற்றுத் தருகிறார்.

- வி. சந்திரசேகரன்

# இசையரசி

செல்வி சுப்புலட்சுமிக்கு நாடெங்கும் இசை ரசிகர்கள் பெருகவே, கிராமபோன் கம்பெனியார் இவரது பாடல்களைக் கொண்ட பல ரெகார்டுகளை அறிமுகப்படுத்தினார்கள்.

'நகுமோமு', 'இனி என்ன பேச்சு; 'வேத வெற்பிலே' ஆகிய இசைத்தட்டுகள் 'கோகில கான எம்.எஸ். சுப்புலட்சுமி' என்ற அடைமொழியோடு வெளியிடப்பட்டன.

தியாகராஜரின் காம்போதி ராக கிருதியான 'எவரி மாட'வை ரிகார்டாகக் கொடுத்தபோது, ரசிகர்கள் மதி மயங்கிப் போயினர். அதனால் அப்போது எம்.எஸ்.ஸுக்கு 'எவரி மாட எம்.எஸ்.' என்றே பெயர் ஏற்பட்டது.

1932-ம் ஆண்டு சென்னை சங்கீத வித்வத் சபையில் ஏற்கெனவே ஏற்பாடாகியிருந்த இசை மேதை அரியக்குடி ராமானுஜ ஐயங்கார் அவர்களின் கச்சேரி தவிர்க்க முடியாத காரணத்தால் நடக்காமல் போக, அவருக்குப் பதிலாகப் பாட எம்.எஸ்.ஸுக்கு ஒரு வாய்ப்பு கிடைத்தது. அமோகமாக நடந்த அவரது 'மியூசிக் அகாடமி' முதல் கச்சேரி மாபெரும் வெற்றியாக அமைந்து விட்டது.

1933-ஆம் ஆண்டு கும்பகோணத்தில் மகாமக விழாவினையொட்டி நடந்த ஸ்பெஷல் சங்கீத

கச்சேரிகளின் வரிசையில் எம்.எஸ். அவர்களின் கச்சேரியையும் ஏற்பாடு செய்திருந்தார் மகாராஜபுரம் விஸ்வநாதய்யர். சம்பிரதாய சுத்தத் துடன் உயர்தரத்தில் அமைந்திருந்த அந்தக் கச்சேரி முடிந்ததும், தனக் குப் பரிசாகத் தரப்பட்ட தங்கப் பதக்கத்தை அப்படியே சுப்பு லட்சுமிக்கு அணிவித்துப் பாராட்டி ஆசீர்வதித்தார் மகாராஜபுரம்!

இசை உலகில் சுப்புலட்சுமிக்குக் கிடைத்துவந்த மகோன்னத ஆதரவின் காரணமாக, மதுரையி லிருந்து சென்னைக்குக் குடிபெயர்ந் தார் சண்முகவடிவு.

சென்னை புரசைவாக்கம் தாணாத் தெருவில் மகளுடன் குடி யேறினார். அப்போது நடன மேதை பாலசரஸ்வதி வீணை தனம்மாளுடன் எழும்பூரில் தங்கியிருந்தார். அந்தக் குடும்பத்துடன் நெருங்கிப் பழக எம்.எஸ். அவர்களுக்கு அரிய வாய்ப்பு கிட்டியது.

தமிழ்நாட்டிலிருந்து பிரபல கலைஞர்களை அழைத்துப்போய் பம் பாய் மாதுங்காவில் இயங்கி வந்த சங்கீதசபையில் கச்சேரிகள் நடத்து வதை வழக்கமாகக் கொண்டிருந்தார் அதன் செயலாளர் கேராஜகோபாலாச் சாரி என்பவர். ஒரு கச்சேரிக்காக வீணை தனம்மாளைக் காணவந்த அவருக்கு எம்.எஸ்.ஸின் அறிமுகம் கிடைத்தது. அதன் பயனாக எம்.எஸ்.ஸின் கச்சேரியை பம்பாயில்

■ தாய் வீணை சண்முக வடிவு...



ஏற்பாடு செய்து, அவரது இசைப்புகழ் இந்தியா முழுவதும் பரவச் செய்தார்.

எம்.எஸ்.ஸின் இந்த பம்பாய்ப் பயணத்துக்கு வழித் துணையாக வர, ஒரு ஆண் துணை தேவைப்பட்டது. அதற்காக வந்தவர்தான் டி. சதாசிவம். வழித்துணைக்காக வந்தவர் எம்.எஸ்.ஸின் வாழ்க்கைத் துணைவராகவும் ஆகி, ஆதர்ச தம்பதியாக திகழ்ந்தது வரலாறு.

1940-ம் ஆண்டு ஜூலை மாதம் 10-ம் தேதி சென்னையை அடுத்த திருநீர்மலையில் சதாசிவம்-எம்.எஸ். திருமணம் நடந்தது. இதனால் எம்.எஸ். என்ற இசைக்குயிலின் வாழ்வில் பொற்காலம் தொடங்கிற்று. அவரது இசையுலக வாழ்வை வளப்படுத்தி, செப்பனிட்டு வளர்த்தவர் சதாசிவமே.

குரல்வளம், சுருதி சுத்தம், தாளஞானம், பாவம், சொற்சுத்தம், அதீதமான கற்பனா சக்தி, அசுரசாதகம், பாடாந்தரம் இவையனைத்தோடும் தெய்வீகத்தில் திளைக்கும் ஐக்கிய பாவத்தையும் ஒருங்கே பெற்று, இசையுலகில் பிரகாசிக்கலானார் ஸ்ரீமதி எம்.எஸ்.

வீணை வித்வான் கே.எஸ். நாராயணசாமி, முசிறி சுப்ரமணிய ஐயர், செம்மங்குடி சீனிவாசய்யர் போன்ற இசை மேதைகளிடம் பாடம் கேட்டு தனது இசை



■ நாரதர் வேடத்தில்...

வளத்தை மெருகேற்றிக் கொண்டார்.

அதேபோல திலீப்குமார்ராய், சித்தேஸ்வரி தேவி, பி.எஸ். சீனிவாசராவ் ஆகியோர்களிடம் பஜன் பாடுவதில் பயிற்சி பெற்றார்.

1941-ல் 'சாவித்திரி' படத்தில் நடிப்பதற்காக கொல்கத்தா செல்லும் வழியில் சேவாக்ராமம் சென்று அண்ணல் காந்தியடிகளைத் தரிசித்து பிரார்த்தனைப் பாடல்களை மனம் உருகப் பாடினார் எம்.எஸ்.

இந்த கீதத்தில் மெய்மறந்த காந்திஜி "ஹரிதுமஹரோ ஜனகிபீர்' என்ற பஜன் எம்.எஸ்.ஸின் குரலில் நிச்சயமாக எனது பிரார்த்தனையில் இடம் பெற வேண்டும்!" என்றார்.

வைஷ்ணவ ஜனதோ, ரகுபதிராகவ ராஜாராம் போன்ற பஜன்களை இன்றும் எம்.எஸ்.பாட, ரேடியோவில் கேட்டால் ஒரு

தனி சுகம்தான்.

திருமணத்திற்குப் பிறகு சதாசிவம் கல்கி கிருஷ்ணமூர்த்தியுடன் சேர்ந்து 'கல்கி' பத்திரிகையைத் தொடங்கினார். அதற்கான மூலதனம் தேவைப்பட்டது. கையிலோ பணம் இல்லை. அப்போது எம்.எஸ்.ஸை 'சாவித்திரி' படத்தில் நாரதராக நடிக்க வேண்டும் என்று படத் தயாரிப்பாளர்கள் கேட்டனர். ஆனால், ஆண் வேடம் ஏற்று நடிக்க எம்.எஸ்.ஸுக்கு விருப்பம் இல்லை. மறுத்துவிட்டார். ஆனால், புதிய பத்திரிகைக்கு மூல தனம் தேவைப்பட்டது என்பதை அறிந்ததும், சுப்புலட்சுமி தாம் நாரதர் வேடம் ஏற்று நடிப்பதாக ஒப்புதல் அளித்துவிட்டார். அவ்விதமே நடிக்கவும் செய்தார். அதற்காக எம்.எஸ்.ஸுக்குக் கிடைத்த பணத்தைக் கொண்டே 'கல்கி' துவக்கப்பட்டது.

அதுமட்டுமல்ல; சங்கீதத்தை தர்மப்பணிகளுக்கும், சமுதாய நற்பணிகளுக்கும் பயன்படுத்தும் முறையைப் பிள்ளையார் சுழிபோட்டுத் தொடங்கியவர் எம்.எஸ்.தான். பல தொண்டு நிறுவனங்களுக்கு நிதி சேகரிக்க பல கச்சேரிகள் நடத்திக் கொடுத்தார்.

இசையை ஒரு வேள்வியாகவே பாவித்து வரும் எம்.எஸ். அவர்களைக் கொண்டு, ஏழைஎளிய மக்களுக்குப் பயன்படும் விதமாகக் காலஞ்சென்ற அன்னை கஸ்தூரிபா நினைவாக 'நினைவுநிதி' கச்சேரிகள் செய்யுமாறு ராஜாஜி கேட்டுக்கொண்டதன் பேரில் மகாத்மா காந்தியே சதாசிவம் தம்பதியினருக்கு ஒப்புதல் வழங்கினார்.

25.9.44 தேதியிட்ட கடிதம் ஒன்றை காந்திஜியே தன் கைப்பட ஆங்கிலத்தில் எழுதி, தமிழில் கையொப்பமிட்டு, எம்.எஸ். அவர்களுக்கு அனுப்பினார்.

'அன்புள்ள சுப்புலட்சுமி,

உங்களது தெய்வீகமான இசையைப் பயன்படுத்தி கஸ்தூரிபா நினைவு நிதிக்காக நீங்கள் செய்துள்ள ஆத்மார்த்தமான தொண்டின் முழு விவரங்களையும் ராஜாஜி என்னிடம் கூறினார். ஆண்டவனின் பரிபூரண அருட்கடாட்சம் உங்களுக்குக் கிட்டட்டும்.'

உங்கள்

**மோ.க.காந்தி.**

- என்று எழுதியிருந்தார்.

"அட்சர சுத்தமாக எந்த மொழியிலும் பாடக்கூடிய வல்லமை பொருந்தியவர் எம்.எஸ். ஒருவர்தான்" என்றார் ராஜாஜி.

எம்.எஸ்.ஸின்

■ மகாத்மாவின் பேச்சைக் கவனிக்கும் எம்.எஸ்.



இசைத்தொண்டினால் ஏற்பட்ட பள்ளி, கல்லூரிகள், திருமண மண்டபங்கள், ஆன்மிக நிறுவனங்கள், கோபுரங்கள் பலப்பல.

இந்தோனேஷியாவின் 'ரெமான் மாக்ஸேஸே' விருது பெற்றார் எம்.எஸ். அதற்காகத் தமக்குக் கிடைத்த பணம் முழுவதையும் கும்பகோணம் ராஜா வேதபாடசாலைக்கு அர்ப்பணித்துவிட்டார்.

திருவாரூர் மும்மூர்த்திகள் நினைவிடம், சென்னை கிண்டி காந்தி மண்டபம், எட்டயபுரத்தில் பாரதி மணி மண்டபம், மயிலை கபாலீஸ்வரர் கோயில் கோபுரம், ராமகிருஷ்ண மிஷன் நிதி, சங்கரநேத்ராலயா ஆஸ்பத்திரி கட்டட நிதி, காஞ்சி மகாசுவாமி மணிமண்டப நிதி... என்று பல்வேறு தர்ம காரியங்களுக்காக ஏராளமான நிதி அளித்துள்ளார்.



■ துணைவருடன்....

உலகம் முழுவதிலும் அனைத்து ஊர்களிலும் மதச்சார்பில்லாமல் இசை வழங்கி வருபவர் எம்.எஸ். ரோமில் போப்பாண்டவருக்கும் தமது இனிய இசையை வழங்கி அவரது தங்கப் பதக்கங்களைப் பெற்று, இதை உறுதிப்படுத்தினார்.

காஞ்சி பரமாச்சார்யார் முன் குருவந்தனமும் பாடுவார். சீக்கியர்களின் கோயில்களில் பாடப்படும் 'ஷபத்'தும் பாடுவார். சமஸ்கிருதம், இந்தி, குஜராத்தி, பெங்காலி, மலையாளம், உருது, மராத்தி, கன்னடம், தெலுங்கு, தமிழ் முதலான மொழிகளில் பாடும் திறன் பெற்ற ஒரே கர்னாடக சங்கீதப் பாடகி இசையரசி எம்.எஸ்.தான்!

1954-ம் ஆண்டில், சுதந்திர பாரத தேசத்தில் தேசிய விருதுகள் நிர்மாணிக்கப்பட்டபோது, முதல் ஆண்டிலேயே 'பத்ம பூஷன்' பட்டம் எம்.எஸ். அவர்களுக்கு அளிக்கப்பட்டது.

(பாடுவார்)



''என்கிட்டே தமில் படிச்ச நீ, இப்ப டி.வி. காம்ப்பியரா இருக்கியாமே?''

"ஆமாம் டீச்சர்... இது நீங்க கொடுத்த வால்க்கை!"

-கமுதி எஸ்.சேதுராமன்



"இந்த ஏரியாவுல போய் ஏன் கிளினிக் கை வச்சோம்னு இப்ப வருத்தப்படுறேன் சார்...! ஒரு ஈ, காக்கா கூட வர்றதில்லே...!"

''அட, நீங்க வெட்னரி டாக்டரா?''

-கிரிஜா மணாளன்



"ஏண்டா கலாவை விட்டுட்டு மாலாவை லவ் பண்ண ஆரம்பிச்சுட்டே?"

"மாலாவோட அப்பா வி.ஆர்.எஸ். வாங்கி கைல காசோட இருக்கிறதா கேள்விப்பட்டேன், அதான்!"

- கமுதி எஸ். சேதுராமன்





எல்லாம் இறைவன் செயல் என்பதை அவளுக்கு உணர்த்திய கிருஷ்ணர், ஆண்டுதோறும் 9 நாட்கள் அவளுடன் அவள் இடத்திலேயே வந்து தங்கி, அருள்பாலிப்பதாக வாக்களித்தார்.

(அதனால்தான் கோயிலை விட்டுத் தேரில் கிளம்பும் ஜகந்நாதர், 3 கி.மீ. தொலைவில் உள்ள குண்ட்சா மந்திருக்கு அழைத்துச் செல்லப் படுகிறார். தேரிலிருந்து ஜகந்நாதர், பலராமர், சுபத்ரா ஆகியோர் இறக்கப்படுகிறார்கள். கோயில் அரங்கத்தில் வீற்றிருந்து 9 நாட்கள் அருளாசி வழங்குகிறார்கள்.

வருடாவருடம் இந்த விழா நடைபெறுகிறது.)

கதையைச் சொல்லி முடித்த சங்கரர்,' "இப்போது புரிகிறதா?" என்பதுபோல சீடரைப் பார்த்தார்.

புரி க்ஷேத்திரம் குருதேவருக்கு மிகவும் பிடித்திருந்ததால் அங்கேயே சில காலம் தங்கியிருந்தார்.

பாரதத்தின் தெற்கே சிருங்ககிரியிலும், மேற்கே துவாரகையிலும், வடக்கே பதரியிலும் மடத்தை ஸ்தாபனம் செய்தது போல கிழக்கு திசைக்குரிய திருமடத்தை இந்த புரியில் நிர்மாணித்தார் ஆசார்யாள். கோவர்த்தன மடம் என்று அதற்குப் பெயரிட்டார். விமலா பீடத்தை அங்கே நிறுவி, ஹஸ்தாமலகரை அங்கு முதல் பீடாதிபதியாக நியமித்தார். (பத்மபாதர் என்றும் சில நூல்கள் சொல்கின்றன). இந்த மடத்தின் பீடாதிபதிகள் 'அரண்ய' என்ற ஆசிரம நாமம் பெற்றவர்கள்.

பின்னர் பாரதம் முழுக்கப் பிரசாரம் செய்யக் கிளம்பிய ஆதிசங்கரர், சிருங்ககிரிக்கு மீண்டும் வருகை புரிந்தார்.

கயிலையில் ஈஸ்வரர் பஞ்சலிங்கங்களை அளித்தாரல்லவா? அதில் ஒன்றான போகலிங்கத்தை சிருங்ககிரியில் பிரதிஷ்டை செய்தார் ஆசார்யாள்.

சிருங்ககிரியிலிருந்து புறப்பட்ட ஜகத்குரு, தொண்டை மண்டலத்தைச் சேர்ந்த பல தலங்களுக்குப் பயணம் செய்தார்.

அடுத்துவந்தது, நம் திருவொற்றியூருக்கு.

(தொடர் ஓம்)

எம்.எஸ். நடித்த 'மீரா' இந்திப் படத்தை அறிமுகம் செய்த காலஞ் சென்ற கவிக்குயில் சரோஜினிதேவி இப்படிக் கூறினார்:

"நான் இப்போது இந்தியில் பேசாமல் ஆங்கிலத்தில் பேசுவது, காரணமாகத்தான். என்னுடைய பாராட்டு வார்த்தைகள் இந்தியாவில் மட்டும் கேட்டால் போதாது. உலகம் முழுவதும் கேட்க வேண்டும் என்பதாலேயே ஆங்கிலத்தில் பேசுகிறேன். உயிர்த்துடிப்புடன் நான் கூறும் வார்த்தைகள் உலகின் கடைக் கோடியில் உள்ள மூலைமுடுக்குகளிலெல்லாம் கேட்க வேண்டும் என்று விரும்புகிறேன். ஆம், இந்தியாவிலே எப்படி ஓர் உன்னதக் கலைஞர் தமது பாட்டினாலேயே கோடானு கோடி மக்களின் இதயங்களைத் தொட்டு எழுப்பியிருக்கிறார் என்பதை உலகமெலாம் அறிய வேண்டுமென விரும்புகிறேன்.



வரப்பிரசாதம் பெற்றுள்ள இந்த மந்திரசக்தி வாய்ந்த பாடகியின் காந்தக் குரலைக்

கேட்பவர் யாராயினும் அவருக்கு இன்று என்னிடம் கிளர்ந்துள்ள உணர்ச்சிகள் எழும்பும் என்று நம்புகிறேன். இந்தப் பொற்குரல் மகத்தான பல லட்சியங்களை நிறைவேற்றும் ஒரு கருவி என்பதை அனைவரும் அறிவீராக!" - இப்படிச் சொன்னார் சரோஜினி.

இசையரசி எம்.எஸ்.ஸின் பாட்டிற்கு விமர்சனம் எழுதப் புகுந்த அமரர் கல்கி, "சுப்பு லக்ஷ்மியின் ராக ஆலாபனை கானக்குயில்களின் ஆரவாரம்; மழைத்துளிகள் தந்த சந்தோஷம்; கலாபமயிலின் களி நடனம், கருவியின் கம்பீர ஓசை, அலைகளின் ஆர்ப்பரிப்பு, பசியாறிய ஏழையின் முகத்தில் ஏற்பட்ட நிறைவு அனைத்தையும் நினைவுபடுத்தியது" என்று பற்பல உவமானங்களால் இந்த இன்ப உணர்வை விளக்க ஓரளவு முயற்சித்தார். அமரர் கல்கிக்கே அந்த நிலை! சொற்களால் விவரிக்க முடியாத நிலை!

'அந்த இசையரசிக்கே உரிய பாணி, பாடாந்தரம், எந்தக் கீர்த்தனையை எந்தக் காலப் பிரமாணத்தில் பாடவேண்டும், எந்த இடத்திற்கு எப்படி கார்வை தர வேண்டும், எந்த வரிக்கு எப்படிப்பட்ட சங்கதிகள் சோபை தரும், தன் குரலின் அழகை எங்கு வெளிப்படுத்தலாம், வல்லின, மெல்லின ஏற்ற இறக்கங்கள், எப்படி வார்த்தைகளைப் பிரித்தால் சாஹித்ய பாவம் கெடாமல் பாடலாம், எங்கு நிறுத்தி எங்கு மூச்சுப் பிடித்துப் பாடினால் சிரமப்படாமல் பாடலாம், எந்த இடத்தில் மிக நீண்ட கார்வை தந்து தன் குரலின் வளமையினை, நாபியில் இருந்து வெளிப்படும் நாதத்தின் மகிமையைக் காட்டலாம், எந்த ராகத்தைச் சுருக்கமாக, எந்த ராகத்தை விரிவாகப் பாடினால் கச்சேரி சோபிக்கும், ஒரு Slow tempo பாட்டு, ஒரு Fast tempo பாட்டு என்று நிரவிப் பாடினால் கடைசி வரை களைகட்ட வைக்கலாம், எப்படி பக்கவாத்தியக்காரர்களை அனுசரணையாகவும், கசரத் வாங்கியும் சுறுசுறுப்பாக கச்சேரியை நடத்திச் செல்லலாம், வந்தது வராமல் ஸ்வர மழை எப்படிப் பொழியலாம் ஆகியவைகளைப் பற்றியெல்லாம் எம்.எஸ். அவர்களை வைத்து விளக்க உரை எழுத வைத்தால், அது என்ஸைக்ளோபீடியாவின் பக்கங்களை மிஞ்சும்' என்பார்கள் இசை விமர்சகர்கள்.

எட்டயபுரத்தில் பாரதியாருக்கு மணிமண்டபம் அமைக்கப்பட்ட விழாவில் ராஜாஜி பேசும்போது, "எம்.எஸ். சுப்பு லட்சுமியின் குரல் இனிமை எனக்கு இருந்து, என்னிடம் இருப்பதாக நீங்கள் கருதும் சில நல்ல குணங்களும் உண்மையிலேயே இருக்குமானால், நான் இந்த உலகத்தையே ஆளுவேன்!" என்றார்.

சர்தார் படேல், ராஜன்பாபு, டாக்டர் ராதாகிருஷ்ணன், டி.கே.சி. - இப்படிப் பலரைத் தன் இசையால் கவர்ந்தவர் எம்.எஸ். உலகப் புகழ் பெற்ற ஹெலன் கெல்லர் அம்மையார் எம்.எஸ்.ஸின் இசையில் நெகிழ்ந்து அவரைப் பலவாறாகப் பாராட்டினார்.

1963-ல் எடின்பரோ சர்வதேசக்

கலைவிழாவில் கச்சேரிகள் செய்தார். பல ஐரோப்பிய நாடுகளிலும் இசை மழை பொழிந்தார்.

கர்நாடக சங்கீத தீபத்தைத் தமிழகத்தின் லட்சோபலட்சம் வீடுகளில் ஏற்றி வைத்த பெருமை எம்.எஸ். அவர்களுக்கே உரியது. 1966 அக்டோபர் 23-ம் தேதி எம்.எஸ்.

■ மீராவில்...



அவர்கள் ஐ.நா. சபையில் கச்சேரி செய்தார். இந்தப்புகழ் இன்று வரை எம்.எஸ். ஒருவருக்குத் தான் கிடைத்திருக்கிறது.

காஞ்சி பரமாச்சாரியார் பிரத்தியேகமாக எழுதித் தந்த சமஸ்கிருதப் பாடலையும், ராஜாஜி எழுதித் தந்த ஆங்கிலப் பாடலையும் ஐ.நா. சபை கச்சேரியில் பாடினார் எம்.எஸ்.

ராஜாஜி எழுதி அளித்த -

May the Lord forgive our sins

And gather all the nations

Here under this uniting Roof

To Give up hate and fear

And learn to understand

Here under this uniting Roof...

May the Lord forgive our sins

Inspiring us to Peace on Earth

Here under this uniting Roof."

என்று தொடங்கும் ஆங்கிலப் பாடலைப் பாடி எங்கும் சாந்தி நிலவ பிரார்த்தனை செய்தார்.

காஞ்சி பரமாச்சார்ய ஸ்வாமிகள் 'மைத்ரீம் பஜத' என்ற ஸ்லோகத்தினை எம்.எஸ்.ஸுக்காக பிரத்தியேகமாக எழுதிக் கொடுத்தார்.

அப்போது அமெரிக்காவின் நியூயார்க், வாஷிங்டன், பிலடெல்பியா, கலிபோர்னியா, ஹாமில்டன்,



ஸிரகாஸ், சான்பிரான்சிஸ்கோ, சிகாகோ, லாஸ் ஏஞ்சல்ஸ் முதலிய நகரங்களில் எம்.எஸ்.ஸின் இசை வெள்ளம் பல லட்சம் ரசிகர்களை ஆனந்தக் களிப்பில் ஆழ்த்தியது. அமெரிக்காவில் கிடைத்த பெரும் தொகையை அப்படியே, அங்கே நிர் மாணிக்கப்பட்டிருக்கும் பிள்ளையார் கோயிலுக்கும், சங்கீத கலாசாலை களுக்கும், சங்கீத மேம்பாட்டிற்கும் தமது நிதியாக அர்ப்பணித்தனர் சதாசிவம் தம்பதியினர்.

திருப்பதி ஏழுமலையானுக்கு சுப்ரபாதம் பாடி, அதன் மூலம் வரும் ராயல்டி தொகையை அப்படியே திருப்பதி தேவஸ்தானம் நடத்தி வரும் வேதபாடசாலைக்கு அளித்தார்.

1956-ல் எம்.எஸ்.ஸுக்கு ஜனாதி பதி பரிசு வழங்கப்பட்டது. அதே போல், சென்னை மியூசிக் அகாடமியில் 'சங்கீத கலாநிதி' விருது பெற்ற முதல் பெண் கலைஞர் இவர்தான். இவருக்குப் பிறகுதான் பாலசரஸ்வதி, டி.கே.பட்டம்மாள், எம்.எல்.வசந்தகுமாரி போன்றோருக்கு அந்த விருது கிட்டியது.

கல்கத்தாவின் ரவீந்திர பாரதி, திருப்பதி பல்கலைக் கழகம், மற்றும் சென்னைப் பல்கலைக் கழகம் ஆகியவை இவருக்கு கவுரவ டாக்டர் பட்டம் கொடுத்துள்ளன.

ஒரிசா அரசின் 'கொனாரக் சன்மான்', மத்திய பிரதேச அரசின் உயரிய விருதான காளிதாஸ் சன்மான், பத்ம விபூஷண், மற்றும் இந்திய அரசின் உயரிய விருதான பாரத ரத்னா போன்ற பல்வேறு விருது களால் பெருமைப்படுத்தப்பட்டார் எம்.எஸ்.

ஆனால், விருதுகளுக்கும் விமர்ச

னங்களுக்கும் அப்பாற்பட்ட தெய்வீக மான சங்கீதம் எம்.எஸ். அவர்களு டையது!

ராஜாஜி, டி.கே.சி., கல்கி, ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார், ஆர்.கே.சண்முகம் செட்டியார் போன்றோர் ஆரம்பித்த 'தமிழ் இசை' இயக்கத்திற்கு ஒரு மாபெரும் தூணாகத் துணை நின்று ஒத்துழைத்

'வண்டாடும் சோலை தனில் வந்து எனதுள்ளம் கொள்ளை கொண் டான் சகியே' 'மாலைப் பொழுதி னிலே ஒருநாள்', 'நின்னருள் இயம்ப லாகுமோ' 'நாராயண திவ்ய நாமம் நான்மறைகள் போற்றும்' 'ஒளி படைத்த கண்ணினாய் வா, வா' 'நெஞ்சுக்கு நீதியும் தோளுக்கு வாளும்' -இப்படி எண்ணற்ற தமிழ் கீதங்களை தேனில் தோய்த்தெடுத்துக் கொடுத்



■ டி.கே.பி., ராதா, எம்.எஸ். ஜெயலட்சுமி, ஜானகி, எல்.ஆர். ஈஸ்வரி, வாணி ஜெயராம்

தனர் சதாசிவம் தம்பதியினர்.

'அருள்புரிவாய் கருணைக் கடலே...', 'வானத்தின் மீது மயிலாடக் கண்டேன்; மயில் குயிலாச்சுதடி...', தார் எம்.எஸ். தமிழ் இசைச் சங்கம் இவருக்கு 'இசைப்பேரறிஞர்' பட்டம் அளித்து மகிழ்ந்தது.

(பாடுவார்)

பூண்டு உடலில் கொழுப்பைக் குறைக்கிறது. உணவைச் செரிக்க உதவுகிறது. மற்றும் உடலுக்கு வலிமை ஊட்டுகிறது.

நீண்ட ஆயுளும், குறைந்த உணவும்

அமெரிக்காவில் லிடில் ராக் தேசிய ஆய்வுக் கூடத்தில் உணவு முறையும், ஆயுட்காலமும் பற்றி ஓர் ஆராய்ச்சி நடைபெற்றது. இது முதுமையைத் தள்ளிப் போட வழி காண முயலும் ஆராய்ச்சியாளர்களுக்கு மிக்க மகிழ்ச்சியைக் கொடுத்துள்ளது. இந்த ஆராய்ச்சிக்கு எலிகளைப் பயன்படுத்தினார்கள். எலிகளை இரண்டு பிரிவுகளாகப் பிரித்துக் கொண்டார்கள். முதல் பிரிவிற்கு வயிறு நிரம்ப கொடுக்காமல் குறைவான 40 சதவிகிதம் கலோரிச் சத்து உள்ள உணவை மட்டுமே கொடுத்தனர். வயிறு முட்ட உணவு கொடுத்த எலிகள் இயல்பாக 30 மாதங்களில் இறந்து விட்டன!

இது என்ன வியப்பு! வயிறு குறைவாக உண்ட எலிகள் 60 மாதங்கள் வரை வாழ்ந்தன. அது மட்டுமல்ல; வலிமையாகவும் விளங்கின. உணர்ச்சிகளும் நோய் எதிர்ப்பு திறனும் (immune system) துல்லியமாய் வேலை செய்தன. இச்சோதனை எங்களைத் திகைப்பில் ஆழ்த்தியது என்கிறார் இச்சோதனைக் கூடத்தின் டைரக்டர் ரனால்ட் ஹார்ட்.

நெடுநாள்கள் உயிர்வாழ வேண்டுமானால் மூப்புத்தன்மையின் வேகத்தைக் குறைக்க வேண்டும். அதற்கு உடலின் வெப்பத்தை மிகுதியாய்க் குறைக்க வேண்டும். நோய்க் கிருமிகள் உடலில் சேராமல் பார்த்துக் கொள்ள வேண்டும். குறைந்த அளவு கலோரி உணவை உண்டாலே மேற்கூறியவை கைகூடும் எனும் உண்மை தெரிய வந்துள்ளது என்கிறார் அவர்.

குறைவான கலோரியை எப்படிக் கண்டறிவது?

நமது உணவில் கலோரி சக்தியை ஒவ்வொன்றையும் மனதில் கொண்டு உண்பது என்பது நடைமுறையில் இயலாத காரியம். அதற்கு ஒரே வழி முதுமையில் வயிறு முட்ட உண்ணக் கூடாது. முக்கால் வயிறு சாப்பிட்ட உடனே கைகழுவ வேண்டும். முடிந்தால் வாரத்திற்கு ஒன்று அல்லது இரண்டு முறை விரதம் (Fasting) இருப்பது நல்லது. இந்த எளிய முறையைத் தொடர்ந்து கடைப்பிடித்தால் ஆரோக்கியமான முதுமை இயல்பாக அமையும் என்பதில் சந்தேகமில்லை!

முதுமையை வெல்வோம்!

சமீபத்தில் முதுமையைத் தள்ளிப் போட மற்றும் முதுமையில் தோன்றும் நோய்களிடமிருந்து விடுபட ஆராய்ச்சி நடைபெற்றது. அதாவது, நம் உடம்பில் திசுக்கள் வேலை செய்யும்போது அதிலிருந்து Free radicals என்ற திரவம் சுரக்கிறது. இது உடம்பிலிருந்து உடனே அகற்றப்படா

(தொடர்ச்சி 95-ம் பக்கம்)

டிருந்தார். பிரபுலிங்க லீலையிலிருந்து சில அழகுக் காட்சிகளை வாரியார் சுவாமிகள் அற்புதமாக விளக்கிக் கொண்டிருந்தார். அந்தச் சமயத்தில் அன்பர் ஒருவர் வாரியாருக்கு ஒரு குவளையில் ஏதோ கொண்டு வந்து கொடுத்தார்.

வாரியார் அதைக் கவனித்தார். உடனே அவர் "இது காப்பி. ஆனால் நான் சொல்வதோ அசல்" என்றார்.

அவருக்கு அருகே அமர்ந்திருந்த சிலம்புச் செல்வர் ம.பொ.சி. "இது காப்பி அல்ல பால்" என்று விளக்கினார்.

உடனே வாரியார் "நான் முப்பாலும் கடந்து அப்பால் இருக்கிறேன். இதோ இப்பாலும் வந்து விட்டது" என்று கூறி முடித்தார்.

அதைக்கேட்டு கூட்டத்திலிருந்து மக்கள் மகிழ்ச்சி ஆரவாரம் செய்தனர்.

ப. சந்திரஜோதி

ஆர்.சி. சம்பத்

# இசையரசி எம்.எஸ்.



திருமதி எம்.எஸ். அவர்களின் மீது தமிழ்நாட்டு மக்களுக்கு அன்பும் அபாரமான மதிப்பீடும் உள்ளதற்கு என்ன காரணம்? அவரது இசை மட்டுமா? துன்பத்தில் உழலும் மக்களுக்கும் அவர்கள் துயர்துடைக்க பணியாற்றும் தொண்டு நிறுவனங்களுக்கும் தனது இசைப்பணியினால் அவர் ஆற்றிவரும் தன்னலமற்ற தொண்டுதான்.

மக்களிடையே பக்தி உணர்வும் ஆன்மிகச் சிந்தனையும் சுடர்விட்டுப் பிரகாசிக்கவும், உயர் நன்நெறிகள் அவர்கள் உள்ளத்தில் வளரவும் அவர் தனது இசைப்புலமையை தொடர்ந்து பயன்படுத்தி வருகிறார்.

4

"பணம் தேவைதான். எதிர்கால வாழ்க்கைக்கு நம்பிக்கை தரும் அளவுக்குச் சேமிப்பும் அவசியம்தான். ஆனால், தேவைக்கும் அதிகமாகப் பல மடங்கு சேர்த்து வைப்பது தேவையில்லை. தன்னால் முடிந்த அளவு வறியவர்களுக்குக் கொடுத்துதவும் பண்பு வளரவேண்டும்" என்பார் எம்.எஸ்.

அவர் சொன்ன ஒரு சம்பவம்:

அவருடைய அறுபதாவது பிறந்தநாள். அவர் எவ்வளவோ மறுத்தும் ஆசையாக அவரது பெண்கள் தங்க வளையல்களை அவருக்குப் பரிசளித்தார்கள்.

அன்று மாலை இந்திய-பாகிஸ்தான் போரையொட்டிய அவரது நிதிக் கச்சேரி.

அரங்கிலேயே நிதிவசூலும் செய்யப்பட்டது. அங்கிருந்த சதாசிவம் அவர்களிடம் வந்து நிதி கேட்டார்கள். அவர் ஒரு குறிப்பெழுதி எம்.எஸ்.ஸிற்கு அனுப்பினார்.

அதில், "காலையில் குழந்தைகள் போட்ட தங்க வளையல் களைக் கழற்றிக் கொடுத்துவிடு!" என்று எழுதியிருந்தது.

மேடையிலேயே எம்.எஸ். அவற்றைக் கழற்றிக் கொடுத்து விட்டார்.

இந்த தேசப்பற்றும், போதுமென்ற மனமும், புகழுக்கும் பணத்திற்கும் அடிமை யாகாத சமநிலை உணர்வும், எளிமையும் தான் எம்.எஸ். அவர்களின் நிலைத்த புகழுக்குக் காரணம்.

மா ஆனந்தமயீதேவி அவர்களின் அருளாசி, எம்.எஸ். அவர்களுக்கு மீராவின் பக்திப் பாடல்கள் பலவற்றைக் கற்பித்துத் தந்த பெரியவர் திலீப்குமார் ராயின் ஆசிர் வாதம், சேங்காலிபுரம் அனந்தராம தீட்சிதர், மூதறிஞர் ராஜாஜி, ரசிகமணி டி.கே.சி. போன்றவர்களிடம் கற்றுக் கொண்ட வாழ்க்கைப் பண்பு எல்லாம் தான் எம்.எஸ்.ஸின் புகழ் வாழ்க்கைக்கு புடமிட்டன.

பாபநாசம் சிவன் அந்நாளைய பிரபல

■ மீரா படத்தில்...





■ எம்.எஸ்.- தனது வளர்ப்பு மகள் ராதாவுடன்

மான சாகித்யகர்த்தா. தெய்வீகமான பல அற்புதப் பாடல்களைத் தந்தவர். திரைப்படங்கள் பலவற்றிற்குப் பாடல் களைப் புனைந்துள்ளார். திரையில் தியாகராஜ பாகவதர் பாடிய பெரும் பாலான பாடல்கள் இவர் இயற்றியது தான்.

ஒருமுறை ஒரு படத்தயாரிப்பாளர் சிவனிடம் பாடல் எழுதக்கேட்டார், தனது திரைப்படத்திற்காக. சிவனும் முழு ஈடுபாட்டுடன் லயித்து, ஒரு பாடல் எழுதிக்கொடுத்தார்.

பாடலைப் படித்துப்பார்த்த அந்தத் தயாரிப்பாளரோ, "பாடல் திருப்திகரமாக இல்லை" என்று சொல்லிவிட்டார். இதனால் மனம் இடிந்துபோனார் சிவன்.

நேரே சதாசிவத்திடம் வந்தார். நடந்ததை அவரிடம் சொன்னார்:

"எவ்வளவு அற்புதமான சாகித்யம் இது. அந்தத் தயாரிப்பாளருக்கு இதன் அருமை தெரியவில்லை. இதனால் இழப்பு அவருக்குத்தான் என்பதை அவர் உணரும்படி செய்கிறேன்" என்றார் சதாசிவம்.

அன்றே பக்கவாத்தியக்காரர்களை வரவழைத்தார். சிவனின் சாகித்யத் திற்கு மெட்டு போடப்பட்டது. தன் மனைவி எம்.எஸ்.ஸை அழைத்து அதைப் பாடச் செய்தார். உடனடி யாக அது இசைத்தட்டாக வெளி வந்து பிரபலமடைந்தது. அந்தப் பாடல்தான் அடானா ராகத்தில் அமைந்த 'நீ இரங்காயெனில் புகழேது.'

அந்தத் தயாரிப்பாளரும் தனது அவசர முடிவை எண்ணி வருந் தினார்.

பொதுவாக கோப உணர்ச்சியின் போதும், நாடகங்களில் ராஜபார்ட் தரிப்பவர் மேடையில் அறிமுகமாகும் போதும்தான் அடானா ராகத்தை இசைப்பது வழக்கம். ஆனால், அந்த மரபை மீறி, பக்தியால் உருகிப் பாடவும் அடானாவில் முடியும் என்பதை எம்.எஸ். இந்த 'நீ இரங்கா யெனில்' பாடலில் நிரூபித்துக்காட்டி னார். சிவன் அதைக் கேட்டு மனமுருகிப்போனார்.

சினிமாக் கலையின் மகத்தான சக்தியைப் புரிந்துகொண்ட சதாசிவம். எம்.எஸ்.ஸின் இசைத்திறனை சினிமா மூலம் மக்களிடம் கொண்டு செல்ல எண்ணினார்.

'எம்.எஸ்.ஸையே முக்கிய கதாப் பாத்திரத்தில் நடிக்க வைக்க வேண் டும்; அது சாதாரண பொழுது போக்குப் படமாக இல்லாமல், நல்ல கருத்தும், இறைபக்தியும் கொண்ட



■ 1966-ல் ஐ.நா. சபையில் கம்பீரக் கச்சேரி!

கதையாக இருக்க வேண்டும்' என்று முடிவு செய்தார்.

தன் நண்பர் கல்கியுடன் பல கதைகளை ஆலோசித்தார். எம்.எஸ்.ஸிடம் அந்தக் கதைகளைச் சொன்னபோது, 'மீரா' சரிதத்தையே எம்.எஸ். தேர்ந்தெடுத்தார்.

வாழ்க்கையின் சராசரி ஆசாபாசங்களுக்குத் தன்னை ஒப்புக்கொடுத்து விடாமல், எப்போதும் பக்தி வேள்வியில் தன்னை அர்ப்பணித்துக் கொண்டு, கண்ணனுக்காகவே காலமெல்லாம் கரைந்துருகிப் பாடி, இறுதியில் கண்ணனுடனேயே கலந்துவிட்ட, பரமபக்தையான மீராவின் வரலாறை எம்.எஸ். தேர்ந்தெடுத்ததில் வியப்பென்ன? அவரே அந்த 'மீரா' போல வாழ்பவர் தானே!

மீரா பிறந்து வளர்ந்து வாழ்ந்த ராஜஸ்தானத்து மண்ணிலேயே 'மீரா'வின் படப்பிடிப்பு 1944-ம் ஆண்டு தொடங்கப்பட்டது. ஜெய்ப்பூர், உதயபூர், சித்தூர், துவாரகை போன்ற இடங்களில் 'மீரா' படமாக்கப்பட்டது.

மீரா படத்தில் நடிக்க எம்.எஸ்., உதயபூர் வந்தபோது, ஏற்கெனவே எம்.எஸ்.ஸின் இசைப் புலமையைக் கேள்விப்பட்டிருந்த உதயபூர் மன்னர் மகாராணா தன் அரண்மனையில் எம்.எஸ்.ஸின் கச்சேரியைக் கேட்க விரும்பினார்.

எம்.எஸ்.ஸின் சிறப்பு இசை நிகழ்ச்சி மகாராணாவின் முன்பாக அவரது அரண்மனை தர்பார் மண்டபத்தில் நடைபெற்றது. கர்நாடக சங்கீதமும் இந்துஸ்தானி இசையுமாக எம்.எஸ். பொழிந்த கான மழையில் உருகிப் போனார் மகாராணா.

மீரா படத்தின் சில காட்சிகளுக்குத் தேவையான குதிரைகளையும் யானைகளையும் மகாராஜா கொடுத்துதவினார். "எம்.எஸ். அவர்கள் தர்பார் மண்டபத்தில் பாடிய கல்யாணி ராகத்திற்கு என்ன வேண்டுமானாலும் சன்மானமாகத் தரலாம்" என்றார் ராஜா.

'மீரா' படப்பிடிப்பின் போது எம்.எஸ்.ஸின் உயிருக்கே ஆபத்தாக முடிந்திருக்கக்கூடிய ஒரு விபத்து ஏற்பட்டது.

கதைப்படி, யமுனை நதியில் மூழ்கிய மீராவை அவர் பக்தியுடன் வணங்கிடும் கண்ணன் படகோட்டியாக வந்து காப்பாற்றுகிறான்.

இந்தக் காட்சியைப் படமாக்கியபோது, எந்தக் கண்ணன் அவரைக் காப்பாற்ற வந்தானோ, அந்தக் கண்ணனின் படகே எம்.எஸ்.ஸுக்கு ஆபத்தை ஏற்படுத்தியது.

தண்ணீருக்குள் மூழ்கிய மீரா, அதிலிருந்து மேலே தலையைத் தூக்கியபோது, அவரைக் காப்பாற்ற வந்த படகு அவர் தலை மீதே நேராக மோதிவிட்டது. முட்டிய வேகத்தில் அதிர்ச்சியில் சுயநினைவு இழந்து நீருக்குள் மூழ்கினார் எம்.எஸ். மூச்சுமுட்டியது. தண்ணீருக்குள்ளிருந்து வெளியே வர முடியவில்லை.

படப்பிடிப்புக் குழுவினர் விரைந்து சென்று, அவரைக் காப்பாற்றிக் கரைசேர்த்து, மயக்கம் தெளியச் செய்தனர்.

மீரா படம் வெளிவந்து எம்.எஸ்.ஸின் புகழை மேலும் உயர்த்தியது.

இந்தியா சுதந்திரம் பெற்றதும் - 1947ம் ஆண்டில் மகாத்மா காந்தியின் பிறந்த தினத்தை சிறப்பாகக் கொண்டாடவேண்டும் என்று தேசத்தலைவர்கள் விரும்பினார்கள்.

அன்றைய தினம் காந்தியடிகள் முன்னிலையில் நடைபெறப்போகும் பிரார்த்தனைக் கூட்டத்தில் எம்.எஸ். அவர்களும் கலந்து கொண்டு சில தெய்வீகப் பாடல்களைப் பாடினால், நிகழ்ச்சி சிறப்பாக இருக்கும் என்று கருதினார்கள்.

பிரார்த்தனைக் கூட்டத்தில் பாட வருமாறு எம்.எஸ்.ஸிற்கு அழைப்பும் வந்தது. ஆனால், அதை ஏற்றுக்கொண்டு டில்லி செல்லும் நிலையில் எம்.எஸ்.ஸின் குடும்பச் சூழ்நிலை அப்போது அமைந்திருக்கவில்லை. ஆனாலும் எம்.எஸ்.ஸைகொண்டு சில பஜன்களைப் பாடச் செய்து, பதிவாக்கி, டில்லிக்கு அனுப்பி வைத்தார் சதாசிவம்.

■ திருமணத்தின்போது.. (1940)



மகாத்மாவின் பிறந்த நாளான அக்டோபர் 2-ம் தேதியன்று, மகாத்மாவிற்கு பணிவிடைகள் புரிந்து வந்த திருமதி சுசேதா கிருபளானியிடமிருந்து சதாசிவத்திற்கு டெலிபோனில் ஒரு செய்தி வந்தது.

"'ஹரீ, தும ஹரோ ஜனகீ பீர்'' அதாவது 'மக்களின் துயர் துடைப்பாயா ஹரி?' என்று தொடங்கும் 'மீரா' பஜனை எம்.எஸ். அவர்கள் பாடி, தமது பிறந்தநாளன்று கேட்க காந்திஜி விரும்புகிறார்." -இதுதான் செய்தி.

மகாத்மாவின் கோரிக்கையைக் கேட்டு மனம் நெகிழ்ந்து போனார் எம்.எஸ். ஆனாலும் ஒரு சங்கடம். அண்ணலின் விருப்பத்தை நிறைவேற்ற முடியாத நிலை காரணம் - அவருக்கு அந்தப் பாடலே பாடமில்லை.

சதாசிவம் இதை சங்கடத்துடன் தெரிவித்து, இயலாமையைச் சொன்னார்.

அன்று மாலை காந்திஜி தரப்பிலிருந்து மறுபடியும் போன் வந்தது.

(பாடுவார்)

படம் உதவி: எஸ்.வி.ஜெயபாபு

■ கௌதம நீலாம்பரன்

# சரித்திரம்

## வணிகனின் பெயரில் ஏழை பிராமணன்

**நா**பன் என்கிற இளைஞன் ஒருவன் சூரத் நகரில் மிகப் பிரபலமாக இருந்தான். அவனிடம் மிக விலை உயர்ந்த வைரக்கற்கள் இருப்பதாக, வைர வணிகர்களிடையே பரவலாக பேச்சு இருந்தது. நாபன் வைர வியாபாரியல்ல; அவன் வைத்தியத் தொழில்தான் செய்துகொண்டிருந்தான். மூலிகை மருத்துவத்தில் அவன் மிகவும் ராசிக்காரன் என்று மக்களிடம் பெயரெடுத்திருந்தான்.

ஒரு மூலிகை வைத்தியனிடம் எப்படி விலை உயர்ந்த வைரக்கற்கள் இருக்கின்றன?

அதைப் பற்றியெல்லாம் யாரும் கவலைப் படவில்லை. அவன் பெரிய மாளிகையில் வசிக்கிறான். அவனிடம் ஏராளமான பணியாட்கள் இருக்கின்றனர். நாபன் எங்கும் ரதத்திலேதான் பயணிக்கிறான். விசேஷ தினங்களில், அவன் வீட்டிலே ஏழை பாழைகளுக்கு அன்னதானம் நிகழ்கிறது.

இத்தனைக்கும் நாபன் சூரத் நகருக்குப் பிழைக்க வந்து ஒருசில வருடங்கள்தான் இருக்கும். எப்படி இவ்வளவு பெரிய முன்னேற்றத்தை அவன் அடைந்தான் என்பது பலருக்கும்

"பால்காரர் பையனுக்குக் கல்யாணமாம்..."

"பொண்ணு எந்த ஊராம்...?"

"குற்றாலமாம்...!"

- எம். அருள்மூர்த்தி

களை நிராகரித்தாள். உண்மை நளனின் அகன்ற தோள்களில் தன் கையிலிருந்த மலர்மாலையைச் சூட்டினாள். மக்கள் வெள்ளம் 'ராணி தமயந்தி வாழ்க!' என உற்சாகமாய்க் குரல் கொடுத்தது. வானுலகம் மலர் தூவி ஆசீர்வதித்தது. தேவர்கள் மறுகணம் சுய உருப் பெற்று முறுவலுடன் நின்றார்கள். நளனும் தமயந்தியும் தேவர்களை நமஸ்கரித்து ஆசி வேண்டினார்கள். இந்திரன் மனநிறைவோடு ஆசீர்வதித்தான்.

'பெண்ணே! இந்த நள மகாராஜன், உன் தளராத காதலினால் உனக்குக் கிடைத்த பரிசாவான். நளனே! கொடுத்த வாக்கைக் காப்பாற்றக் காதலையும் துறக்க நீ சித்தமாயிருந்தாய்! அந்த தர்மநெறிக்குக் கிடைத்த பரிசே இந்த தமயந்தி. உங்கள் இருவரின் நல்லியல்புகளால் மனம் மகிழ்ந்தோம்.'

மனப்பூர்வமாக அவர்களை வாழ்த்திய தேவர்கள் தங்கள் மகிழ்ச்சியின் அடையாளமாக நளனுக்குச் சில வரங்களையும் அருளினார்கள். நெருப்பில்லாமலே சமைக்கும் ஆற்றல், தேவைப்படும் போதெல்லாம் தானே தண்ணீர் கிட்டும் வாய்ப்பு, நீடித்த ஆயுள் என இன்னும் அவர்கள் வழங்கிய பல வரங்களையெல்லாம் திருமணப் பரிசாகப் பெற்று மகிழ்ந்தான் நளன். பின் தமயந்தியிடம் சொன்னான் இந்திரன்:

'பெண்ணே! நளனுக்கு நாங்கள் வழங்கியுள்ள இந்த வரமெல்லாம் உன் பொருட்டாகவே. பல நளன்களில் நிஜ நளன் யாரென இன்று நீ கண்டுணர்ந்தாய். பின்னாளில் நளனைப் பார்த்தே அவன் நளன்தானா என நீ ஐயுறும் காலமும் வரலாம். அப்போது நாங்கள் வழங்கியுள்ள வரங்கள் அவனை அவனா என நீ உறுதிப்படுத்திக்கொள்ள உதவும்! சீக்ரமேவ சந்தான ப்ராப்திரஸ்து! விரைவில் மக்கட் பேறு உண்டாகக் கடவதாக!'

தேவர்கள் நால்வரும் விடைபெற்று விண்ணில் செல்லலானார்கள். அன்னம் தான் சேர்த்துவைத்த ஜோடியை அருகில் பார்க்கவென மக்கள் வெள்ளத்தினிடையே நீந்திப் பறந்து அவர்கள் சமீபத்தில் வந்தது. தமயந்தி மகிழ்ச்சி தாங்காமல் அதன் கழுத்தைக் கட்டிக் கொண்டாள். அன்னத்தின் இறக்கைகளைத் தடவிக் கொடுத்த நளன் கேட்டான்: 'அன்னமே! தேவர்களெல்லாம் திருமணப் பரிசு தந்துவிட்டார்கள். ஓர் அன்னப் பறவை தான் மட்டுமே தர முடிந்த விந்தையான பரிசை எனக்குத் தரப் போவதாகச் சொல்லிற்றே! எங்கே அது?'

'அப்படியா? அது என்ன பரிசோ?' ஆவலுடன் கேட்டாள் தமயந்தி. அன்னம் சிரித்தவாறே சொல்லிற்று:

'திருமணச் சடங்குகள் முடிந்ததும் இப்போதே நீங்கள் இருவரும் நிடத நாடு செல்ல வேண்டுமாம். அதற்கான ஏற்பாடுகள் நடந்துகொண்டிருக்கின்றன. என் ராணி தமயந்தி புகுந்தவீடு சென்று மணவாழ்வைத் தொடங்குவதற்குள் நான் அங்கு சென்று விடுவேன். நீங்கள் இருவரும் நிடதநாடு வரும்போது என் திருமணப் பரிசும் நள மகாராஜன் அரண்மனைக்கு வந்துசேரும்!' சொல்லிவிட்டு விண்ணில் பறந்தது அன்னம்.

(நலம் பெருகும்)

# இசையரசி எம்.எஸ்.

■ ஆர்.சி. சம்பத்

காந்தியடிகளிடமிருந்து எம்.எஸ். ஸிற்கு மறுபடியும் வந்த போனில் சொல்லப்பட்ட செய்தி: "மீரா பாடிய 'ஹரீ, தும ஹரோ ஜனகீ பீர்' பாடலை மெட்டமைத்து எம்.எஸ். அவர்கள் பாடாவிட்டாலும் பரவா யில்லை... அப்பாடலை வசனமாகப் பேசிப் பதிவு செய்து அனுப்பினால் கூடப் போதும். அதையே காந்திஜி கேட்க விரும்புகிறார்!" என்று சுசேதா கிருபளானி தெரிவித்தார்.

எம்.எஸ்.குரலிலும், பக்திரசம் மிக்க பாவபூர்வமான இசையிலும், மகாத்மா கொண்டிருந்த ஈடுபாடு, சதாசிவம் தம்பதியை நெக்குருகச் செய்தது.

மகாத்மாவின் விருப்பத்தை எப்படியேனும் நிறைவேற்றி விடுவது என்ற முடிவுக்கு வந்தனர் சதாசிவம் தம்பதியினர்.

இசைக்கலைஞர் உடனடியாக வரவழைக்கப்பட்டு 'ஹரீ தும ஹரோ' பாடலுக்கு மெட்டமைக்கப்பட்டது. எம்.எஸ். அந்த மெட்டில் பாடலைப் பாடிப்பாடி ஒத்திகை செய்துகொண் டார். அதற்குள் நள்ளிரவாகி விட் டது.'

இப்போதுபோல 'கேசட்' எனப் படும் ஒலிப்பதிவு நாடாக்கள் அப் போது புழக்கத்திற்கு வரவில்லை. வானொலி நிலையங்களில் மட்டுமே அந்த வசதி இருந்தது.

நள்ளிரவுக்கு மேல் எம்.எஸ். அவர்கள் பாட, இந்த மீரா பஜன் சென்னை வானொலி நிலையத்தில் பதிவாக்கப்பட்டு, மறுநாள் காலை

டில்லிக்கு விமானம் மூலம் அனுப்பப்பட்டது.

அன்று மாலை டில்லியில் நடந்த பிரார்த் தனைக் கூட்டத்தில் எம்.எஸ்.ஸின் மீரா பஜன் பாடலைக் கேட்டு மகாத்மா மெய்மறந்து போனார். பிரார்த்தனைக் கூட்டத்திற்கு வந்திருந்த அத்தனை பேரும் அந்த நாத வெள்ளத்தில் கரைந்தனர்.

மீரா வடஇந்தியாவில் வாழ்ந்த கிருஷ்ண பக்தை. அதனால் தென்னிந்தியாவை விட வடஇந்தியாவில்தான் மீராவிற்குப் புகழ் அதிகம். எனவே 'மீரா' படத்தை இந்தி மொழியிலும் வெளியிட்டால் எம்.எஸ்.ஸின் இசைப்புகழ் இந்தியா முழுவதும் பரவும் என்று நினைத்தார் சதாசிவம்.

'மீரா'வை இந்தியிலும் வெளியிட்டார். சதாசிவத்தின் நம்பிக்கை பொய்க்கவில்லை.

இந்தி 'மீரா' திரையிடப்பட்ட இடங்களி லெல்லாம் 'ஓகோ' என்று ஓடியது. எம்.எஸ். இந்தியா முழுவதும் அறிமுகமான கலைஞராகி விட்டார்.

'மீரா' படத்தின் பிரத்யேகக் காட்சி ஒன்று டெல்லியில் ஏற்பாடு செய்யப்பட்டது.

அந்தக் காட்சிக்கு இந்தியாவின் வைஸ்ராயாக அப்போதிருந்த (1947, நவம்பர்) மவுண்ட்பேட்டன் பிரபு, தம் மனைவியுடன் வந்திருந்தார். பாரதப் பிரதமர் பண்டித நேருவும் வந்திருந்தார்.

படத்திற்கு அழைக்கப்பட்டிருந்த சிறப்பு விருந்தினர்களை நேருவே முன்னின்று வர வேற்றார். படம் முடிந்ததும் அவரே எல்லாரையும் வழியனுப்பி வைத்தார்.

தனியார் ஒருவருக்குச் சொந்தமான தியேட் டரில் வைஸ்ராய் படம் பார்ப்பது இல்லை என்ற மரபை மீறி, இந்தக் காட்சிக்கு மவுண்ட்பேட்டன் வந்திருந்தார் என்பது விசேஷச் செய்தி. மற்றும் பல அரசியல் தலைவர்களும் இப்படத்திற்கு வந்திருந்தார்கள்.





திரையில் படம் ஓடத்தொடங்கியது. கவியரசி சரோஜினிதேவி அவர்கள் திரையில் தோன்றிப் பேச ஆரம்பித்தார்.

''தென்னகத்தின் சுப்புலட்சுமியை வட இந்திய மக்களுக்கு அறிமுகம் செய்து வைப்பதில் பெருமைப்படுகிறேன். அவர் தமிழில் நடித்த மீராவை இப்போது இந்தியில் வழங்குகிறார். தென் இந்தியாவிலுள்ள ஒவ்வொரு குழந்தையும் எம்.எஸ். அவர்களின் இனிய குரலை அறியும். ஆனால் வடஇந்திய மக்களுக்கு இவை எல்லாம் இனிமேல்தான் தெரிய வேண்டும். நம் நாட்டின் ஒப்பற்ற கலைமாமணிகளில் அவரும் ஒருவர் என்பதை உணர்வீர்கள்.

இதை நான் இந்தியில் பேசாமல் இப்போது ஆங்கிலத்தில் பேசுகிறேன். ஏன் தெரியுமா? வட இந்தியாவுக்கு மட்டுமில்லாமல் உலகம் பூராவுக்குமே இது தெரியவேண்டும் என்பதற்காகத்தான்! கோடிக்கணக்கான மக்களின் நெஞ்சங்களை தமது உயர்ந்த கானத்தினால் இவர் எப்படிக் கவர்ந்திருக்கிறார் என்பதை உலகின் ஒவ்வொரு



வில்லை. இந்தத் தலைமுறையின் ஈடு இணையற்ற கலைஞராக அவர் விளங்குவதைக் கண்டு நீங்கள் எல்லாருமே பெருமைப்படுவீர்கள்.

-கவியரசியின் அறிமுக உரைக்குப் பின் படம் ஆரம்பமானது.

படம் முடிந்த போது எல்லோரும் உணர்ச்சி வசப்பட்டுப் போயிருந்தனர்.

படம் முடிந்து வெளியே வந்த போது, தேசபக்தர், சுதந்திர போராட்ட வீரர் சேலம் டி.விஜயராகவாச்சாரியார் சரோஜினிதேவியிடம், "ஆமாம், இந்தியாவின் வானம்பாடி என்ற உங்கள் பட்டத்தை இனி என்ன செய்யப் போகிறீர்கள்?" என்று கேட்டார்.

மூலையிலுள்ளவர்களும் அறிந்து கொள்ளவேண்டும் என்பதே என் விருப்பம். அவரது இசைத்திறமை பல உயர்ந்த நற்பணிகளுக்கு உதவியிருக்கின்றன என்பது பலருக்குத் தெரியாது. நான் இந்தி மீராவைப் பார்த்தேன். எம்.எஸ். அவர்கள் மீராவாக நடிக்கவில்லை. மீராவே நம்முன் எழுந்து வந்திருக்கிறாரோ என்ற பிரமையை உண்டாக்கி விடுகிறார். என்னால் அவரது திறமையைப் பாராட்ட வார்த்தைகள் கிடைக்க

''நான் எம்.எஸ்.அவர்களின் குரலை என்று கேட்டேனோ அன்றே அதைத்துறந்து, அவருக்கு மாற்றிவிட்டேனே'' என்று சொன்னார் சரோஜினி.

மீராவின் வெளியீட்டுக்காக டில்லி சென்றபோது சதாசிவம் தம்பதி மகாத்மா காந்தியைச் சந்தித்து ஆசிபெற்றனர்.

இந்து - முஸ்லிம் கலவரத்தினால்



காந்திஜி மனவேதனையுடன் இருந்த சமயம் அது. பிர்லா மாளிகையில் எம்.எஸ். அவர்களைப் பாடச்சொல்லி கேட்டு, மகாத்மா சிறிது மனஆறுதல் பெற்றார். அன்று மாலை நடைபெற்ற பிரார்த்தனைக் கூட்டத்திற்கு எம்.எஸ். சென்றிருந்தார். அவரைப் பார்த்த காந்தியடிகள், "ராம் தூன் காவோ" (ராமநாமத்தைப் பாடு) என்று கேட்டுக் கொண்டார். எம்.எஸ். அவர்களும் பக்திப்பரவசத்துடன் பாடினார்.

இந்தச் சம்பவம் நடந்து சுமார் நான்கு மாதங்களுக்குப்பிறகு, சென்னையிலுள்ள தமது இல்லத்தில் அமர்ந்து, ஒரு நாள் மாலை ரேடியோவில் திருவையாறு தியாகராஜ ஆராதனை உற்சவ நேரடி ஒலிபரப்பைக் கேட்டுக்கொண்டிருந்தார் எம்.எஸ்.

திடீரென்று நிகழ்ச்சி நிறுத்தப்பட்டு 'மிக முக்கிய அறிவிப்பு' என்று சொல்லி, ஒரு சோகக்குரல் 'மகாத்மா காந்தியடிகள் சுட்டுக் கொல்லப்பட்டார்' என்ற துயரச் செய்தியை அறிவித்தது.

இதை அடுத்து உடனே-'ஹரீ தும ஹரோ' என்று மீரா பஜன், எம்.எஸ். குரலில் ஒலிக்கத் தொடங்கியது.

அதைக் கேட்டு உணர்ச்சிவசப்பட்ட எம்.எஸ். அவர்கள் மூர்ச்சையாகித் தரையில் சாய்ந்தார். மூர்ச்சை தெளிய வெகு நேரமாயிற்று.

'ஹரி தும ஹரோ' பாடியபோது நடந்த சம்பவங்கள் அவர் நினைவுத் திரையில் வந்துவந்து மறைந்தது. அவரால் துக்கத்தை அடக்கமுடியவில்லை. கண்ணீர் விட்டு அழுதார்.

(பாடுவார்)

# நீரே பிரதானம்!

வாங்குகின்றோம். ஆனால், வத்தலக் குண்டில் மஞ்சளாற்றில் மழை காலத்தில் நீர் ஓடும். மற்ற சமயங் களில் மணலில் ஓடுகால் தோண்டி குளிப்பர். குடிப்பதற்கு ஆற்று நீரை வடிகட்டி எடுத்து செல்வர். இதற்கு பணம் செலவு ஆகாது. (இந்த ஆற்றில் அணை கட்டப்பட்ட தால் இப்பொழுது நீர் வரத்து இல்லை என்று கேள்விப்பட் டேன்) ஸ்ரீஇராஜாஜியின் கூற்றை சில தினங்கள் அசை போட்டு விட்டு மறந்துவிட்டேன். ஆனால், அதன் பாதிப்பு என் மூளையின் ஒரு பக்கத்தில் தேங்கி நின்றுவிட்டது.

பிற்காலத்தில் சென்னைக்கு வேலைக்கு வந்த பின்பு, குரோம் பேட்டையில் வசிக்கின்றேன். பாலாற் றிலிருந்து இந்தப் பகுதிக்கு குடிநீர் வழங்க திட்டம் தீட்டப்பட்டு நடுவில் இத்திட்டம் நின்றுவிட்டது. (இப் பொழுது இத்திட்டம் செயல்படு கிறது). திட்டம் நின்றுவிட்ட காலத் தில் ஒரு ஆண்டு மழை பொய்த்து குடிநீர் தட்டுப்பாடு ஏற்பட்டது. குடிநீர் விலைக்கு வாங்க வேண்டிய நிலை. நான் என் சம்பளத்தில் நீரை விலைக்கு வாங்க இயலவில்லை. வீட்டு கிணற்றில் 3 அல்லது 4 குடங்கள் நீர் கிடைக்கும். எதிர்த்த மைதானத்தில் உபயோகமற்ற பெரிய கிணறு சுற்றுசுவர் இல்லாமல் இருந்தது. அதில் வெகு சிரமத்துடன் என் குழந்தைகளையும் கூட்டிச் சென்று 3 அல்லது 4 வாளியில் தண்ணீர் இரைத்து வந்தேன். என் மனைவி இதைப் பார்த்து தண்ணீர் விலைக்கே வாங்கலாமென்றார் நான் ஒப்ப வில்லை.



பெற்ற பிள்ளை கைவிட்டாலும் பென்ஷன் பணம் கைவிடாது!

★

அறிவு சாதிக்காததை அனுபவம் சாதிக்கும்!

★

எண்ணெயை உணவில் குறைத்தால் ஈ.ஸி.ஜி எதற்கு?

★

ஐந்து மணிக்கு எழுபவனுக்கு ஐம்பது வயது சுமையல்ல

★

இருபதில் விதைத்தால் அறுபதில் அறுக்கலாம்!

## முதுமொழி!

இதற்கு மறுநாள் காலை என் சகோதரர் தன் குடும்பத்துடன் (அண்ணியார், 3 குழந்தைகள்) சென்னையில் 15 தினங்கள் தங்குவ தாக வந்துள்ளதாகச் சொன்னார். என் மனைவி உடனே பக்கத்து வீடுகளில் குடிநீர் விநியோகிக்கும் (விலைக்கு) நபர் வந்திருந்தால் பார்த்து, நீரை விலைக்கு கொடுக்க ஏற்பாடு செய்யச் சொன்னார். அந்தப் பொழுதில் ஸ்ரீஇராஜாஜி அவர்கள் சுமார் 40 வருடங்களுக்கு முன்பு "பாலை விட நீரே பிரதானம்" என்று சொல்லிய வார்த்தைகள் என் செவிப்பறையில் காற்றிலே கலந்துள்ள வேதமென ஒலித்தன.

-வெ. கணபதி, சென்னை-44.



சென்னைக்கு 1946-ம் ஆண்டு மகாத்மா காந்தி வருகை தந்து, இந்தி பிரச்சார சபாவில் தங்கி யிருந்தார். அப்போது ஒவ்வொரு நாள் மாலையிலும் பிரார்த்தனைக் கூட்டங்களை காந்திஜி நடத்து வார். ஏராளமான மக்கள் வந்து கலந்து கொண்டு, மகாத்மாவோடு பஜன் பாடல்களைப் பாடு வார்கள்.

காந்திஜி தனக்குப் பிடித்த மான 'வைஷ்ணவ ஜனதோ' பாடலை பிரார்த்தனைக் கூட்டத் தில் கலந்துகொண்டு எம்.எஸ். பாடவேண்டும் என்று விரும்பி னார்.

எம்.எஸ். அதைப் பெருமை யோடு ஏற்றுக்கொண்டு அண் ணல் விரும்பிய அந்தப் பாடலை நெஞ்சுருகப் பாடினார்.

எம்.எஸ். அவர்களின் இசை யில் ஜொலிக்கும் பக்திபூர்வத்தை மகாத்மா மனம் திறந்து பாராட்டி, 'நாதோபாசனை மூலம் எப்படிப் பட்ட காரியத்தையும் சாதித்து விடலாம்" என்று கூறி,. எம்.எஸ். ஸிற்கு ஆசி வழங்கினார். "பாடும் போது, பக்தியால் பரமனிடம் வயப்பட்டு மற்றவரையும் அவரைப்



போலவே பரமனிடம் லயிக்க வைத்து விடுகிறார் சுப்புலட்சுமி" என்பது அண்ணல் சொன்ன அருள்வாக்கு. அதனால்தான் அவர் எம்.எஸ்.ஸின் இசைக்குப் பக்தரானார்.

எம்.எஸ். மீது மகாத்மா வைத்திருந்த அன்பின் காரணமாகவோ என்னவோ, தெய்வச் செயலால் ஒரு காரியம் நிகழ்ந்தது. அதாவது, பம்பாயைச் சேர்ந்த தியாப்ஜி 1913-14-ம் ஆண்டுகளில் சென்னை உயர்நீதிமன்றத்தின் நீதிபதியாக இருந்தார். சென்னை கீழ்ப்பாக்கத்தில் அவருக்கு ஒரு பெரிய வீடு இருந்தது. தமிழ்நாட்டுக்கு காந்திஜி ஒருமுறை வந்திருந்தபோது தியாப்ஜியின் விருந்தினராக அந்த வீட்டில் பத்து தினங்கள் தங்கியிருந்தார்.

■ பத்மவிபூஷன் விருது... ஜனாதிபதி ஃபக்ருதீன் அலி அகமது வழங்குகிறார்...



அதே பங்களாவை பின்னர் சதாசிவம் வாங்கிக் குடியேறினார். ஆனால், அந்த வீட்டில் காந்திஜி தங்கியிருந்த விவரம் அப்போது சதாசிவத்திற்கோ எம்.எஸ்.ஸுக்கோ தெரியாது. பிறகு, மகாத்மா தங்கியிருந்த மாளிகையில்தான் இப்போது நாம் வாழ்கிறோம் என்ற உண்மை, தியாப்ஜியின் பேரன் மூலம் தெரிய வந்தபோது, எம்.எஸ். அவர்கள் அடைந்த ஆனந்தத்திற்கு அளவில்லை.

பாடகர்களுக்கு இணையாக பாடகிகள் பலர் உருவானபோதும், சமுதாயத்தில் ஆண்-பெண் என்ற பேதமும், ஆணைவிட பெண் சற்று குறைந்தவள்தான் என்கிற எண்ணமும் இருந்து வருகிறது. இசைத் துறையும் இதற்கு விதிவிலக்கல்ல.

சங்கீத மும்மூர்த்திகளில் ஒருவரான மகான் ஸ்ரீ தியாகராஜரின் சமாதி தஞ்சை அருகே திருவையாறில் இருக்கிறது. வருடம் தோறும் அங்கே ஆராதனையும் சங்கீத உற்சவமும் நடைபெறுகின்றன.

கர்நாடக இசையில் தேர்ச்சி கொண்ட கலைஞர்கள் மற்றும் வளர்ந்துவரும் பாடகர்கள் எல்லோரும் ஒன்றுசேர்ந்து அங்கே கூடி, தியாகராஜரின் பாடல்களை பக்திமேலிடப் பாடி, அஞ்சலி செலுத்துவது வழக்கம்.

ஆனால், ஆரம்பகாலத்தில் தியாகராஜரின் சமாதியில் பாட

பெண்களுக்கு உரிமை மறுக்கப்பட்டு வந்தது. ஆனால், பெரும் போராட்டம் நடத்தி, எதிர்ப்பைக் கடந்து, அங்கே தனது நாதோபாசனையை நடத்திக் காட்டினார், பெங்களூர் நாகரத்தினம் மாள். தனது ஆஸ்தி முழுவதையும் அந்த நாதபிரும்மத்தின் நற்பணிகளுக்கெனவே செலவிட்ட செம்மல் அவர்.



■ 'தனிப்பெரும் கலைஞர்' விருது (1980) முதல்வர் எம்.ஜி.ஆர். கரங்களால்...



■ "நானோ பிரதமர்... எம்.எஸ். இசையுலகின் பேரரசி..."

அந்த நாகரத்தினம்மாளுக்குப் பிறகு 1964-ல் மற்றொரு 'நாத'ரத்தினம் அங்கே பாடினார். அவர்தான் எம்.எஸ்.

இன்றும் எத்தனையோ பாடகிகள் தியாகராஜரின் ஆராதனை விழாவில் பக்தி செலுத்திப் பாடுகிறார்கள் என்றால், அதற்கு பாதையமைத்த முன்னோடிகள் நாகரத்தினம் அம்மாளும், திருமதி எம்.எஸ். அவர்களும் தான். இதற்காக இசையுலகப் பெண்மணிகள் நன்றி சொல்ல வேண்டும்.

'விக்ரமாதித்ய விழா' என்ற பெயரில் பம்பாயில் ஆண்டுதோறும் ஒரு பெரிய இசைவிழா நடக்கும். 1943-ம் ஆண்டு அந்த விழாவில் பாட எம்.எஸ். அவர்களும் சென்றிருந்தார்.

நாட்டின் பல பகுதிகளிலிருந்தும் இசைமேதைகள் அந்த விழாவுக்கு அழைக்கப்படுவார்கள்.

இந்துஸ்தானி இசையில் புகழ் பெற்ற பாடகர்கள், இசைக்கலைஞர்கள் அவ்விழாவுக்கு வந்திருந்தனர். எம்.எஸ். பாட ஆரம்பித்தார். அவருக்கு மிகவும் கைவந்த சங்கராபரணத்தில் அவருக்கே உரிய பாணியில் பாடினார்.

அவர் பாடி முடித்ததுதான் தாமதம். அரங்கத்தில் பல இசை மேதைகளோடு அமர்ந்து, எம்.எஸ். அவர்கள் பாடுவதைக் கேட்டு வந்த பிரபல இந்துஸ்தானி இசைக் கலைஞர் பண்டிட் ஓம்கார்நாத், தம் இருக்கையை விட்டு எழுந்து,

மேடைக்குச் சென்று எம்.எஸ். அவர்களை வாழ்த்தினார்.

சபையின் நடுவில் இப்படி எழுந்து செல்கிறோமே, கச்சேரி இன்னும் முடியவில்லையே என்பதையெல்லாம் அவர் லட்சியம் செய்யவே இல்லை. "என்னை மெய்மறக்கச் செய்துவிட்டது உங்கள் உயர்ந்த கானம்" என்றார் அந்த இசைமேதை.

எம்.எஸ். அவர்களுக்கு வட இந்திய நகரங்களிலெல்லாம் கச்சேரிகளுக்கு அழைப்புவர - இந்த விழா வாய்ப்பை ஏற்படுத்தித் தந்தது. எம்.எஸ். தமது வடஇந்தியக் கச்சேரிகளில் மீரா பஜன், துளசிதாஸ், மகான் கபீர்தாஸ், குருநானக் போன்ற வடஇந்திய ஆன்மிக ஆசான்களின் பாடல்களையும் பாடியதால், வடநாட்டு ரசிகர்களின் பாராட்டுகளையும், இந்துஸ்தானி இசைமேதைகளின் வாழ்த்தையும் பெறமுடிந்தது. படே குலாம் அலிகான், ரோஷனாரா பேகம், பனாலால் கோஷ், அமீர்கான் போன்றோரின் பாராட்டுகளைப் பெற்றார் எம்.எஸ்.

தமிழிசை வளர்ச்சிக்காக எம்.எஸ். அவர்கள் பாடியளித்த பாடல்கள் பலப் பல.

அமரர் கல்கி இயற்றி, எம்.எஸ். பாடிய 'மாலைப் பொழுதினிலே ஒரு நாள்' என்ற பாடல் அந்நாளில் ரொம்பப் பிரபலம். எம்.எஸ். பாட வரும் கச்சேரிகளில் எல்லாம் அந்தப் பாடலைப் பாடும்படி ரசிகர்கள் அன்புவேண்டுகோள் விடுப்பது வாடிக்கை.

பெண் பார்க்க வரும் பிள்ளை வீட்டார், "பெண்ணுக்கு பாட வருமானால் 'மாலைப் பொழுதினிலே' பாடச் சொல்லுங்கள்" என்று கேட்குமளவுக்கு அது பிரசித்தம் பெற்றது.

1949-ம் ஆண்டு, தமிழ்ப்பாடசாலை ஒன்றின் நிதிக்காக, பாடுவதற்கு டில்லிக்கு வந்தார் எம்.எஸ். பிரதமர் நேரு கச்சேரிக்கு விருந்தினராக அழைக்கப்பட்டிருந்தார். எம்.எஸ். வழக்கம்போல கானமழை பொழிந்தார். நேரு தனது சிறப்புரையின்போது, "பொதுக்கூட்டங்களில் பேசிப் பழக்கப்பட்ட அனுபவம் எனக்கு

■ ஒரு விழாவில்...



நிறைய உண்டு. ஆனால், இப்போது எம்.எஸ். அவர்களின் இசையைப் பற்றிப் புகழ்ந்து பேச வார்த்தைகள் கிடைக்காமல் தடுமாறுகிறேன். கேட்போர் எல்லோரையும் வசப்படுத்தி விடும் அற்புத கானம் அவருடையது.

ஆம், நான் ஒரு சாதாரண பிரதம மந்திரி. அவரோ இசை உலகின் பேரரசி! பேரரசியின் முன் பிரதம மந்திரி எம்மாத்திரம்?" என்று மனம் திறந்து பாராட்டினார்.

■ தாய் சண்முகவடிவு

■ தந்தை சுப்பிரமணிய அய்யர்

புதுடில்லியில் கமலாநேரு மருத்துவமனை நிதிக் கச்சேரிக்காக 1953-ம் ஆண்டு தலைநகருக்கு வந்தார் எம்.எஸ். அப்போது சதாசிவம் தம்பதியினரைத் தமது சிறப்பு விருந்தினராகத் தமது இல்லத்திலேயே தங்கச் செய்து விட்டார் நேரு.

காலைச் சிற்றுண்டிக்காக அமர்ந்தாலும் சரி, பகலுணவுக்காகப் போய் உட்கார்ந்தாலும் சரி, ஒவ்வொன்றையும் கவனித்துப் பரிமாறச் சொல்வாராம் நேரு.

"சுப்புலட்சுமி, அது ரொம்ப சூடான சமாசாரம். உங்கள் தொண்டையைக் கட்டிவிடும்" என்றும், "சுப்புலட்சுமி, இது ரொம்பவும் குளிர்ச்சியான அயிட்டம். உங்கள் தொண்டைக்கு ஏற்றதல்ல. இது புளிப்பு. உங்கள் குரலைப் பாதித்து விடலாம்" என்றும், ஒவ்வொரு அயிட்டம் பரிமாறப்படும்போதும் எச்சரிக்கை செய்துகொண்டேயிருப்பாராம், பிரதமர்.

தந்தையைப் போலவே, மகள் இந்திராகாந்தியும் எம்.எஸ். அவர்களின் இசை மீது பெருமதிப்பு வைத்திருந்தார். இந்திரா பிரதமராகப் பதவியேற்றதும், ராணி மெய்யம்மை பள்ளியின் விடுதிக்கான அடிக்கல்நாட்டு விழாவில் பங்கேற்பதற்காக சென்னைக்கு வந்தார். அவ்விழாவில் எம்.எஸ். பிரார்த்தனை கீதம் பாடி முடித்ததும், இந்திரா தலைமை உரையாற்றினார். அப்போது, "நீங்கள் எல்லாரும் என் ஆசியைக் கோருகிறீர்கள். ஸ்ரீமதி சுப்புலட்சுமியின் பிரார்த்தனை மூலம் ஆசீர்வதிக்கப்பட்ட எந்தக் காரியமும் அது எங்கிருந்தாலும் நிச்சயமாக வெற்றி பெற்றே தீரும்" என்றார் இந்திரா.

புதுடில்லியில் எம்.எஸ். இசை நிகழ்ச்சி எப்போது நடந்தாலும், தனது அரசியல் வேலைகளிலிருந்து எப்படியோ நேரம் ஒதுக்கிக்கொண்டு, அவரது கச்சேரியைக் கேட்க பிரதமர் இந்திரா வந்துவிடுவார்.

(பாடுவார்)

வீட்டில் எல்லோரும் மருமகள் வந்த நேரம் பதவி வந்திருக்கிறது என்று என் மனைவியைப் புகழ்ந்தாகள். கல்யாண மேடையில், "நீ வந்த நேரம்தான் எனக்கு பதவி வந்திருக்கிறது என்று எல்லோரும் சொல்கிறார்கள் அம்மா" என்று சொன்னார் அப்பா. கல்யாணம் கீழ் திருப்பதியில் நடந்தது. எம்.ஜி.ஆர். கல்யாணத்துக்கு வந்து கல்யாண மேடையிலேயே அப்பாவை அரசவைக் கவிஞராகத் தேர்ந்தெடுத்திருக்கும் விஷயத்தைச் சொன்னார்.



■ தேவருடன்...

அப்பாவுக்கு மிகவும் பிடித்தமான விஷயங்கள் உணவு. மிகவும் விரும்பி விரும்பிச் சாப்பிடுவார். "பறப்பதில் ஏரோப்ளேனும், ஓடுவதில் ரயிலும் மட்டும்தான் நான் சாப்பிடாதது" என்று அப்பா சொல்லுவார். நாங்கள் எல்லாம் கல்யாணமாகி குழந்தைகள் பெற்ற பிறகும் சாப்பிடும்போது எங்களுக்கு ஊட்டிவிடுவார். அவருக்கு மிகவும் பிடித்த உணவுகளை, அவர் ஊட்டி நாங்கள் சாப்பிட வேண்டும் என்று அவருக்கு ஆசை. "நீங்கள் குழந்தைகள் பெற்றால் என்ன, இப்போதும் எனக்கு நீங்கள் குழந்தைகள்தான்பா" என்று சொல்லுவார். அப்புறம் பிடித்தது பட்டு வேஷ்டி, பட்டுச் சட்டை, துண்டு. அப்பாவுக்கு பிடிக்குமென்பதால் ஒவ்வொரு பொங்கல் அன்றும் அப்பாவுக்குப் பட்டு வேஷ்டி, சட்டை, துண்டு கொடுத்து அனுப்புவார் எம்.ஜி.ஆர். அப்புறம் அப்பாவுக்கு பிடித்தது பேச்சு. நண்பர்களுடன் உட்கார்ந்து மணிக்கணக்காகப் பேசுவார். இரவு வீட்டுக்கு வந்தபிறகும் தொலைபேசியில் பேசிக்கொண்டேயிருப்பார். எம்.ஜி.ஆர், கலைஞர், சிவாஜி, எம்.எஸ். விஸ்வநாதன்.... என்று... இரவு முழுவதும் தொலைபேசி மணி சத்தம் போட்டுக் கொண்டேயிருக்கும். இப்போது இரவில் தொலைபேசி மணி அடிக்காமல் சும்மாயிருப்பதைப் பார்க்கும்போதுதான் அப்பா நம்முடன் இல்லை என்பது தோன்றும். மற்றபடி அப்பா எப்போதும் எங்களுடனேயே இருக்கிறார்" - கூறிய காந்தி கண்ணதாசன், பையிலிருந்து கர்ச்சீப்பை வெளியில் எடுத்தார்.

■ இந்தோ- ரஷ்யா கலாசார கமிட்டியின் துணைத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட போது ரஷ்ய கவிஞர்களுடன்...



- தளவாய் சுந்தரம்

படம் : செந்தில்நாதன்

# இசையரசி

# எம்.எஸ்.

■ ஆர்.சி. சம்பத்

**எம்**.எஸ். நடித்த முதல் திரைப் படமான 'சேவாசதனம்' 1938-ம் ஆண்டு வெளிவந்தது. 'கோகிலகான எம்.எஸ்.சுப்புலட்சுமி' என்ற பெயருடன் அவரை விளம்பரப்படுத்தி இருந்தார்கள். இந்தப் படத்தில் அவர் பாடிய 'மா ரமணன், உமா ரமணன்' 'மலரடி பணிவோமே தினமே', ஓ ஜகஜ் ஜனனீ ஓங்கார ரூபிணி' போன்ற பாடல்கள் மிக விரைவில் பிரபலமாகி, பின்னர் இசைத் தட்டுகளாகவும் வெளிவந்தன.

எம்.எஸ். நடித்து அடுத்து வந்தது 'சகுந்தலை.' பிரபல கர்னாடக சங்கீத வித்வான் ஜி.என்.பி. என்றழைக்கப்படும் ஜி.என்.பாலசுப்ரமணியன் கதாநாயகன் துஷ்யந்தனாக நடிக்க, கதாநாயகி சகுந்தலையாக அவருடன் இணைந்து எம்.எஸ். நடித்தார்.

இப்படத்தில் 'எங்கும் நிறை நாத பிரம்மம், ஆனந்த மென் சொல்வேன்' போன்ற பாடல்களைத் தேனினும் இனிய குரலில் அமுதமாகப் பொழிந்திருந்தார் எம்.எஸ்.அவர்கள்.

**இ**சை உலகிலிருந்து சினிமா உலகிற்கு இவர் சென்றது எப்படி?

வங்காளத்தின் பிரபல நாவலாசிரியர் பிரேம்சந்த் எழுதிய நாவல் 'சேவாசதனம்'. இதைப் படமாக்கும் உரிமையைப் பெற்று அதற்கான முயற்சியில் இருந்தார் டைரக்டர் கே. சுப்ரமணியம். அந்நாளில் அவர் புகழ்பெற்ற டைரக்டர் - தயாரிப்பாளர்! சேவாசதனம் கதையில் வரும் கதாநாயகி சுமதி பாத்திரத்தில் நடிக்க பொருத்தமான நடிகையைத் தேடிக் கொண்டிருந்தார்.

சுப்ரமணியத்தின் படத்தில் ஏற்கெனவே நடித்திருந்தார் திருமதி. எஸ்.டி.சுப்புலட்சுமி. எம்.எஸ்.சுப்புலட்சுமி, எஸ்.டி.சுப்புலட்சுமி இருவரும் தோழிகள். தன் சிநேகிதியைப் பார்த்துப் பேச எம்.எஸ். அவரது வீட்டுக்குச் செல்வதுண்டு.

ஒருநாள் தற்செயலாக

எம்.எஸ்.ஸை., எஸ்.டி.சுப்பு லட்சுமி வீட்டில் பார்த்த டைரக்டர் கே.சுப்ரமணியம் 'சுமதி பாத்திரத்திற்குப் பொருத்தமானவர் எம்.எஸ். அவர்கள்தான்' என்ற முடிவுக்கு வந்தார். எம்.எஸ்.ஸிடம் அவர் சம்மதம் கேட்டபோது, தன் தாயார் சண்முகவடிவிடம் கேட்டுச் சொல்வதாகச் சொன்னார். பிறகு தாயின் சம்மதத்தோடு சேவாசதனத்தில் நடித்தார் எம்.எஸ்.

பாடும் கிருதிகளின் - பாடல்களின் - பொருளைப் புரிந்து கொண்டால்தான், அதில் மனம் லயித்து, பூரணமாக அனுபவித்துப் பாட முடியும்.

வெவ்வேறு மொழிகளில் சிறந்து விளங்கும் பாடல்களைப் பாட ஒருவர் முயற்சிக்கும் போது, அந்தந்த மொழிகளில் ஓரளவாவது பயிற்சி வேண்டும், எம்.எஸ். அவர்கள் தெலுங்கு, கன்னடம், இந்தி, சமஸ்கிருதம் போன்ற முக்கிய மொழிகளை கொஞ்சம் கொஞ்சமாகக் கற்றுக் கொண்டார். பாடல்களின் பொருளைப் புரிந்து கொண்டு பாடலானார்.

ஒருசமயம் பஞ்சாப் பல்கலைக்கழகத்தின் துணை வேந்தராக இருந்த ஒரு சீக்கியர், எம்.எஸ். பாடிய 'ஷாபத்'தைக் கேட்டுவிட்டு மெய் மறந்து, "எந்த ஒரு தென்னிந்தியரும் இவ்வளவு உச்சரிப்பு சுத்தமாகப் பாடி நான் இது வரை கேட்டதில்லை" என்று புகழாரம் சூட்டினார்.

வடமொழியில் அவர் சுலோகம் பாடும் நேர்த்தியைக் கண்டு, வடமொழி விற்பன்னரான அக்னிஹோத்ரம் தாத்தாசாரியார் அவர்கள், "வாழ்நாள் பூராவும் வேத அத்யயனம் செய்தவர்கள் கூட இவ்வளவு ஸ்பஷ்டமாக உச்சரிக்க முடியாது" என்று மனமாரப் பாராட்டி, எம்.எஸ். அவர்களை ஆசீர்வதித்தார்.

இந்திய நாட்டிலிருந்து ஐக்கிய நாடுகளின் சபைக்கு எம்.எஸ். அவர்கள் பாரத மாதாவின் கலைத் தூதுவராக, பிறந்த நாட்டின் பண் பாடும் மேதையாகச் சென்று வந்திருக்கிறார்.

அமெரிக்காவில் ஐ.நா.சபையில் பாடுவதற்கு முன்பாக லண்டனில் உள்ள எடின் பரோவில் நடந்த இசை விழாவில் கலந்து கொண்டு எம்.எஸ். பாடினார். இதுவே, அவர் மேற்கொண்ட முதல் மேல்நாட்டுப் பயணம். தாயகம் திரும்பிய எம்.எஸ். ஒரு சிகிச்சைக்காக டில்லி சென்றார்.



இதுபற்றி சதாசிவம் சொல்லும்போது, "எடின்பரோ ஃபெஸ்டிவலுக்குப் போய்த் திரும்பின பிறகு 1964-ஆம் வருஷம் மார்ச் மாதத்தில் என்னுடைய மனைவிக்கு டெல்லியில் ஓர் ஆபரேஷன் ஆயிற்று. அந்த ஆபரேஷனுக்கு நான்கு நாட்கள் முன்பாக நான், என் மனைவி, என் பெண்கள் எல்லோருமாக ஜவஹர்லால் நேருவைப் போய்ப் பார்த்தோம்.

நேருவுக்கு எப்போதும் எங்களிடத்தில் ரொம்ப அன்பு. என் மனைவியினுடைய பாட்டென்றால் அசாத்திய மோகம்.

'எடின்பரோ ஃபெஸ்டிவலில் போய்க் கலந்து கொண்டு நாட்டிற்குப் பெருமை தேடித் தந்தாய். எனக்கு ரொம்ப சந்தோஷம். எப்போது அமெரிக்காவுக்குப் போகப் போகிறாய்?' என்று கேட்டார்.

அப்பொழுது நான் சொன்னேன்:

"பண்டிட்ஜி! என் காதில் விழுந்த வரையில் அமெரிக்க ஜனங்களுக்கு நம்ம நாட்டு வாத்திய இசையில் மோகம் இருக்கிறதே தவிர, வாய்ப்பாட்டில் இருப்பதாகத் தெரியவில்லை."

உடனே அவர் சுப்புலட்சுமியைப் பார்த்து "அது உன் விஷயத்தில் பொருந்தாது!" என்று சொன்னார்.

அது எவ்வளவு உண்மை என்று இப்போது நாங்கள் கண்கூடாகப் பார்த்தோம். 'ஏழு வார காலத்தில் இருபத்திரண்டு கச்சேரிகளில் அந்த தேச ஜனங்களுடைய அன்பையெல்லாம் பெற்று வந்தோம். ஒரு வருஷ காலத்தில் நான் நம்முடைய தேசத்தில் கூட அவ்வளவு கச்சேரிகளை ஒப்புக் கொள்ள மாட்டேன். அதை குறுகிய காலத்திற்குள் எம்.எஸ். செய்தாள் என்றால் ஈஸ்வரனுடைய துணையும் அருளுமே காரணம்.' - என்றார் சதாசிவம்.

கல்கத்தாவின் ரவீந்திர பாரதி பல்கலைக் கழகம் திருமதி எம்.எஸ். அவர்களுக்கு டாக்டர் பட்டம் அளித்து கௌரவித்தது.



பிறகு டில்லி பல்கலைக் கழகமும் டைரக்டர் சத்யஜித்ரே, கமலாதேவி சட்டோபாத்யாயா போன்ற பல கலை மேதைகளுடன் எம்.எஸ். அவர்களுக்கும் டாக்டர் பட்டம் அளித்துச் சிறப்பித்தது. அதன்பின் திருப்பதி வெங்கடேசுவரா பல்கலைக் கழகமும் எம்.எஸ். அவர்களை டாக்டராக்கிப் பெருமை கொண்டது.

திருமதி ராதா கிருஷ்ணமூர்த்தி என்ற ஓர் இளம் பாடகி. பல பாடகிகளைப் போலவே திருமதி எம்.எஸ். அவர்களைத் தனது மானசீகக் குருவாக - ஏகலைவன் துரோணரை ஏற்றுக் கொண்டது போல பாடகி ராதாவும் ஏற்று, இசைப் பயிற்சியில் ஈடுபட்டு வந்தார்.

ஒருசமயம் ராதாகிருஷ்ணமூர்த்தி எம்.எஸ். ஸிற்கு ஒரு



கடிதம் எழுதின
ரது பாடல்கள்
றைத் தனக்கு
தந்து உதவும்ப
அவர் கேட்டிரு

"பதில் வரும
நம்பிக்கையே
இல்லை. இசை
அவருக்கு நேரம்
இருக்கும்போது,
பதில் எழுத அவ
கிருந்து நேரம்
போகிறது என்
தேன். இரண்
களில் நான் கே
பாடல்களை
எனக்கு அனுப்பி
என் மதிப்பில்
உயர்ந்து விட்டா
ஒரு பத்திரிகையி
யிருந்தார் ராதா
மூர்த்தி. ரா
போலவே பல
எம்.எஸ்.ஸின் ந
யும் ஆதரவையும்
ளனர்.

**பா**ரதியாரி
தமிழ் நாடெனு
லைப் பதிவாக்க
சென்றார். இசை
கூடத்தில் போ
ஒத்திகை பார்க்
பின் பாடல் ப
பட்டது.

எச்.எம்.வி.யி
பதிவாளராகப்
றிய ரகுநாதன் இ
களைப் பதிவு செ

"எம்.எஸ்.
'நான் தயார்!'
சொல்லி விட்டால்

மற்றபடி எதைப் பற்றியும் கவலைப்பட வேண்டாம். சில சமயம் பக்க வாத்தியக்காரர்கள் ஏதேனும் மிகச் சிறிய தவறு செய்து விட்டாலும் அவருக்கு அது தாங்காது. பெரிய தவறு நடந்து விட்டது போலவும், அதற்கு அவரே காரணம் போலவும் ஆதங்கப்படுவார்.

"அதனால் பாதகமில்லை; குறிப் பிட்ட தவறை மட்டும் சரிசெய்து கொள்ளலாம். அதற்கான வசதிகள் எல்லாம் இப்போதைய ஒலிப்பதிவுக் கருவிகளில் வந்துவிட்டது" என்று சொன்னாலும் கேட்க மாட்டார்.

அவரது நிலையில் இருக்கும் வேறு சிலர் இதை யெல்லாம் அவ்வளவாகப் பொருட்படுத்த மாட்டார் கள். எப்படியாவது அட் ஜஸ்ட் செய்து விடுவார்கள் என்றுதான் நினைப்பார்கள். ஆனால் எம்.எஸ்.ஸோ நூற் றுக்கு நூறு அவருக்குத் திருப்தி ஏற்படும் வரையில் எத்தனை தடவை வேண்டு மானாலும் பாடுவார்" என் கிறார் ரகுநாதன்.



திருமதி.எம்.எஸ்.ஸின் சென்னை கோட்டூர்புரம் வீட்டில், ஹாலில் நான்கு தம்புராக்கள் கம்பீரமாகக் காட்சியளிக்கின்றன. எம்.எஸ்.ஸின் அன்னையார் ஷண்முக வடிவு அவர் கள் வாசித்த வீணையும் அங்கிருக் கிறது.

ஹாலின் சுவர்ப்பகுதியில் காந்திஜி, விவேகானந்தர், ரமண மகரிஷி, அரவிந்தர், ராமகிருஷ்ண பரமஹம்சர், அன்னை சாரதா தேவி யார், சுவாமி சிவானந்தர், சாயிபாபா போன்றவர்களின் படங்கள். நேருஜி யுடன் எடுத்துக் கொண்ட புகைப் படமும், ராமர் பட்டாபிஷேகம், லட்சுமி, சரஸ்வதி, காமாட்சி அம்மன், விநாயகர், முருகன், வெங்கடாசலபதி போன்ற கடவுளர்களின் வண்ணப் படங்களும் அழகாக மாட்டப்பட்டுள் ளன. காஞ்சி ஆசாரிய சுவாமிகளின் படம் நடுநாயகமாக இடம் பெற் றுள்ளது. தினசரி பூஜை செய்கிறார். விரதங்களையும் அனுஷ்டிக்கிறார்.

அமெரிக்காவுக்கு எம்.எஸ். பாடச் சென்றபோது - கச்சேரி செய்ய வேண்டிய தினத்தன்று - திடீரென அவரது குரல் பழுதடைந்து விட்டது. குரல் எழும்பவில்லை.

அனுதினமும் அவர் போற்றி வணங்கும் காஞ்சி முனிவரை நினைத்து உள்ள முருகி பிரார்த்திக்க- அடுத்த சில மணி நேரங் களிலேயே அவரது குரல் பழைய நிலைமைக்கு வந்து விட்டது.

அன்றைய கச்சேரியும் அமோகமாக அமைந்தது. "வாழ்நாளில் நீங்கள் பெற் றுள்ளவற்றில் பெரும் சிறப்பு என்று எதை நினைக்கிறீர்கள்?" என்று கேட்டால், அதற்கு எம்.எஸ்.அவர்களின் பதில், "என்னைப் பாட வைப்பவர் ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி அவர்கள். அவர் பாட்டு வித்தால் நான் பாடுகிறேன். மகா சிவராத்திரி புண்ணிய காலத்தில் - அந்த தவ சிரோஷ்டரின் சன்னி தானத்தில்-அவர் பூஜை செய்யும் போது - அவர் திருமுன்னர் மூன்று ஜாமங்களிலும் பாடி-அவரது ஆசி யைப் பெற்று வந்ததையே எனக்குக் கிடைத்த பெரும் சிறப்பாகக் கருது கிறேன்!"

- (பாடுவார்...)

நிறைவேற்றப்பட்டது. யாராலும் அதைத் தடுக்க முடியவில்லை. இந்தக் கொடுமையைக் காண மனம் பொறா மல் குவைபூ ஓடிவந்து கதறினாள். ஹுவாங் தீயைப் பார்த்து அவள் ஆவேசத்துடன்,

"அறிவற்ற அரசனே, அரக்கனே! நீ சர்வநாசமாகத்தான் போகிறாய். அறிஞர்களின் சாபம் உன்னை அழிக்காமல் விடாது. உன் அதிகாரம் எதுவும் உன்னை சாஸ்வதமாக வாழச் செய்ய உதவாது. வெகு சீக்கிரமே உன்



சாவு நிச்சயம். உன் ராஜ்யம் அழி யட்டும், உன் ஆட்சி அஸ்தமிக் கட்டும். அதற்காகவே நான் பிராணத் தியாகம் செய்கிறேன்...'' என்று கூறியவாறே காதலன் எரிந்து கருகும் சுவடி நெருப்பில் தானும் பாய்ந்து எரிந்து சாம்பலானாள்.

ஹுவாங் தீ ஆடிப்போய்விட் டான். எரிநெருப்பில் அந்த இளம் பெண் ஆடிய கோரத்தாண்டவம் அவன் நெஞ்சை உலுக்கியது. அவ ளிட்ட சாபங்கள் அவன் புத்தியைக் குடைந்தன. அவனால் உண்ண முடியவில்லை, உறங்க முடியவில்லை. காதுகளில் அவளின் ஓலம்; கண்களை மூடினால் அவள் எரியும் காட்சி. சாவு வந்து தன் கழுத்தை நெரிப்பது போன்ற உணர்வில் அவன் தத்தளித் தான். அதன் விளைவுதான் இந்த ஆலோசனைக் கூட்டம்.

"எனக்கு உறக்கம் போய்விட்டது, நிம்மதி போய்விட்டது. நான் சாகா திருக்க ஒரு வழி சொல்லுங்கள்..." என்று அறிஞர்களிடம் புலம்பினான் ஹுவாய் தீ. கெஞ்சினான், மிரட்டி னான்.

நெருக்கடியான அந்தச் சூழலில், ஓர் அறிஞர் சமயோஜிதமாகச் சிந்தித்து, "மன்னா, சாவா மருந்து பற்றி நான் படித்திருக்கிறேன். ஆனால், சுவடிகள் அனைத்தும் எரிந்துவிட்டன. இருந்தாலும் என் யோசனை ஒன்றை நீ ஏற்றால், அந்த மருந்தை நான் உனக்குக் கொண்டு வந்து தருகிறேன்" என்றார்.

"இது நம்பிக்கை தரும் பேச்சு. எதுவானாலும் துணிந்து கூறுங்கள், நான் சம்மதிக்கிறேன்..."

"மகிழ்ச்சி மன்னா! கிழக்கில் நூறு யோசனை தூரம் கடல்தாண்டிப் பயணம்செய்ய வேண்டும். காடும் மலையும் கடந்தபின், மனித சஞ்சாரமே அற்ற பகுதி ஒன்றில் குறிப்பிட்ட சில வேளைகளில் சில துறவிகள் தென்படுவர். அவர்கள்தான் சாவா மருந்து, மூவா மருந்து செய்யும் வழிமுறைகளையும், அதற்கான மூலி கைகளையும் அறிவர் என்றும், மெதுவாகப் பழகி, அவர்கள் அன்பைப் பெற்றால் மட்டுமே கூறுவர் என்றும் நான் சுவடியில்

தொடர்ச்சி 95-ம் பக்கம்...

உருகவைக்கும் தொடர்




நேபாளத்தின் அரச தம்பதியினர் புதுடில்லியில் ஜனாதிபதி மாளிகையில் தங்கியிருந்த சமயம் எம்.எஸ். அவர்களின் இசை நிகழ்ச்சியைக் கேட்டார்கள். அரசரும் ராணியும் இவரது இசையில் அப்படியே தங்கள் மனதைப் பறிகொடுத்து விட்டார்கள்.

இதன்பிறகு ஒவ்வொரு ஆண்டும், நேபாளத்திற்கு வந்து கச்சேரி செய்யும்படி இவருக்கு அழைப்பு வந்து கொண்டே இருந்தது.

அண்டை நாடான இலங்கைக்குச் சென்று கச்சேரிகள்மூலம் நாற்பது லட்ச ரூபாய் நிதி திரட்டி, அவ்வளவு தொகையையும் அந்த நாட்டின் பல்வேறு தர்ம ஸ்தாபனங்களுக்கு நன்கொடையாக

# இசையரசி எம்.எஸ்.



அளித்துவிட்டுத் திரும்பினார் எம்.எஸ்.

பல வருடங்களுக்கு முன்பு நடந்த சம்பவம் இது: சென்னை, தேனாம்பேட்டை காங்கிரஸ் மைதானத்தில் அகில இந்திய காங்கிரஸ் பொருட்காட்சி ஏற்பாடு செய்யப்பட்டு நடைபெற்றுக் கொண்டிருந்தது. ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு கலை நிகழ்ச்சி. திருமதி எம்.எஸ். அவர்களின் இசைக் கச்சேரியும் ஒருநாள் ஏற்பாடு செய்யப்பட்டு, அதற்குக் கட்டணமாக இருபத்தைந்து காசு விதிக்கப்பட்டிருந்தது.

அன்றைய தினம் மட்டும் அவரது கச்சேரிக்கென ஆன வசூல்

■ ஆர்.சி. சம்பத்

எவ்வளவு தெரியுமா? ஐம்பதாயிரம் ரூபாய்! அப்படியானால் எவ்வளவு கூட்டம் வந்திருக்கும் என்று பார்த்துக் கொள்ளுங்கள்.

நமது இசை வளர்வது எப்படி? அதை வளர்ப்பது எப்படி? எம்.எஸ். அவர்கள் சங்கீத வித்வத் சபையில் (மியூசிக் அகாடமி) பேசியபோது சொன்னார்:

"கர்நாடக சங்கீதத்தின் முக்கிய அம்சமே பக்தி உணர்வு. ஸ்ரீ தியாகய்யர் அவர்கள் வாழ்நாள் பூராவும் ஸ்ரீராமனையே நினைத்துப் போற்றி உளமுருகப் பாடினார்.

கர்நாடக சங்கீதத்தின் தந்தை என்று சொல்லப்படும் ஸ்ரீ புரந்தர தாச சுவாமிகள் பெரும் வணிகராக இருந்தார். இறையுணர்வு அவரை ஆட்கொண்ட மாத்திரத்திலேயே தம் சொத்துக்களையெல்லாம் உதறித் தள்ளினார்.

ஸ்ரீ தியாகய்யர், ஸ்ரீ புரந்தரதாச சுவாமிகள் இருவருமே 'உஞ்சவிருத்தி' செய்துதான் வாழ்ந்தனர். அவர்களுக் கிருந்த ஆஸ்தியெல்லாம் தம்பூராவும், சப்ளாக் கட்டையும், உணவை வாங்க ஏந்திய சட்டியும்தான்! இவர்களது வழியைப் பின்பற்றி, அவர்கள் போதித்த நெறிகளைக் கடைப் பிடித்து, அவர்களது வாழ்வை அடியொற்றி நடக்க வேண்டியது தான் இன்றைய இசைக் கலைஞர் களாகிய நாம் அவர்களுக்குச் செய்யக்கூடிய கடமை.

பாரம்பரியப் பெருமை கொண்ட நமது இசையை வளர்ந்தோங்கச் செய்யும் புனிதப் பணியின் பொறுப்பை நமது தாய்மார்கள் ஏற்க வேண்டும் என்று கேட்டுக் கொள் கிறேன். வீடுகளிலெல்லாம் இசை முழங்க அவர்கள் வழி செய்ய வேண்டும்.

சிறுவயதிலிருந்தே நமது குழந்தை களுக்கு நமது இசையின் உயர்வையும் புனிதத்தையும் உணர்த்தி, சங்கீதத்தில்

**"பாரம்பரியப் பெருமை கொண்ட நமது இசையை வளர்ந்தோங்கச் செய்யும் புனிதப் பணியின் பொறுப்பை நமது தாய்மார்கள் ஏற்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்."**



பயிற்சி பெற வைக்க வேண்டும். இசையைக் கற்கவும், போதுமான பயிற்சி பெறவும் அவர்களுக்கு வழி வகைகளைச் செய்து தர வேண்டும். இதை நமது தாய்மார்கள்தாம் செய்ய முடியும்.

அவர்கள் ஆர்வத்துடன் செயல் பட்டால் நமது சங்கீதம் எதிர் காலத்தில் வளரவும், அதன் பெரு மையும் சிறப்பும் உயரவும் வழி ஏற்படும். பக்தியுடன் இணைந்ததே நமது இசை.

எனவே, நமது இசை பரவும் போதே பக்தியும் பரவும். இதனால் உயர்நெறி கொண்ட வாழ்க்கையும் அமையும்" - இப்படிச் சொன்னார் எம்.எஸ். சங்கீதத்தை வீடுதோறும் பயிலவும், பயிற்றுவிக்கவும் வேண்டிய அவசியத்தை அவர் அழுத்தமாக எடுத்துரைக்கிறார்.

உலகின் முக்கியமான நாடுகளில் இந்தியாவின் கலாசாரம், பண்பாடு ஆகியவற்றை விளக்க, இந்திய அரசு அந்நாடுகளில் கலாசார விழாக்களை ஏற்பாடு செய்திருந்தது. அதற்கு 'இந்திய விழா' என்று பெயர்.

ரஷ்யாவின் தலைநகர் மாஸ் கோவில் நடைபெற்ற இந்திய விழா வின் துவக்க நாளன்று எம்.எஸ். அவர்கள் பாடுவதாக ஏற்பாடு.

ரஷ்யாவின் முன்னணிப் பத்திரி கையாளர் ஒருவர், "இவரா பாடப் போகிறார்? இந்த எழுபது வயதுப் பெண்மணியா? இந்த வயதில் தெளி வாகப் பேசுவதே சிரமம். இவரால் பாடக்கூட முடியுமா?'' என்று



கேட்டுக் கொண்டேயிருந்தார், அருகிலிருந்த இந்தியக் குழுவைச் சேர்ந்தவரிடம். உடனே அவர், எம்.எஸ். லயித்துப் பாடியிருந்த 'சங்கர ஸ்ருதி' ஒலிநாடாவைப் போட்டுக் காட்டினார். அதைக்கேட்ட ரஷ்யப் பத்திரிகையாளர் "இதை என்னால் நம்பவே முடியவில்லை. அற்புதமான பெண்மணிதான்!" என்றார்.

லண்டன் இந்திய விழாவில் கச்சேரி செய்ய எம்.எஸ். சென்றிருந்தபோது இன்னொரு சுவையான சம்பவம்.

இந்தியாவைச் சேர்ந்த, அமெரிக்காவில் வசித்து வந்த பிரபல இசையமைப்பாளர் ஜூபின்மேத்தாவும், இதே விழாவில் கச்சேரி செய்ய வந்திருந்தார்.

எம்.எஸ். அவர்களின் கச்சேரியை அடுத்து ஜூபின் மேத்தாவின் இசை நிகழ்ச்சிக்கு ஏற்பாடாகியிருந்தது.



எம்.எஸ். தனது நிகழ்ச்சியை வெற்றிகரமாகச் செய்து, வழக்கம் போல ரசிகர்களின் ஏகோபித்த பாராட்டுதல்களை அள்ளிக் கொண்டார்.

ஜூபின் மேத்தா புளகாங்கிதமடைந்து, "என்ன அற்புதமான குரல்! அருமையான நாதம்! இவரது கச்சேரியைக் கேட்டவர்கள், அடுத்து என் கச்சேரியை ரசிப்பார்களா? இவரது கச்சேரியை அடுத்து உடனே என் கச்சேரியைத் தொடங்கும் விஷப் பரீட்சையில் இறங்க மாட்டேன்" என்று சொல்லி கச்சேரியை ஒத்தி வைக்கச் சொல்லி விட்டார். கற்றாரைக் கற்றாரே காமுறுவர் அன்றோ?

தேசிய ஆராய்ச்சி மையத்தின் பேராசிரியையாக எம்.எஸ். அவர்களை இந்திய அரசு நியமித்து கவுரவித்தது. 1949-ல் ஏற்படுத்தப்பட்ட இந்த மையத்தின் இப்பதவியை, பல்வேறு துறையைச் சேர்ந்த விற்பன்னர்கள் வகித்து வந்திருக்கிறார்கள். ஆனால், இசையுலகைச் சேர்ந்த ஒருவருக்கு இப்பதவி அளிக்கப்பட்டது இதுவே முதல்முறை.

எம்.எஸ். பாடிய 'பஞ்சரத்ன மாலா' வின் நான்காவது பாகத்தின் வெளியீட்டு விழா 1980-ஆம் ஆண்டு வைகுண்ட ஏகாதசியன்று நடந்தது. இதில் என்ன சிறப்பு என்கிறீர்களா?

புதுடில்லியில் சுவாமி ரங்கநாதானந்தா, கல்கத்தாவில் சுவாமி

அனன்யானந்தா, பம்பாயில் சுவாமி சின்மயானந்தா, சென்னையில் கௌடியா மடத்தின் தலைவர் திரிதண்டி சுவாமிகள், ஐதராபாத்தில் புஷ்பகிரி மடத்தின் பீடாதிபதி வித்யா நரசிம்ம பாரதி, பெங்களூரில் உடுப்பி பெஜாவர் மடத்தின் தலைவர் விசுவேசுவர தீர்த்த சுவாமிகள், ஸ்ரீரங்கத்தில் ஸ்ரீ ஆண்டவன் சுவாமிகள், குருவாயூரில் அஞ்சன் மாதவன் நம்பூதிரி, வாரணாசியில் ஸ்ரீஷரத் வல்லப மகராஜ், பூரி ஜகந்நாத்தில் ஸ்ரீராம மந்திரைச் சேர்ந்த ஸ்ரீ வைத்தியநாத பிரம்மசாரி, துவாரகையில் காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் - இப்படி பாரதத்தின் சிறப்புமிக்க பதினொரு ஆன்மிகத் துறவிகள் எம்.எஸ். அவர்களின் இந்த இசைத் தட்டினை ஒரே நாளில், ஒரே சமயத்தில் வெளியிட்டார்கள் என்பதுதான் பெருஞ்சிறப்பு!

எம்.எஸ். பாடிய 'ஸ்ரீவெங்கடேச சுப்ரபாதம்' இசைத்தட்டு, மற்றும் காசெட்டுகளின் உரிமைப் பணமாக (ராயல்டி) பல லட்சங்கள் திருப்பதி தேவஸ்தானத்துக்குச் சேர்ந்திருப்பதைக் குறிப்பிட்டு, 'சதாசிவம் தம்பதிகளின் நன்கொடையாக வருவது இது' என்று ஒருவர் குறிப்பிட்டார். மறுநாளே பத்திரிகையில் ஒரு



குறிப்பை வெளியிட்டார் சதாசிவம். அதாவது, "இது எங்கள் நன்கொடை அல்ல; அப்படிச் சொல்வதோ கருதுவதோ தவறு. மக்கள் இவற்றை வாங்குவதன்மூலம் கிடைக்கும் பணமே இது. எனவே, அவர்களுடையதே இந்தப் பணம்" என்று அறிவித்திருந்தார். தனது கச்சேரிகளால் இதுவரை மூன்று கோடி ரூபாய்க்கு மேல் பொதுக் காரியங்களுக்கு நிதியுதவி அளித்திருக்கிறார் எம்.எஸ்.

இந்திராகாந்தி பிரதமராக இருந்த போது எம்.எஸ். அவர்களை ராஜ்யசபையின் உறுப்பினராக நியமிக்க விரும்பினார். எம்.எஸ்.ஸிடம் இது தெரிவிக்கப்பட்டது. "என்னைவிடப் படித்தவர்கள், அறிஞர்கள், அனுபவஸ்தர்கள் அந்த இடத்தில் இருந்தால் மேலும் சிறப்பாக மக்களுக்குத் தொண்டாற்ற முடியும்" என்று கூறி மறுத்துவிட்டார் எம்.எஸ். இதை ஒரு விழாவில் முன்னாள் குடியரசுத் தலைவர் ஆர்.வெங்கட்ராமன் அவர்களே தெரிவித்தார்.

(பாடுவார்)

## ■ டைரக்டர் கே. சுப்பிரமணியம்

தன்னால் அறிமுகப்படுத்தப்பட்ட சில நட்சத்திரங்களைச் சந்தித்த அனுபவங்களை இங்கே கூறுகிறார் இயக்குநர் கே.சுப்பிரமணியம்...

# என்? எப்படி? எப்போது?

"சட்டப் புத்தகங்களைப் புரட்டிக் கொண்டு, புதிய புதிய வழக்குகளுக்காக நீதிமன்றம் ஏறி இறங்க வேண்டியவன் நான். ஆனால், கலை ஆர்வம் காரணமாக, படத்தொழிலில் நுழைந்த நான், புதிய படங்களுக்காகப் பல புதுமுகங்களைத் தேடிப் படம் எடுத்தேன். அவர்களை நீங்கள் நன்றாக அறிந்திருப்பீர்கள். அவர்களையெல்லாம் எங்கே, எப்படிச் சந்தித்தேன் என்பதைச் சொல்ல ஆசைப்படுகிறேன்.

ஒருசமயம் நான் காரைக்குடிக்குச் சென்றிருந்தேன். அழ. ராம. அழகப்ப செட்டியாரும், லெட்சுமணன் செட்டியாரும் (லேனா) என்னை அழைத்திருந்தார்கள். சொந்தத்தில், என் டைரக்ஷனில் படமெடுக்க வேண்டுமென்ற நோக்கம் அழகப்ப செட்டியாருக்கு அப்போது இருந்தது. நானும் அது பற்றியே சிந்தித்துக் கொண்டிருந்தேன்.

அச்சமயம், காரைக்குடியில் 'பவளக்கொடி' நாடகம் நடந்து



■ சுப்பிரமணியம்

கொண்டிருந்தது. "நாடகத்தைப் போய்ப் பார்க்கலாம்" என அழகப்ப செட்டியாரும், லெட்சுமணன் செட்டியாரும் என்னைக் கூப்பிட்டார்கள். 'எப்படித்தான் நாடகம் இருக்கிறது பார்க்கலாமே' என நானும் அவர்களோடு சேர்ந்து போனேன்.

நாடகத்தில் அர்ஜுனனாக ஒரு கட்டழகு வாலிபர் நெஞ்சைத் தொடும் இனிய குரலில் பாடியதைக் கேட்டுப் பரவசமானேன். அவரது பாட்டுக்களைக் கேட்கவே தினசரி பெரும் கூட்டம் வருகிறது எனவும் நான் கேள்விப்பட்டேன்.

அதே நாடகத்தில், 'பவளக்

கொடி'யாக நடித்த ஒரு இளம் நடிகை, கணீர் கணீரென வசனங்களைப் பேசி நடித்து வந்ததும், என் கவனத்தைக் கவர்ந்தது.

இரவு நாடகம் பார்த்துவிட்டுத் திரும்பியதும், நண்பர்களிடம் "அந்த 'பவளக்கொடி'யையே படமாக்கலாம். அதில் பாடி நடித்த இளைஞரையும், இளம் நடிகையையும் நடிக்க வைக்கலாம்" என்று என் அபிப்பிராயத்தைச் சொன்னேன். அவர்கள் என் யோசனையை உடனே ஏற்றுக்கொண்டார்கள்.

மறுநாள் அந்த இளைஞரையும், நடிகையையும் எங்கள் இடத்திற்கு அழைத்து வரச் செய்தோம். பரஸ்பரம் அறிமுகம் நடைபெற்றது. சினிமாவில் நடிக்க இளைஞரும் ஒப்புக்கொண்டார். அந்த நாடக நடிகையும் சம்மதித்துவிட்டார். ஆனால், ஒருவர் மட்டும் பலமாக எதிர்த்தார். "சினிமாவில் நடிப்பதா? அதெல்லாம் எனக்குப் பிடித்தமில்லை. என் மகன் நாடகத்திலேயே நடிக்கட்டும்..." என்றார் அர்ஜுன வேடதாரியின் தந்தை. அவரிடமும் பேசி, சிரமப்பட்டு அவரைச் சம்மதிக்க வைத்துவிட்டோம்.

அந்த இளைஞர்தான் எம்.கே. தியாகராஜ பாகவதர்; நடிகை: எஸ்.டி. சுப்புலட்சுமி.

'பவளக்கொடி' படம் வெளிவந்தது.

மதுரையில் படத்தைப் பார்த்த பாகவதரின் தந்தையாரான கிருஷ்ண ஆச்சாரியார், "ஆகா! என் மகன் ரொம்ப நன்றாக நடித்திருக்கிறான்! ரொம்பவும் சந்தோஷம்..." எனப் பாராட்டினார்! மகனை திரையில் நடிக்க அனுமதிக்க மறுத்தவரே பின்னால் திரையில் ஒளிவிடத் தொடங்கிய தன் மகனைக் கண்டு பெருமிதம் அடைந்தார்!

இந்தப் படத்திற்கு பாகவதருக்கு ஆயிரம் ரூபாயும், எஸ்.டி. சுப்புலட்சுமிக்கு இரண்டாயிரமும், எனக்கு எழுநூறு ரூபாயும் சம்பளமாகக் கொடுக்கப்பட்டது.

## இரண்டு

நான் கும்பகோணத்தைச் சேர்ந்தவன் என்பதைக் கூறிக்கொள்ள விரும்புகிறேன். உள்ளூர்வாசியாக இருந்ததாலும், சினிமாவில் ஈடுபட்டிருந்ததாலும், எனக்கு ஒரு பதவி கொடுக்கப்பட்டது! எதற்காக? விளக்கம் இதோ...



■ எம்.எஸ்.சுப்புலட்சுமி

கும்பகோணத்தில் பன்னிரண்டு வருஷங்களுக்கு ஒருமுறை மகாமகம் வருகிறதல்லவா? அதை முன்னிட்டு, ஒரு பொருட்காட்சியும் விசேஷமாக நடைபெறும். 1939-ம் ஆண்டில் நடைபெற்ற மகாமகம் பொருட்காட்சியின் கலை நிகழ்ச்சிகளை நடத்திக் கொடுக்கும் காரியதரிசியாக நான் இருந்தேன்.

சென்னையில் எஸ்.டி.சுப்புலட்சுமியை அடிக்கடி சந்தித்துப் பேசி வந்த இளம் பாடகியை நானும்





■ எஸ். வரலட்சுமி ■ பி.எஸ். சரோஜா ■ பாகவதர்

பார்த்திருந்தேன். இருவரும் நெருங்கிய சிநேகம் கொண்டிருந்தார்கள். அந்த இளம் பாடகியின் கச்சேரியை, கும்பகோணத்தில் நடந்த மகாமகப் பொருட்காட்சியில் இடம்பெற வைத்தேன். அது மட்டுமல்ல! வேறு யாருக்கும் அளிக்காத சிறப்பாக, அந்த இளம் பாடகியை இரண்டு முறை அந்தப் பொருட்காட்சியில் அந்த வருடம் பாடச் செய்தோம்.

தேன்மழையெனப் பொழிந்த அவரது இசையைக் கேட்டு, நான் வியந்து போனேன்.

'ஆனந்த விகட'னில் அப்போது ஒரு தொடர்கதை வெளியாகிக் கொண்டிருந்தது. பங்கிம் சந்திர சட்டர்ஜியின் கதை ஒன்று, பிரபல சமூக சேவகியான அம்புஜம்மாளால் தமிழாக்கப்பட்டு வந்தது. கதை எனக்குப் பிடித்திருந்ததால், படமாக்க நினைத்தேன். நாலாயிரம் ரூபாய் கொடுத்து, அதன் திரைப்பட உரிமையைப் பெற்றுக்கொண்டு தயாரித்தேன். அந்த நாளில், அவ்வளவு பெரிய தொகையை ஒரு கதைக்காக வேறு யாருமே தந்ததில்லை.

அந்தக் கதையில் நடிக்கத்தகுந்த பாத்திரமாக, கும்பகோணம் பொருட்காட்சியில் பாடிக் கேட்ட பாடகியை ஒப்பந்தம் செய்து கொண்டேன். அந்தப் படம்தான், 'சேவா சதனம்'. அதில் நடிக்க வந்த அந்தப் பாடகிதான், இன்றைய 'பத்மபூஷன்' எம்.எஸ். சுப்புலட்சுமி.

தமிழ் சினிமா உலகம் பெருமை கொள்ளும்படி இந்தப் பாடகியின் பிரவேசம் அமைந்தது. திருச்சி ரயில்வே அதிகாரியும், அமெச்சூர் நாடகங்களிலும் நடித்து வந்த எப்.ஜி. நடேசய்யர், இந்தப் படத்தில் வயதான கணவராக நடித்தார். அவரது இரண்டாந்தாரமாக எம்.எஸ்.ஸும், அவரது தங்கையாக எஸ். வரலட்சுமியும் நடித்தார்கள்.

எம்.எஸ். பற்றி விசேஷமாக சில வார்த்தைகளை எழுத விரும்புகிறேன். எம்.எஸ்.ஸிடம் ஒரு தனித்திறமை உண்டு. அவருக்கு ஒத்திகையே தேவைப்பட்டதில்லை. பாத்திரத்தின் தன்மையை மனத்தால் உணர்ந்து,

புரிந்துகொண்டு, அதற்கேற்ப வசனம் பேசவும், நடிக்கவும், முகபாவங்களை வெளியிடக்கூடிய சக்தி அவரிடம் நிறைய உண்டு. அருட்பிரசாதமாக இனிய குரல் அவரிடம் அமைந்திருப்பதைப்போல வேறு எந்தப் பாடகிக்கும் அமையவில்லை.

## மூன்று

பட்டதாரி இளைஞர் ஒருவரை நான் அடிக்கடி சந்தித்துக் கொண்டிருந்தேன். அப்போது 'ஆனந்த விகட'னில் பணியாற்றி வந்த சதாசிவத்துடன் அவர் காணப்படுவார். அவர்தான் ஆர்.பார்த்தசாரதி. ஹாஸ்யமாக எழுதக்கூடிய எழுத்தாளர். அவரையும், கும்பகோணத்தைச் சேர்ந்த ஒரு பெண்ணையும், இன்னும் விஸ்வம் என்ற நண்பரையும் கொண்டு, 'பால யோகினி'யை உருவாக்கினேன். அந்த கும்பகோண மங்கை, வேறு யாருமல்ல - என் நண்பர் கிருஷ்ணசாமி என்பவரின் மருமகளான கே.ஆர். செல்லம்தான்! பாலயோகினியில் நடிக்க வரும் முன்பே செல்லம் நடித்துக்கொண்டிருந்தார்.

'பால யோகினி' முற்றிலும் மாறுபட்ட சமூகச் சித்திரம். அதன் வெற்றி பிரமாதமாக அமையவில்லை என்றாலும், புதிய முயற்சியின் விளைவால் தோன்றியதாகப் பெருமைப்படுகிறேன். இதில் நடித்த பேபி சரோஜாவுக்கு அமோகமான புகழ் கிடைத்தது. பேபி சரோஜா என் உறவு முறைப் பெண்தான்.

## நான்கு

நானும், பாலு என்ற நபரும், நடிப்பில் புகழ் பெற்றிருந்த எஸ்.பி.எல். தனலட்சுமி வீட்டுக்குச் சென்றிருந்தோம். அடுத்த படத் தயாரிப்புக்கு தனலட்சுமியை ஒப்பந்தம் செய்யவே முடிவு கட்டிச் சென்றேன்-அந்தப் புதிய பெண்ணைக் காணும் வரை!

எங்கள் இருவருக்கும் காபி, பலகாரத் தட்டுகளை குனிந்த தலை நிமிராமல், ஒரு இளம் பெண் வைத்து விட்டுப் போனாள்.

முதன் முதலாகப் பார்த்ததுமே, 'தனலட்சுமிக்குப் பதிலாக டிபன் தட்டுடன் வந்துபோன பெண்ணையே போடலாம்' என்று நான் தீர்மானித்தேன். அதை மறுநாள் என்னைச் சந்தித்த பாலுவிடம் தெரிவித்தேன்.



■ சரோஜாதேவி

"வேண்டாங்க... அது பணிப் பெண்ணாக இருக்குங்க... தனலட்சுமி யையே போட்டுப் படம் எடுங்க..." என்றார் பாலு.

"தனலட்சுமியைப் போட்டு வேறு யாராவது படம் எடுப்பார்கள். நான் என் முடிவை மாற்றிவிட்டேன்... அந்தப் பணிப்பெண்ணையே இதில் நடிக்கவைக்கப் போகிறேன்" என்றேன்.

கிண்டி வேல் பிக்சர்ஸ் ஸ்டூடியோ வில் அந்தப் பெண்ணுக்கு 'மேக்-அப்' போடச் சொன்னபோது, மேக்-அப் நிபுணர் ஹரிபாபு, "சுப்பிரமண்யத் துக்குப் பைத்தியம் பிடிச்சுடித்து" என்று கூறி, ஒப்பனை செய்ய மறுத்துவிட்டார்! அதைக் கேட்ட அந்த இளம் பெண்ணுக்கு, தலை சுற்றலே வந்துவிட்டது! மயங்கி விழுந்துவிடாத நிலைதான்.

நான் பிடிவாதமுடன், அந்த இளம் பெண்ணையே பல எதிர்ப்புகளுக் கிடையே 'கச்ச தேவயானி'யில் நடிக்க வைத்தேன். அந்தப் படம் மகத்தான வெற்றிபெற்று, அமோக புகழையும் அந்தப் புதுமுகம் டி.ஆர்.ராஜ குமாரிக்குத் தேடிக் கொடுத்து விட்டது!

## ஐந்து

**நா**கப்பட்டினம் முத்து ஐயர், கார் டிரைவராக எங்கள் படநிறுவனத்தில் இருந்தார். அவரது தங்கை உறவு முறையான பன்னிரண்டு வயதுச் சிறுமி, அடிக்கடி படப்பிடிப்பை பார்க்க வருவாள். குறிப்பாக, 'பக்த குசேலா' காலத்தில் அடிக்கடி படப் பிடிப்பை பார்க்க வந்ததுண்டு. அந்த அரைகுறை கவனம்-முழுமையான ஒரு இடம் பெற்றது!






'பக்த குசேலா' படத்தில், படப் பிடிப்பை பார்க்க வந்த பெண் ணையே நடிக்க வைத்துவிட்டேன்! அந்தப் பெண்தான் ஜி.சுப்புலட்சுமி! என் மூலம் அறிமுகமான மூன்றா வது சுப்புலட்சுமி இவர்!

## ஆறு

சர்க்கசில் சேர்ந்து பார் விளை யாடிக் கொண்டிருந்து, பிறகு போலோநாத் தொடங்கிய நாட்டியக் குழுவில் இடம் பெற்றாள் ஒரு குமரிப் பெண்.

காதல் கடிதம் இடம்மாறி தபால் மூலம் போய்ச்சேர்ந்து விடுகிறது. இதனால் பல குழப்பங்கள் சேர்ந்து ஒரே அமர்க்களமாக முடிந்து, கடைசியில் விளக்கம் புரிகிறது. இந்த வேடிக்கையான கதையை 'விசித்திர வனிதா' என்ற பெயரில் படமாக்க விரும்பினேன்.

சர்க்கசில் பார் விளையாடி வந்த அந்தப் புதுமுகம் - இப்படத்தின் மூலம் சினிமாவுக்கு அறிமுக மானாள். பி.எஸ். சரோஜாவைத்தான் குறிப்பிடுகிறேன்.



■ பி.ஏ. பெரியநாயகி



■ டி.ஆர். ராஜகுமாரி

இந்த 'விசித்திர வனிதா'வில்தான் அகில இந்திய ரேடியோவில் பணிபுரிந்த 'சித்ரா' கிருஷ்ணசாமியை திரை உலகுக்கு இழுத்து அறிமுகப் படுத்தினேன். எஸ்.எம். குமரேசன் இதில் கதாநாயகனாக நடித்தார்.

இதையடுத்து, 'கீதகாந்தி' படத்தைத் தயாரித்தேன். பின்னணிப் பாடகி பி.ஏ. பெரியநாயகியை முதலில் நடிக்க வைத்ததும் இப்படத்தில் தான்.

## ஏழு

திருக்குற்றாலத்தில் பத்து வயதுச் சிறுமி ஒருத்தி, 'காவடிச் சிந்து' அற்புதமாகப் பாடினாள். அந்தப் பெண்ணையும் சினிமாவுக்கு அறிமுகமாக்கினேன். அந்தச் சிறுமிதான் பின்னாளில் புகழடைந்த குமாரி டி.வி. ரத்னம்.

## எட்டு

ஒரு சமயம் பெங்களூர் போயிருந்தேன். நோக்கம்: 'கச்சதேவயானி'யை கன்னடத்தில் தயாரிக்க வேண்டுமென்பது.

கன்னட எழுத்தாள நண்பர் பாபு என்பவருடன் வீதியில் சென்று கொண்டிருக்கையில், ஒரு மாணவி வெகு வேகமாக எங்களைத் தாண்டிச் சென்றதைக் கண்டேன்.

அந்த மாணவி யார் என்பதை பாபு அறிந்திருந்தார்.

மைசூர் முதல்வராக இருந்த திரு. ஹநுமந்தையாவின் சகோதரர், அந்த மாணவியின் குடும்பத்தவருக்குத் தெரிந்த மனிதர். மிகுந்த கலையார்வம் கொண்ட அந்த அமைச்சரின் சகோதரர், பள்ளி மாணவியைக் கலைப் பணிக்கு ஊக்கமூட்டி வந்தார்.

பள்ளி மாணவி மேடையில் பாடினாள். பின்னர் நடனப் பயிற்சியும் பெற்று, சினிமாவில் நடிக்கவும் இசைந்தாள்.

சென்னை வந்திருந்தபோது, எம்.ஜி.ஆர். 'நாடோடி மன்னன்' தயாரிக்க முற்பட்டார். எம்.ஜி.ஆருடன் அடிக்கடி பட சம்பந்தமாகப் பேசி வரும்போது, "நல்ல புதுமுகம் தேவை" என்றார் எம்.ஜி.ஆர். உடனே அந்த பெங்களூரில் கண்ட மாணவியைக் குறிப்பிட்டேன்.

எம்.ஜி.ஆர். தன் படத்தில் நடிக்க வைத்து நட்சத்திரப் பதவியும் அவருக்கு அளித்துவிட்டார். அந்த நடிகைதான் சரோஜாதேவி!"

நன்றி :

பொம்மை ஆண்டுமலர், 1967

தகவல் : எஸ்.வி. ஜெயபாபு

# ஜப்பான் மொழியில் வள்ளுவர் வள்ளலார் பாரதியார்!



■ முத்து

தற்போது எனக்கு எண்பத்து மூன்று வயதாகிறது. 1947 முதல் 1990 வரையில் பல ஊர்களில் சினிமா தொழிலில் ஈடுபட்டு, எனது எண்பத்துமூன்றாவது வயதில் ஓமலூரில் குடியிருந்து வருகிறேன்.

1936-ம் ஆண்டில் நான் படித்துக்கொண்டிருக்கும்போது




என் தகப்பனார் ஆண்டுக்கு ஒரு ரூபாய் சந்தா கட்டி ஆனந்த போதினி, செங்குந்தமித்திரன், நல்வழி போன்ற பத்திரிகைகளை வரவழைப்பார். தினசரி நான் பள்ளிக்கூடம் போகும்போது எனக்கு அரையணா காசு கொடுப்பார். அதை சேர்த்து வைத்து வெள்ளிக்கிழமை வெளி வரும் 'ஆனந்த விகடன்', 'சந்தி ரோதயம்' போன்ற பத்திரிகை களை வாங்கிப் படிப்பேன். அதன் தாக்கம் என்னை எழுத் தாளனாகத் தூண்டியது.

எனது முதல் சிறுகதை 'சந்தி ரோதயம்' பத்திரிகையில் 'செட்டி யார் குடையை விரித்தார்' என்ற தலைப்பில் வெளிவந்தது. 1940-1942-ம் ஆண்டுகளில் எனது சிறுகதைகளும், கவிதைகளும் நவசக்தி, இந்துஸ்தான், ஹனு மான், ஆனந்த போதினி ஆகிய பத்திரிகைகளில் வெளிவந்தன.

எழுத்தாளன் என்ற அங்கீ காரத்துடன் கோவையில் ஜி.டி. நாயுடு அவர்களின் 'கோபால் பாக்' பங்களாவில், அமரர் வரா. அவர்கள் தலைமையில் நடை

புலர்ந்து இத்தனை நேரமாகியும் கதவங்கள் திறக்கப்படவில்லை. உட்தாழ்ப்பாள் வேறு போடப்பட்டிருக்கிறது. 'தொந்தரவு செய்யாதீர்கள்' என்கிற ராஜ கட்டளை எங்களைத் தடுக்கிறது. என்ன செய்வதென்றே புரியாமல் குழம்புகிறோம்."

பொத்தகுப்தன் கோபம் கொண்டு கூத்தாடினார். "என் நண்பனிடம் நானே பேசுகிறேன். ஆட்களைக் கூப்பிட்டுக் கதவை உடைக்கச் சொல்லம்மா..." என்றார். இளையராணியும் வேறு வழியற்ற நிலையில், வழிபாட்டுக் கூடத்தின் கதவங்களை உடைத்துத் திறக்கச் சொன்னாள். காவலர்கள் அதன்படியே செய்தார்கள். உள்ளே பரபரப்புடன் ஓடினார் பொத்த குப்தர்.

அங்கே மன்னர் திஸ்ஸன் எதையுமே கவனியாதவர் போன்று, சரிந்து கிடந்தார். அவருடைய இடக்கரத்திலே ஓர் ஓலை நறுக்கு. வலக்கரத்திலே தேங்காய்ப் பால் உளள பொற்கிண்ணம். பொத்த குப்தன் ஓலையை உருவிப் படித்தார். அதில்,



'பொத்தகுப்தன் என் நண்பர், சிறந்த புத்தமத விசுவாசி. என்னிடம் தஞ்சம் புகுந்துள்ள அவரைக் காட்டிக் கொடுக்க நான் ஒருபோதும் துணியமாட்டேன். ஆனால், மான வர்மன் பக்கம் நியாயம் இருக்கிறது. அவனுடைய அரசாணையை நான் ஏற்பதா, மறுப்பதா என்கிற அறத் துன்ப நிலை எனக்கு. நான் ராஜத் துரோகியாகவோ, மித்திரத் துரோகியாகவோ ஆக விரும்பவில்லை. அதனால் நஞ்சு அருந்தி.. இல்லை யில்லை... அமுதம் அருந்தி, போதி மாதவனின் திருப்பாதங்களில் சரணடைகிறேன்...' என்று எழுதப் பட்டிருந்தது.

தியானத்தில் அமர்ந்த நிலையில், அப்படியே சரிந்து கிடந்தார் திஸ்ஸன். பொத்தகுப்தன் 'ஓ'வென அலறினார். 'நண்பா! பவுத்தத்தின் பேரால் உன்னைச் சக்கரவர்த்தியாக்க நான் திட்டமிட்டேன். நீயோ சிறந்த பவுத்தனாக வாழ்வதே உத்தமம் என நிரூபிக்க உயிர்விட்டாய். என்னிலும் நீயே உயர்ந்தவன். உன் இழப்பு என் உயிரை உலுக்குகிறது..' என அரற்றினார்.

திஸ்ஸன் கையிலிருந்த கிண்ணத்தில் நஞ்சு கலந்த தேங்காய்ப் பாலும், அப்பத் துண்டும் மிச்சமிருந்தது. அதை எடுத்துப் பருகிய பொத்த குப்தன், அடுத்த நொடியில் சுருண்டு கீழே விழுந்தார். அத்தனைக் கொடிய நஞ்சு அது.

இலங்கை வரலாறு, திஸ்ஸனையும் பொத்தகுப்தனையும் பற்றிய இச்சம்பவத்தை இதயம் நெகிழப் பதிவு செய்து வைத்திருக்கிறது.

-சரித்திரம் படைப்போம்

உருகவைக்கும் தொடர்

# இசையரசி எம்.எஸ்.

'மகரார்சர்கள் உலகாளுதல் நிலையாம் எனும் நினைவா? உதவாதினி ஒருதாமதம் உடனேவிழி தமிழா!' என்று தன்னினத்தைத் தட்டி எழுப்பி, தன்மானப் பாதையில் அவர்களை வழிநடத்தித் தன் பாட்டாலும், ஏட்டாலும் பதாகை உயர்த்தி முன்நடந்த பாவலன்-பாரதிதாசன்!

தமிழ்-நிலம் வாழவும், நிலை மீளவும் தினம் உழைத்த இந்தத் திரைகளற்ற மனிதருக்கு, தங்கள் அன்பைத் திரை செலுத்திய தமிழுள்ளங்கள் ஆயிரமாயிரம்!

தமிழிலக்கிய வரலாற்றில், நாமறிந்த வரையில் இவருக்கு மட்டுமே ஏராளமாகச் சீடர்கள் சேர்ந்தார்கள். மற்ற கவிஞனுக்கோ, எழுத்தாளனுக்கோ 'ரீடர்'கள்தான் உண்டு. சிலருக்கு 'புரூஃப் ரீடர்'கூடக் கிடைப்பதில்லை.

கன்னட மண்ணில் இசையரசி எம்.எஸ்.அவர்களின் மரியாதைக்கு பங்கம் ஏற்பட்டதைக் கேள்வியுற்றதும் சினந்து சிவந்த பாவேந்தர், உடனே அதற்கு எதிர்ப்பு அறிக்கைகள் வெளியிட்டார்.

அவரது கண்டன அறிக்கைகள் மறுநாள் தினத்தந்தி, மாலைமுரசு ஆகிய நாளேடுகளில் வெளிவந்தன. மாலை

ஆர்.சி. சம்பத்

முரசில் 'கன்னடர் நடித்த படத்தைப் பார்க்காதே' என்று பாவேந்தர் கூறுவது போன்ற ஒரு கருத்துப்படமும் வெளியிட்டுச் சிறப்பித்தனர்.

"கன்னடர்களின் இந்த வன்செயலை எதிர்த்து சென்னையில் ஒரு கூட்டம் போடவேண்டும்" என்று பாரதிதாசன் சொன்னார். "அதற்குக் கொஞ்சம் செலவாகுமே ஐயா..." என்று இழுத்...தனர் அருகிலிருந்தவர்கள். காரணம், அப்போது பாரதிதாசனிடத்தில் கொஞ்சம் பொருளாதாரத் தட்டுப்பாடு.

"அதனாலென்ன? இதை நான்தான் செய்தாக வேண்டும்" என்ற பாரதிதாசன், தி.நகர் வாணி மகாலில் கன்னடர் எதிர்ப்புக் கூட்டத்தை நடத்தி னார். நடிகர் திருச்சி சவுந்திரராஜன் (பின்னாளில் அதிமுக மந்திரியாக இருந்தவர்) கவிஞர் நாரா. நாச்சியப்பன், கவிஞர் தஞ்சைவாணன், பொன்னடியான், திருமலை நடராஜன் (இப்போது சித்த வைத்தியர்) ஆகியோர் இந்தக் கூட்டத்தில் கலந்துகொண்டு, கன்னடக்காரர்களின் பிற் போக்குத்தனத்தைக் கண்டித்தனர்.

'திருமதி எம்.எஸ்.அவர்களை அவமதித்த கன்னடர்களைத் தட்டிக்கேட்கும் வகையில் தமிழக முதலமைச்சர் காமராஜர் நடவடிக்கை எடுக்கவேண்டும்' என்று தீர்மானம் நிறைவேற்றப் பட்டது. எம்.எஸ்.ஸைப் பற்றிச் சொல்லும்போது, 'அவர் தமிழரின் செல்வம்' என்பார் பாரதிதாசன்.







அன்றைய திராவிட இயக்கத்தினர் நாத்திகக் கருத்துக்களை பிரசாரம் செய்துவந்த போதிலும், எம்.எஸ். அவர்களின் பக்திப் பாடல்களைப் பரவசத்துடன் கேட்டுக் களித்தனர். காரணம், அவரது இசைத்தமி ழும், குரலினிமையும் தான்.

அறிஞர் அண்ணா வின் தோழராக விளங் கிய கவிஞர் கருணா னந்தம், தனது 'அண்ணா சில நினைவு கள்' நூலில் குறிப்பிடும் போது, "1942-ம் ஆண்டு



கும்பகோணம் அரசினர் கல்லூரியில் நான் சேர்ந்த சமயம். அப்போது நடைபெற்ற ஒரு பொதுக் கூட்டத்தில் அறிஞர் அண்ணா பேசினார். எனக்கு முதல் தரிசனம் அதுதான். என் சித்தப்பா மகளை பட்டுக்கோட்டையில்



திருமணம் செய்து கொடுத்திருந்தோம். அந்த மாப்பிள்ளையின் அழைப்பின் பேரில் பட்டுக்கோட்டை சென்றேன். அண்ணா, திராவிட நாடு இதழ் துவங்கிய நேரம் அது. பட்டுக்கோட்டைத் தோழர்கள் திரட்டி வழங்கிய நிதியைப் பெற்றுச் செல்ல அண்ணா வந்திருந்தார்.

அண்ணாவின் பேச்சில் நான் என்னை மறந்திருந்த நேரம். பேச்சு முடிந்ததும் என் மாப்பிள்ளை எனது தோளைத் தட்டிக் கேட்கிறார்: 'அண்ணாவின் பேச்சு எப்படி?' நான் மயக்கத்தினின்று தெளிந்து 'எம்.எஸ். சுப்புலட்சுமி கச்சேரி கேட்பதுபோல் இருக்கிறது' என்கிறேன். எனக்கு மிக உயர்வாகத் தோன்றும் உவமை அது ஒன்றே!" என்று எழுதுகிறார்.

நமது மும்மூர்த்திகளும் இறைவனை நோக்கி இறைஞ்சி பல சாகித்யங்கள் இயற்றி இருக்கிறார்கள். அவற்றில் அவர்களுடைய தாபங்கள் பொங்கி வழிந்திருக்கின்றன. அந்த கவனங்களுக்கு, அவற்றில் உள்ள உணர்ச்சிப் பெருக்குகளுக்கு எம்.எஸ். பாடும்போது சிறிதும் குறைவிருக்காது.

எம்.எஸ். இசைநிகழ்ச்சிகளில் 'கச்சேரி பந்தா' துளியும் இருக்காது.

அவர் பாபநாசம் சிவனின் 'நீ இரங்காயெனில் புகலேது' வழங்கும்போது, மெல்லின 'ர' கரத்தைத்தான் உபயோகிப்பார். வல்லின 'ற'கரம் விபரீத அர்த்தத்தைக் கொடுக்கும்.

பிதாமகர் பாபநாசம் சிவனே திருமதி எம்.எஸ்.ஸின் இந்த அரிய ஆற்றலைப் பற்றி, "ஒரு சாகித்ய கர்த்தாவின் படைப்பின் பாவத்தைப் புரிந்துகொண்டு, அவர் உள்ளக் கிடக்கையை உணர்ந்து, படம் பிடித்தாற் போல் உடனுக்குடனே பாடிக் காண்பிக்கும் அபரிமிதமான சக்தியை எம்.எஸ்.ஸிடம் நான் கண்டேன்" என்று ஒரு கட்டுரையில் எழுதியிருந்தார்.

இந்த விஷயத்தில் எம்.எஸ் ஸுக்கு சாரீரம் வரப்பிரசாதம். உருக்கிவிட்ட தங்கம். பிசிறு

மருந்துக்குக்கூடக் கிடையாது. ஆகவே இசை இலக்கணத் தேர்ச்சியும், சாகித்தியத் தெளிவும் குரல் வளமும் ஒருங்கே அமைந் திருப்பது இவர் ஒருவருக்குத்தான்.

கச்சேரியின் துவக்கத்திலிருந்து மங்களம் வரை, சிறிதுகூட, ஒரு வினாடி கூட சுருதியை விட்டு விலகாமல் சாரீரம் நிலைத்து நிற்பது துர்லபம். தேகத்திலும் சாரீரத்திலும் ஏற்படும் உஷ்ணத்தினால் சாரீரம் சுருதியைவிட, ஓரளவு மேலே ஒலிக்கும். வேறு சிலருக்குப் பாடப் பாடக் களைப்புத் தட்டி, சுருதியை விட்டுவிலகும்.

எம்.எஸ்.ஸுக்கு இந்தக் குறை சற்றுக் கூடக் கிடையாது. இரண்டு தம்பூராக்கள் 'தைரியமாய்' வைத்துக் கொண்டு, அப் படியே ஆதார சுருதியில் மிதக்கக் கூடிய ஆற்றல் அவருக்கு உண்டு.

ஒரு சத்தியமான சங்கீத வித்வானுக்கு அடக்கம்தான் அணிகலன். அடக்கத்தின் உறைவிடம் எம்.எஸ். துடுக்காகப் பேசு வதோ, அகம்பாவத்துடன் நடந்துகொள் வதோ அவர் அறியாதவை. நல்ல சங்கீதம் எங்கிருந்தாலும், அதைப் பிரயோகிப்பவர் யாராக இருந்தாலும், அவருக்கு மரியாதை செய்யத் தவறமாட்டார்.

சுவீடனில் நோபல் பரிசு எப்படிப் பல துறையில் சாதனை புரிபவர்களுக்கு ஆண்டுதோறும் வழங்கப்பட்டு வருகிறதோ, அதேபோல மருத்துவம், இலக்கியம், சமூகப்பணி இப்படிப் பல துறைகளில் தங்களது சாதனை முத்திரை பதித்த வர்களைத் தேர்ந்தெடுத்து, தங்கள் மறைந்த ஜனாதிதிபதியின் நினைவாக 'மக்ஸய் ஸாய்' பரிசை பிலிப்பைன்ஸ் நாட்டு அரசாங்கம் வழங்கி வருகிறது.

ரமான் மக்ஸய் ஸாய் மிகவும் ஏழ்மை யான குடும்பத்தில் பிறந்து, ஏழைகளின் துயர்துடைக்கும் பணியில் தன்னை அர்ப் பணித்துக் கொண்டு, பிலிப் பைன்ஸ் நாட்டின் ஜனாதி பதியாக 1953ல் தேர்ந்தெடுக்கப் பட்டார். அந்நாட்டு மக்கள், அவர் மறைந்ததும் அவர் பெயரிலேயே 'மக்ஸய் ஸாய்' விருதை வழங்கி கௌரவித்து வருகிறார்கள். ஆசியாவின் நோபல்பரிசு என்றும் இது அழைக்கப்படுவதுண்டு. ஆண்டு



தோறும் பிலிப்பைன்ஸ் நாட் டின் தலைநகரான மணிலாவில் இந்தப் பரிசளிப்பு விழா நடை பெறும். பிலிப்பைன்ஸ் ஜனாதி பதி இப்பரிசை வழங்குவார்.

டெல்லி பல்கலைக்கழகம் வழங்கிய டாக்டர் பட்டத் துடன் தமிழகம் திரும்பி இருந்த திருமதி எம்.எஸ். அவர்களுக்கு

பிலிப்பைன்ஸ் நாட்டிலிருந்து வந்த கடிதம், '1974 ஆம் ஆண்டுக்கான மக்ஸய் ஸாய் பரிசு உங்களுக்கு வழங்கப்பட்டி ருக்கிறது' என்ற இனிய செய்தி யைத் தாங்கிவந்தது.

எந்த அடிப்படையில் திருமதி எம்.எஸ். அவர்கள் இந்தப் பரிசைப் பெறத் தகுதி



யானவர் எனத் தேர்ந்தெடுக்கப் பட்டிருந்தார் என்ற விளக்கமும் தரப்பட்டிருந்தது அந்தக் கடி தத்தில்.

'தனது இசைப்பணியின் மூலம் மக்களை மேம்படுத்தி வருவதோடு, அப்பணியின் மூலம் கிடைக்கும் செல்வத்தைச் சமூகப் பணிக்கும் அறப்பணிக்கும் அளித்து, மக்களின் வாழ்வை உயர்த்தப் பாடுபட்டு வரும் மக்கள் தொண்டர்' என்று எம்.எஸ். அவர்களைக் குறிப்பிட்டு, அந்த அடிப்படையில் அவரைத் தேர்ந் தெடுத்துக் கௌரவித்திருப்பதாகக் குறிப் பிட்டிருந்தார்கள்.

மணிலா சென்று, குறிப்பிட்ட விழாவில் பிலிப்பைன்ஸ் நாட்டு அதிபர், எம்.எஸ்.ஸுக்குப் பணமுடிப்புடன் பரிசினையும் வழங்கினார். எம்.எஸ். வழக்கம்போலவே, அந்த செல்வத்தை, மருத்துவ, சமய, கலாசாரப் பணிகளைச் செய்து வரும் மூன்று நிறுவனங்களுக்குப் பகிர்ந்தளிக்கச் செய்துவிட்டார்.

'காசும் பிறப்பும் கலகலப்பக் கைபேர்த்து, வாசநறுங்குழல் ஆய்ச்சியர் மத்தினால் ஓசைபடுத்த தயிரரவம் கேட்டிலையோ பேய்ப் பெண்ணே' என்று ஆண்டாள் தன் தோழிகளைத் துயில் எழுப்பியது அந்தக் காலம். (காசு-காசு மாலை; பிறப்பு-தாலிக்கொடி)

மார்கழி மாதத்துக் குளிர்காலையில் இப்போது அந்த ஆண்டாளை அரிதுயி லிலிருந்து எழுப்புவதே எம்.எஸ்.அவர் களின் குரலில் ஒலிக்கும் சுப்ரபாதம்தான்.

அதனால்தானோ என்னவோ, திருப்பதியில் உள்ள ஸ்ரீவெங்கடேஸ்வரா தியாகராஜ ஸ்வாமி திருவிழாக் கமிட்டி யினர், 'சப்தகிரி சங்கீத வித்வமணி' என்ற விருதை எம்.எஸ்.ஸுக்கு அளித்து கௌரவித்தார்கள்.

உலகப் புகழ்பெற்ற அரபு மொழிப் பாடகி ஓம் குல்ஸும் அவர்களை எகிப் தின் தலைநகரான கெய்ரோவில் ஒரு இசை நிகழ்ச்சியில் சந்தித்தார் எம்.எஸ்! இசையரசியின் பாடலைக் கேட்டதும் ஓம் குல்ஸும் என்ன செய்தார் தெரியுமா?

. (பாடுவார்)



# தர்மத்தைப் புரிந்துகொள்ள முடியாது!

ஒரு சமயம் கண்ணனைப் பார்த்து அர்ச்சுனன், "தர்மம் என்றால் என்ன... எனக்கு விளக்குங்கள்..." என்று கேட்டான்.

அதற்குக் கண்ணன்,

"முன்னொரு காலத்தில் கௌசிகர் என்ற முனிவர் தவம் செய்து கொண்டிருந்தார். அவர் எப்பொழுதும் எந்தச் சூழ்நிலையிலும் உண்மை பேசுவதையே விரதமாகக் கொண்டிருந்தார்.

திருடர்களுக்குப் பயந்து ஓடிவந்த ஒருவன், அவர் தவம் செய்யும் இடத்திற்கு அருகில் இருந்த புதரில் ஒளிந்து கொண்டான். சிறிது நேரத்தில் சில திருடர்கள் அங்கே வந்தனர். துறவியைப் பார்த்து, "நீங்கள் பொய்யே பேசாதவர். எங்களுக்குப் பயந்து ஓடி வந்தானே ஒருவன், அவன் எங்கே ஒளிந்திருக்கிறான்?" என்று கேட்டார்கள். துறவியும், அவன் ஒளிந்திருந்த இடத்தைச் சொன்னார். அவனைக் கொன்ற அவர்கள், பொருள்களை எல்லாம் எடுத்துச் சென்றார்கள். இந்தப் பாவம் காரணமாக, துறவி நரகம் சென்றார்" என்றார்.

"உண்மையைச் சொன்னதற்காக நரகமா, இது என்ன அநியாயம்?" என்று கேட்டான் அர்ச்சுனன்.



பேரும் அடங்கும்.

இப்போது நாள் முழுவதும் நான் படுபிஸியாக இருக்கிறேன். சரியாக ஒரு வருடம் முடிந்துவிட்டது. நாங்கள் சவாலை ஏற்று. அப்பாவை ஊருக்குச் சென்று பார்க்க வேண்டும் என்று மாமா ஒரு வாரமாகச் சொல்லிக் கொண்டிருந்தார். அப்பாவும் இரண்டு முறை இங்கு வந்து ஹோட்டலைப் பார்த்துவிட்டுச் சென்றாராம். நான் அப்போது இல்லை.

அப்பாவைப் பார்க்கக் கிளம்பி ஊர் போய்ச் சேர்ந்தோம். போனவுடன் சீக்கிரம் கிளம்ப வேண்டும். நிறைய வேலை இருக்கிறது என்று மாமாவிடன் கூறியிருந்தேன்.

வீட்டிற்குள் நுழையும்போதே, அம்மா ஓடிவந்து 'வாடா அருண்' என்று வாஞ்சையுடன் கட்டிக் கொண்டாள்.

அப்பா, பூஜை முடித்து வெளியே வந்தார்.

விஷயத்தை முதலில் அவரே ஆரம்பித்தார். "டேய் கணபதி, நான் சவால்ல தோத்திட்டேண்டா, அருண்கிட்ட இருக்கிற அபாரத் திறமையை இவ்வளவு நாளா புரிஞ்சுக்காம இருந்திட்டேண்டா!"

"இப்ப புரியுதா? நாட்டுல இவன மாதிரி எத்தனையோ இளைஞர்கள் பட்டை தீட்டாத வைரங்கள் மாதிரி இருக்காங்க. வேலை கிடைக்காத விரக்தியில இருக்கிற அவங்கள நீங்க திட்டி நோகடிக்க வைக்கறீங்க. அவங்க எல்லோருக்கும் இந்த மாதிரி வாய்ப்பு தந்து ஊக்கப்படுத்தினா எல்லோருமே அருண் மாதிரி வைரமா ஜொலிப்பாங்க"

"கணபதி, இப்ப நல்லா புரிஞ்சுக்கிட்டேன். அருண் மாதிரி உள்ள இளைஞர்களை எங்கள மாதிரி பெரியவங்க வெறும் கண்ணாடி கல்லா நினைத்து உதாசினப்படுத்தறோம். அருண் கிட்ட இருக்கிற திறமையை வெளிக் கொணர்ந்து எங்க கண்ணை நீ திறந்திட்ட". ●

இத்திட்டம் மக்களிடம் நல்ல வரவேற்பு பெற்றது. மாமா மிகவும் பாராட்டினார்.

இதற்கு அடுத்த கட்டமாக, அந்த ஊரிலும், சுற்றி உள்ள கிராமங்களிலும் நடக்கும் கல்யாணம், காதணி விழா மற்றும் ஏனைய விசேஷங்களுக்கு டிபன், சாப்பாடு போன்றவற்றை நியாயமான விலையில் ஹோட்டலில் தயார் செய்து அவர்கள் வீட்டிற்கே வாடகை வேனில் சப்ளை செய்தோம். கொஞ்சம் கொஞ்சமாக இதை பள்ளி, கல்லூரி அலுவலகங்களில் நடக்கும் விழாக்களுக்கும் விரிவுபடுத்தினோம்.

தொழில் நன்றாக வளர்ச்சி அடைந்தது. நிறைய ஆர்டர்கள் குவிந்தன. மாமா மனதாரப் பாராட்டினார்.

இரண்டு வேன் வாங்குவதற்கு பேங்கில் கடன் கிடைத்தது. இப்போது ஹோட்டலில் மொத்தம் முப்பது பேர் இருக்கிறார்கள். இதில் கேட்டரிங் முடித்த ஐந்து

உருகவைக்கும் தொடர்

# இசையரசி எம்.எஸ்.

மனிதன் பிறந்த பிறகே பேச்சு, பாட்டு, விளையாட்டு, வினை, ஓவியம், சிற்பம் என்று ஆயகலைகள் அனைத்திலும் தொடர்பு கொள்கிறான். ஆனால், மானிடன் பிறப்பதற்கு முன்பே அவனுடன், கடவுள் தொடர்பு படுத்திக் கொள்ளும் கலை 'எழுத்து'தான்!

இறைவன் தனிமனிதனின் விதியை கருவிலிருக்கும்போதே அவன் தலையில் 'எழுதி' விடுகிறான் என்பதே நம் மக்களின் நம்பிக்கை.

'எல்லாம் என் தலையெழுத்து' என்று சலித்துக் கொள்வதும், 'அவன் தலையில் எழுதியது அவ்வளவுதான்; நாமென்ன செய்ய?' என்று விசனித்துக் கொள்வதும் வழக்கமாகக் காணும் காட்சிகள்தானே?

அதனால்தான் அருணகிரிநாதரும் "மாமயிலோன் - வேல்பட்டு அழிந்தது வேலையும் சூரனும் வெற்பும்; அவன் - கால்பட்டு அழிந்தது இங்கு என் தலைமேல் அயன் கையெழுத்தே!" என்கிறார். "எழுதிச் செல்லும் விதியின்கை, எழுதி எழுதி மேற்செல்லும்; அழுத கண்ணீர் ஆறெல்லாம் அதிலோர் எழுத்தை அழித்திடுமோ?" என்று முழக்குகிறார் பாரசீகக் கவி உமர்கயாம்.

அரபுப் பாடகி ஓம் குஸ்ஸும் அவர்களும், எம்.எஸ்.ஸின் பாகு மொழி இசைகேட்ட பரவசத்தில் அவரைப் பாராட்ட வார்த்தை வராமல் 'எழுத்து' மூலமே தன் வாழ்த்தை வழங்கினார்.

கெய்ரோ விழாவில் எம்.எஸ்.ஸின் கானாமிர்தத்தில் திளைத்த ஓம் குஸ்ஸும் அவர்கள், மெய்மறந்து போய் இசையரசியை ஆரத்தழுவி அகமகிழ்ந்து, உடனே பேப்பரும் பேனாவும் எடுத்து, எம்.எஸ்.ஸின் இசைத்திறனை வாழ்த்தி அங்கேயே தன் கைப்பட அரபுமொழியில் எழுதி, ஒப்பமிட்டுக் கொடுத்தார்.

அந்தக் கடிதத்தில் - 'மிகப்பெரும் புகழ் வாய்ந்த பெரிய பாடகிக்கு என்

■ ஆர்.சி. சம்பத்




■ ஒரு வங்கி திறப்பு விழாவில்

[illegible] 2.9.2003

அன்பின் நினைவாக, என் மனமுவந்த பாராட்டுக்களை அவரது அதியற்புத கானத்திற்காகத் தெரிவித்துக் கொள்கிறேன்!' என்று அரபுமொழியில் எழுதப்பட்டிருந்தது.

மனிதன் கற்றறிந்த அறிவுமொழி ஆயிரமிருக்கலாம்; ஆனாலும் அவனது இதயமொழி அவனவன் தாய்மொழிதானே? இதயத்தைச் சுத்திகரிக்கும் எம்.எஸ்.ஸின் இசையில்



நெகிழ்ந்து குழைந்த ஓம் குஸ்ஸூம் அம்மையார் ஆழமான ஆங்கில அறிவு பெற்றிருந்த போதிலும், உணர்ச்சி மேலீட்டில் தன் தாய்மொழியிலேயே வாழ்த்து எழுதியதில் ஆச்சரியமென்ன? (பிறகு இவர் எம்.எஸ்.ஸிற்கு ஆங்கிலத்திலும் வாழ்த்தொன்றை வரைந்தளித்தார்.)

Bombay 28.9.44

Dear Subbulakshmi

Rajaji has told me everything about your good work in connection with Kasturba Memorial Fund by using your musical gifts. May God bless you.

Yours

மோ. க. காந்தி

■ மகாத்மாகாந்தி எம்.எஸ்.க்கு எழுதிய கடிதம்

அன்றைய ஐக்கிய அரபுக் குடியரசுத் தலைவராக விளங்கிய நாசர், அப்பதவிக்கு வர பெரும் உதவியாக இருந்தவர், உலகப்புகழ் பாடகியான இந்த ஓம் குஸ்ஸூம் அம்மையார்.

தாயன்புத் தாலாட்டைப் போன்ற அவரது பாராட்டு மடலை இன்றளவும் பத்திரப்படுத்திப் பாதுகாத்து வருகிறார் எம்.எஸ்.

உலக நாடுகள் பலவும் பங்குபெற்று இயங்கும் மாபெரும் நிறுவனம் ஐக்கிய நாடுகள் சபை. மனிதகுல மேம்பாட்டுக்காக இது பல கிளை நிறுவனங்களை அமைத்து உலகளாவிய தொண்டாற்றி வருகிறது. அதில் ஒன்று 'யுனெஸ்கோ'

கல்வி, கலாசாரம் மற்றும் அதனைச் சார்ந்தவைகளுக்கென இயங்கி வரும் அமைப்பு 'யுனெஸ்கோ.'

யுனெஸ்கோவின் ஆதரவில் இசை, நாட்டியம், ஓவியம் என பல நுண்கலைகளின் வளர்ச்சிக்கும் வளத்திற்கும் பல துணை அமைப்புகள் செயலாற்றி வருகின்றன. அதில் ஒன்று 'சர்வதேச இசைக் குழு' என்ற அமைப்பு.

உலக அரங்கில் தன்னிகரற்ற பல இசை மேதைகள் இதில் பங்காற்றுகின்றனர்.

இந்த இசைக்குழுவிலிருந்து 1981-ம் ஆண்டு எம்.எஸ்.அவர்களுக்கு ஒரு கடிதம் வந்தது.

சர்வதேச இசைக்குழுவில் அவரை

யும் ஒரு உறுப்பினராக்கிக் கொள்ள விரும்புவதாக வந்தது செய்தி. எம்.எஸ். அதை அடக்கத்துடன் ஏற்றுக் கொண்டார்.

ஆனால் இந்த விஷயத்தை அவர் வெளியில் விளம்பரப்படுத்திக் கொள்ளவே இல்லை.

தூண்டா மணி விளக்காய்த் துலங்கும் பேரொளியை, வேண்டாத ஆணவத்தின் வேரறுத்த நாயகியை தங்கள் அரசின் ஆஸ்தானப் பாடகியாக்கி 'சங்கீத விதூஷமணி' என்ற விருதும் வழங்கி எம்.எஸ்.ஸை பெருமை செய்தது ஆந்திர அரசு.

"அகலமான கிணறு அடிக்கடி மண் சரிந்து தூர்ந்து போகும்; அடக்கமில்லாதவர்களின் வாயும் அப்படித்தான்" என்பார் ராமகிருஷ்ண பரமஹம்சர். இசையரசி எதையும் பேசுவதில்லை; செய்வார். போதிப்பதில்லை; சாதிப்பார். கடமையை வேள்வியாகக் கொண்ட எந்தத் தபஸ்விக்கும் இந்தப் பண்பு இயற்கை தானே?

'விகற்பக் கற்பனைகளுக்குத் தன்னை ஆட்படுத்திக் கொள்ளாமல், அவர் தமது இசையை அடக்கியதே ஒரு சாதனை!' என்று எம்.எஸ். பற்றி எழுதுகிறார் இசை விமர்சகர் சுப்புடு.

'இட்டார் பெரியோர்' என்ற இலக்கிய முதுமொழிக்கு இலக்கணமாகத் திகழும் எம்.எஸ்., மகாகவி பாரதி நூற்றாண்டையொட்டி தந்திருக்கும் இசைத்தட்டுக்களின் ராயல்டி, பார்வையற்றோருக்கு ஒளிவழங்கி அவர்களது வாழ்வில் ஒளியேற்ற உதவிடும் பணிக்காக. 'சங்கர நேத்ராலயா'விற்கு வழங்கப்பட்டுள்ளது. பாரதியாரின் 'ஒளி படைத்த கண்ணினாய் வா, வா, வா' பாடிய எம்.எஸ். அதற்குப் பொருளாகவும் வாழ்ந்து காட்டியுள்ளார்!



■ மியூசிக் அகாடமி விழாவில்



■ யூ.எஸ்.எஸ்.ஆர்.ருக்குப் பயணம்



■ ஓம் குல்ஸூம் பாராட்டுகிறார்



ஓம் குல்ஸூம் அவர்கள் எழுதித் தந்த பாராட்டுக் கடிதம்

'ஓடக் காண்பது பூம்புனல் வெள்ளம்; ஒடுங்கக் காண்பது ஞானியர் உள்ளம்' என்ற இலக்கிய வரிகளுக்கு எடுத்துக்காட்டாக வெஞ்சுரத்தால் நெஞ்சடக்கி வாழும் சாட்சியாக விளங்குபவர்; 'தனக்கு மிஞ்சிதான் தான தர்மம்' என்ற பழமொழியின் பல்லைப் பிடுங்கியவர் - பண் பாடியே நமது பண்பாட்டை அந்நிய மண்ணும் அறியச் செய்தார். ஜப்பானிலும், ஹாங்காங்கிலும் பின்னர் தாய்லாந்தின் தலைநகரமான பாங்காக்கிலும் எம்.எஸ். கச்சேரிகள் நிகழ்த்தினார்.

அமெரிக்காவில் ஏழு வாரங்கள் தங்கியிருந்து பற்பல ஊர்களில் இசை நிகழ்ச்சியை நடத்தினார்.

செல்வமும் விஞ்ஞானமும் வான்முட்ட வளர்ந்து நின்று உலகை ஆளும் அமெரிக்காவில், இசை நல்லூற்றில் திளைத்துத் திரும்பியவர் எம்.எஸ்.

சிதார் மேதை ரவிசங்கர், அல்லா ரக்கா கான், சரோட் விற்பன்னர் அலி அக்பர் கான் போன்ற இந்துஸ்தானி இசைக் கலைஞர்களின் கச்சேரியையே கேட்டுப் பழகிப் போயிருந்த அமெரிக்க குடிமக்களுக்குப் பாரம்பரியம் மிக்க கர்நாடக சங்கீதத்தின் தனிச் சிறப்பையும் உயர்வையும் அறிமுகப் படுத்தினார்.

வாய்ப்பாட்டிலாகட்டும், வாத்தியங்களின் வாசிப்பிலாகட்டும் கர்நாடக இசைத்துறையில் சிறந்து விளங்கும் பலர், இன்று அமெரிக்கா மற்றும் ஐரோப்பிய நாடுகளுக்கு அடிக்கடி சென்று கச்சேரிகள் நடத்திப் புகழும் செல்வமும் சேரத் திரும்ப முடிகிறது என்றால், அதற்கு



■ கும்பகோணம் வேதபாடசாலை மாணவர்களுடன்

வெள்ளம் பெருக்கோட குறிப்பாகத் தென்னகத்திற்கே உரிய கர்னாடக இசையினை பக்திமணம் இழையோட - அந்த இசை வெள்ளத்தில் - அங்கு சென்று குடியேறி வாழ்ந்து வரும் நம் நாட்டினர் மட்டுமின்றி அமெரிக்கக் குடிமக்களையும், அயல்நாட்டு இசை மேதைகளையும் மூழ்க வைத்து, அவர்களை நாதயோகத்தில் பரமானந்த நிலையை அடையச் செய்து, அவர்களது அன்பெனும் அன்றைய தினம் எம்.எஸ். நமது இசைக்கு அங்கு நல்ல அஸ்திவாரத்தை தன் இசைப் பணியினால் அமைத்துத் தந்ததுதான் காரணம்.

ஐக்கியநாடுகள் சபையில் பாரதத் தாயின் மணிக்கொடியை அரசியல் கொடியாக இல்லாமல் 'அறநெறிக் கொடி'யாக பேரொளி வீசிப் பறக்க விட்டவர் எம்.எஸ். பாரதத்தின் கலைத்தூதுவராகவே அவரைப் பார்த்தனர். நமது மத்திய அரசின் கலாசார



■ ஒரு திருமண விழாவில் ராஜாஜியுடன்

அமைச்சகம் செய்ய வேண்டிய பணியை, எம்.எஸ். தனிமனுஷியாகத் தனது எளிய சக்திக்கு இயன்ற வரையில் செய்திருக்கிறார் என்பதை நாடும் நாமும் மறந்திடப் போமோ?

இசையில் எம்.எஸ். பிள்ளைக் கிறுக்கலாய், பிறை நிலா வெளிச்சமாய் மெல்ல வளர்ந்து வந்த நேரம். அவரது வளர்ப்பு மகள் ராதாவும், 'கல்கி' யின் மகள் ஆனந்தியும் வழுவூர் ராமையா பிள்ளையிடம் பரதம் கற்று மேடை யேறியபோது எம்.எஸ். பதங்கள் பாடியது ஒரு புது அனுபவம்.

கல்கி எழுதிய 'மாலைப் பொழுதி னிலே' (ராகமாலிகை) பாடலை எம்.எஸ். பாட, ராதா -ஆனந்தி ஜோடி அருமையாக ஆட, நாட்டிய ரசிகர் களிடையே சில ஆண்டுகள் அது மிகப் பிடித்தமான அயிட்டமாக விளங்கியது. இப்படி, இசைக் கச்சேரி களோடு எம்.எஸ். நாட்டிய நிகழ்ச்சி களுக்குப் பாடும் பணியையும் செய்து வந்தார். சிறுமிகளின் திருமணத்திற்குப் பிறகு நாட்டிய நிகழ்ச்சிகள் நின்று போயின.

ராதா தன் அபிமான 'அன்னை' யுடன் இணைந்து பாடத் தொடங் கினார். எம்.எஸ்.கச்சேரி என்றால் உடன் பாடுவார் ராதா விஸ்வநாதன் என்பது நிச்சயம்.

எல்லா மேடைகளிலும் அவர்கள் சேர்ந்தே பாடினார்கள். வெளிநாடு, உள்நாட்டுக் கச்சேரி, ரேடியோ, இசைத் தட்டு, ஒலிநாடா என்று எல்லாவற்றிலும் ராதாவின் குரல் எம்.எஸ்.ஸின் குரலோடு இணைந்தன.

தம் நீண்ட இசை வாழ்க்கையில் எம்.எஸ்., ராதாவைத் தவிர, வேறு 'சிஷ்யை' யையோ சிஷ்யரையோ தயார் செய்ததாகத் தெரியவில்லை. தானே இன்னும் மாணவிதான்; எவ்வளவு கற்றாலும் போதாது என்ற நோக்கத்தில் ஒருவருக்கும் இசை கற் பிக்கவில்லையோ? என்று தோன்று கிறது.

- (பாடுவார்).

# ஞானத்தைத் தேடி

குருநானக் சீக்கிய குரு ஆவதற்கு முன்பு ஒரு சாதாரண பஞ்சாபி கிராமத்துப் பையன். ஒரு பெட்டிக் கடையில் எடுபிடி வேலை. அவருடைய வேலை. கோதுமையை அளந்து போடுவது தான். அங்கேயே அவர் வேலை செய்துகொண்டிருந்தார். வேலை செய்த நேரம் போக மற்ற நேரங் களில் கடவுள் தியானம்தான். ஒரு நாள் ஒரு வாடிக்கையாளர் "இருபது படி கோதுமை கொடுங்கள்" என்று கேட்டு வந்தார். அந்த பஞ் சாபி இளைஞன் "ஏக் தோ தீன்" என்ற அளந்து கொண்டிருந்தார். பதின் மூன்று என்று நம்பர் வந்தது. ஹிந்தியில் பாரா, தேரா வந்தது. தேரா வந்தவுடன் மீண்டும் மீண்டும் தேரா என்று சொல்லிக் கொண்டே நூறு படி வரை அளந்து கொண்டே மேலும் மேலும் அளக் கிறார். பதின்மூன்று என்பதற்கும் தேரா என்று பொருள். 'நான் உன்னுடையவன்' என்பதற்கும் தேரா என்று பொருள் உண்டு.



இவர் அந்த பதின்மூன்றாம் நம்பர் சொல்லும்போது, பகவானை நினைத் துக் கொண்டு 'நான் உன்னுடையவன், நான் உன்னுடையவன்' என்றே படி அளந்து கொண்டிருக்கிறார். இப் படிச் சொல்லிக் கொண்டே கடவு ளிடம் கரைந்து போனார். கடவு ளிடம் கரைந்து போனதால், "இந்த ஆளுக்குப் பைத்தியம் பிடித்து விட்டது" என்றார்கள். கடை முத லாளி ஓடிவந்தார். வந்து பார்த்தால் குருநானக் தலையில் ஒரு ஒளிவட்டம் தெரிந்தது. விழுந்து கும்பிட்டார். "அப்பா! என்னிடம் இப்படி ஒரு மகான் வேலை செய்திருக்கிறாய் என்று இப்போது தான் தெரிந்தது. உன்னை நெருங்கவே முடியவில்லை. உன் னுடைய முகத்தில் அவ்வளவு ஒளி வீசு கிறது" என்றார்.

அப்போது குரு நானக்கிற்கு போதி மரமோ, அரச மரமோ, ஆலமரமோ ஞானத்தைக்

# புயல் நன்மை செய்யவில்லை!

நானும் அன்று ஹிந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் கலந்துகொண்டு மதுரை மேலமாசிவீதியில் காங்கிரஸ் ஆபீஸ் அருகே இருந்த பந்தலில் தீ வைத்த பலரில் ஒருவனாக இருந்தும், இன்று வினையறுத்துக் கொண்டிருக்கிறேன். அன்று இட்ட தீ ஹிந்தி மொழியிலே.... இன்று இட்ட தீ அடிவயிற்றிலே. அன்று ரத்தம் கொதித்த வயது - எதிர்த்தேன். நாட்டுநலன் புரியவில்லை- இன்று ரத்தக்கொதிப்பு வயது - வீட்டு நலன் விலகிற்று. தேசிய உணர்விற்கும், ஒற்றுமைக்கும் நிச்சயம் ஒரு பொதுமொழி இருந்திருக்க வேண்டும். அது இந்தியாக இருந்திருந்தால் இந்தியா இன்று நல்ல ஒற்றுமை உள்ள உணர்வுபூர்வமான நாடாக மாறியிருக்கும். மொழியால் பிரிந்தோம். பழி ஏந்தி நிற்கிறோம். இனிமேல் வேண்டாம் இந்தப் பிரிவு. அதனால் புயல் நன்மை செய்யவில்லை.

-கே. ராஜகோபால், சென்னை-92.




'நளசரிதம்' வாசிக்கும்போது நிடத நாட்டிற்குச் சனி பகவான் வருவதைக் கண்டு மக்கள் குழப்பம் அடைவதையும், மன்னன் நளன் படிப்படியாகச் சனியின் ஆதிக்கத்திற்கு உட்படுவதையும் படிக்கப் படிக்க, இனி என்னென்ன துயரங்கள் வருமோ? என்ற கவலை நெஞ்சை வாட்டுகிறது!

-ஆர். மோகன்,
திருவண்ணாமலை.

'ஹுவாங் தீ எழுப்பிய சீனச்சுவர் ஒரு பெரிய அதிசயம் அல்ல. அவனது கொடுங்கோல் ஆட்சியிலிருந்து தப்பிய அறிஞர்களிடம் உதயமான ஜப்பான் வரலாறுதான் மிக ஆச்சரியமான அதிசயமாய் உள்ளது.

-லெமூரியன்,
திருவண்ணாமலை.

'நடிகர் விஜயனின் "அமானுஷ்யபூமி" விஞ்ஞானம்- அஞ்ஞானம்- மெய்ஞானம் கலந்த முக்கூட்டு கலவை. அவரவர் பக்குவத்திற்கு ஏற்றவாறு அதை எடுத்துக் கொள்ளலாம். அதில் சங்கமித்திருக்கும்- தெய்வீகம் என்னைப் பெரிதும் ஈர்த்தது சார்!

-ஆர்.கே.லிங்கேசன்,
மேலகிருஷ்ணன்புதூர்.

'ஐம்பது வயதுக்கு மேலும், இளம் பிராயத்து நபர்கள்போல் செயல்பட்டு தங்கள் வாழ்வை பயன் உள்ளதாய் கழிக்கும் 50+ வாசக, வாசகி''ரின் கடிதங்கள் பிரமிப்பூட்டுகிறது. ஜங்ஷனுக்கு பல துணுக்கு மழை பொழிந்து வரும் ஓமலூர் சொ. மு. முத்து அவர்களை நாற்பது வயதுடையவர் என்றுதான் என் மனக் கண்ணில் நினைத்திருந்தேன். ஆனால், அவர் வயது எண்பத்துமூன்று என்ற தகவல் என்னை ஆச்சர்யக் கடலில் ஆழ்த்தி விட்டது!

-ஜி.கே.எஸ். மூர்த்தி,
கோபி செட்டிப்பாளையம்

# இசையரசி எம்.எஸ்.

உருக வைக்கும் தொடர்



"பரந்த புலமை என்பது வேறு, ஆழ்ந்த புலமை என்பது வேறு. எல்லாவற்றையும் பற்றிக் கொஞ்சம் தெரிந்திருப்பது பரந்த புலமை. ஒன்றைப் பற்றியே ஆழமாக அறிந்து வைத்திருப்பது ஆழ்ந்த புலமை. பரந்த புலமை உள்ளவரிடத்தில் ஆணவமும் அகங்காரமும்தான் இருக்கும். ஆழ்ந்த புலமை கொண்டவரிடத்தில்தான் அடக்கமும் அமைதியும் இருக்கும்" என்பார் ரசிகமணி டி.கே.சி.

எம்.எஸ். அவர்களுக்கு இசையைப் பற்றி மட்டுமே தெரியும். கற்ற நூலறிவைக் கொண்டு, வாமனன் காலளவு பேசுகின்ற மேலெழுந்த வாரிகளே இங்கே அறிவுஜீவிகளாக அங்கீகரிக்கப்படுவார்கள் என்கிற அழுகுணிக் கருத்தைப் பொய்யாக்கி, அடக்கமான மனிதர்களும் உலகப் புகழ்பெற முடியும் என்பதற்கு இசை அரசி எம்.எஸ். அவர்களே உதாரண மனுஷியாய் உயர்ந்து நிற்கிறார்.

'தன்னை மறந்தாள், தன் நாமம் கெட்டாள், தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே' என்று நாவுக்கரசர் பெருமான் தன் பாடல் ஒன்றிலே கூறுவதுபோல, எம்.எஸ். ஒருபோதும் தன்னை முன்நிறுத்தாது, எண்ணம் முழுவதையும் இசைக்கே வசமாக்கி, பக்தி மேலீட்டில் அந்த பரிபூரணத்துடன் தன்னையும், கேட்போரையும் ஐக்கியமாக்கி விடுவார்.

சங்கீதத்தை, பரமனை அடைவதற்கு பலமான மார்க்கமாகக் கருதி வந்தவர்கள் பலர். நாதமே பிரம்மம் என்றும் நாதோபாசனை என்றும் சங்கீதம் மதிக்கப்பட்டு வந்தது. 'இருபத்திரண்டு சுருதிகள் சேர்ந்த ஸ்வரங்களே பரதேவதையின் சொரூபமாகும்' என்று முத்துஸ்வாமி தீட்சிதர் மொழிகிறார். தில்லையம்பலத்தில் 'திரிகுடுத்தை' என ஆடி நிற்கும் அமலனும் கையில் உடுக்கை எனும் இசைக்கருவியுடன் காட்சியளிக்கிறார்.

நம் சாஸ்திரத்தில் ஒவ்வொரு ராகத்துக்கும் ஒவ்வொரு தேவதை உண்டென்று கூறப்படுகிறது. ராக ஆலாபனத்தின் முக்கியமான நோக்கமே ராகத்தின் ரூபங்களை சுத்தமாகவும் தெளிவாகவும் விளக்குவதுதான். ஒரு தேவதையை வர்ணிக்கும்போது எப்படி நாம் பாதத்திலிருந்து கேசம் வரை அதன் சொரூபத்தை வர்ணிக்கிறோமோ, அம்மாதிரியே ராக ஆலாபனங்கள் செய்யும்போது அந்த ராகத்தின் சொரூபத்தை மந்திர ஸ்தாயியிலிருந்து தார ஸ்தாயி வரையில் அதன் அழகைப் படிப்படியான சஞ்சாரங்களினால் விவரிக்க வேண்டும். இதில் தேர்ந்தவர்களே நாத உபாசகர்கள் ஆவார்கள். நம் முன்னோர்கள் இந்த வகையிலே சங்கீதத்தை வளர்த்திருக்கிறார்கள்.

அவர்கள் பக்தியில் சிறந்தவர்கள். ஆகவே ஆதிமுறையில் பாடல்களை அமைத்தார்கள். இவர்கள் இயற்றிய பாட்டுக்களில் ஒரு விசேஷம், ராகத்தினுடைய சொரூபங்களையெல்லாம் பாட்டுக்களின் வாயிலாகவே விளக்கியிருக்கிறார்கள். இதைத்தான் நாம் 'கீர்த்தனங்கள்' என்கிறோம். இந்தக் கீர்த்தனங்கள் பக்தியை ஊட்டுவதால் பலரும் கேட்டு ரசிக்க முடிந்தது. அவற்றில் பொதிந்திருக்கும் ராகத்தின் சாயையும் உருவமும் கேட்போர் மனதில் பதிந்துவிட்டன. இந்தக் காரணத்தினால்தான் நம் நாட்டில் நல்ல சங்கீதத்தை அக்கால மக்கள் எல்லோரும் அறிந்து அனுபவிக்க முடிந்தது.

ஆனால் காலப்போக்கில் நமது சங்கீதத்தில் இருந்த தெய்வாம்சத்தைக் குறைத்து, பல வித்வான்கள் அதைப்

**ஆர்.சி. சம்பத்**

பொழுதுபோக்குக் கலையாக ஆக்கிவிட்டார்கள்.

உ.வே. சாமிநாதய்யர் ஒரு கட்டுரையில், "அரசர்கள் காலையில் விழித்து எழும்போதே சங்கீதத்தைக் கேட்டு எழுவார்கள். அவர்களுடைய முன்னோர்களின் குண விசேஷங்களைத் தெரிவிக்கும் பாட்டுக்களைப் பாடி அந்த மன்னர்களை எழுப்புவதற்கென்று தனியே நியமிக்கப்பட்ட சில சங்கீத வித்வான்கள் இருந்தார்கள். இவர்களைச் 'சூதர்' என்றும் இங்ஙனம் பாடுதலைத் 'துயிலெடை நிலை' என்றும் சொல்லுவார்கள். அரசன் போர்க்களத்திலே புண்பட்டு விழுந்து கிடந்தால் அந்தப் புண்ணால் உண்டான துன்பத்தைச் சங்கீதத்தால் போக்குவது அந்தக் கால வழக்கம்" என்று எழுதுகிறார். சிற்றின்பப் பிரியர்களான சமஸ்தான சிற்றரசர்கள் காலத்தில் இசை இறங்குமுகம் கண்டது.

ஸ்ரீ தியாகராஜர் வெறும் சங்கீத வித்வானும் சாகித்திய கர்த்தாவும் மட்டுமல்ல, பகவானுக்கே தம்மை அர்ப்பணம் செய்து, தம் வாழ்நாளிலேயே ஆத்மானுபூதி அடைந்தவர். தஞ்சாவூர் மன்னன் அவரைத் தம் சபைக்கு அழைத்தபோது, "பணத்திலும் பதவியிலும் என்ன சுகம் இருக்கிறது? பகவானுடைய சந்நிதியில் செய்யும் சேவையிலல்லவா உண்மையான சுகம் உண்டு!" என்று பாடிய தியாகபுருஷர். அதுமட்டுமல்ல, "பக்தி இல்லாத வெறும் சங்கீதத்தினால் என்ன பிரயோஜனம்?" என்றும் பாடியிருக்கிறார்.

எம்.எஸ்.ஸும் அவரையே தனக்கு ஆதர்ஷமாகக் கொண்டு 'ஆட வைத்த போக்கிலெல்லாம் ஆடுவதாய், ஆண்டவனே பாட வைத்துப் பாடுவதாய்' எண்ணுகின்ற பக்குவம் பெற்று, பகவானுக்கே தம் இசையை அர்ப்பணம் செய்த பரம பாகவத சிரோன்மணி ஆவார்.

ஆண்டுதோறும் இமயமலையைக் கடந்து எத்தனையோ ஆயிரம் வெளிநாட்டுப் பறவைகள் இந்த மண்ணில் சரணாலயம் தேடி வந்து, தங்கி மகிழ்ந்து, மீண்டு செல்கின்றன. ஆனால் இந்த மண்ணிலிருந்து எம்.எஸ். என்ற ஒற்றைப் பறவை இமயத்தைக் கடந்து பறந்து பற்பல தேசங்களில் நமது மண்ணின் இசையை மணக்கச் செய்தது.

அருளுக்கு நிவேதனமாய், அன்பினுக்குக் கோவிலாய், நெஞ்சின் இருளுக்கு ஞாயிறாய், பொருளுக்கு வழியறியா வறிஞர்க்கு செல்வமாய், புன்மைச் சுருளுக்கு நெருப்பாகி நின்ற எம்.எஸ்.ஸின் இசை அண்டை நாட்டு மக்கள் முன்னும் அரங்கேறி, அவர்களின் மனோரதத்திற்குப் புரவி பூட்டியது. புது வழி காட்டியது!



ரஷ்யாவின் தலைநகரான மாஸ்கோவில் அவரது கச்சேரி ஏற்பாடாகியிருந்தது. எம்.எஸ். அவர்களுக்கு அதுவே முதல் ரஷ்யப் பயணம்.

கச்சேரி நடைபெறவிருந்த அரங்கத்தைப் பார்த்து வர, எம்.எஸ்.ஸை அழைத்துச் சென்றனர்.

அரங்கத்தைப் பார்த்ததும் எம்.எஸ். பிரமித்து விட்டார். ஆறாயிரம் ரசிகர்கள் அமர்ந்து கேட்கக் கூடிய



மாபெரும் அரங்கம். பரந்த மண்டபம்.

'இவ்வளவு பெரிய அரங்கா? நம் மொழியும், இசையும் அறிந்திராத தேசம். அதுவும் கர்நாடக இசையைக் கேட்க எத்தனை பேர் வருவார்களோ? என்ன வரவேற்பு கிடைக்குமோ?' என்றெல்லாம் அவர் மனதில் பயம் பிடித்தது.

மறுநாள் கச்சேரி தினம். தயக்கமும் தவிப்பும் நிறைந்த மனதோடு அவர் அரங்கினுள் நுழைந்தபோது, அந்தப் பேரதிசயத்தைக் கண்டு திகைத்துப் போனார். ஓர் இடம்கூட காலியில்லாமல் அரங்கு முழுக்க ரசிகர்கள் நிரம்பியிருந்தனர். உள்ளே இடம் கிடைக்காமல் அரங்கத்தின் வெளியிலும் கூட்டம் நின்றது.

இவ்வளவு பெரிய கூட்டத்தின் முன்பு அதுவும் வெளிநாட்டினர் முன்பாக எப்படித்தான் பாடப் போகிறோமோ என்ற அச்சம் கவ்வியது.

இறைவனைத் துதித்து எம்.எஸ். பாடத் தொடங்கினார். அவ்வளவுதான், அந்த தேவகானத்தில் திளைத்த ரஷ்யர்களின் இதயங்கள் இறக்கை கட்டிக் கொண்டு பறந்தன. ஆளை அந்தரத்தில் உயர்த்தி ஐந்தாம் பிறையில் அமர்த்தி விடும் எம்.எஸ்.ஸின் மாயக் குரலில் மயங்கிப் போனார்கள்.

இரண்டு தம்புராக்களின் சுருதியில் எம்.எஸ். கச்சேரியை அதியற்புதமாக நடத்தி முடித்தார். ரசிகர்களுக்கு நன்றியுடன் வணக்கம் தெரிவித்து விட்டு அவர் மேடையை விட்டு இறங்க ஆரம்பித்தது முதல், அவர் எடுத்து வைத்த அவரது ஒவ்வொரு காலடிக்கும் கைதட்டலில் அரங்கமே அதிர்ந்தது.

அரங்கின் வெளியே முன் வாசலில் அவருக்கென வந்திருந்த வண்டியில் அவர் ஏற, அது நகரும் வரை அந்தக் கைதட்டல் ஓயவில்லை.

திருப்புகழ், தேவாரம், திருவாசகம், குற்றாலக் குறவஞ்சி போன்ற

பழந்தமிழ் இலக்கியங்களிலிருந்து பாடல்களைத் தேர்ந்தெடுத்துப் பாடி தமிழிசைக்குத் தொண்டாற்றிய எம்.எஸ்., சங்கரர், ராமானுஜர், மத்வர் போன்றோர் இயற்றிய சமஸ்கிருத ஸ்லோகங்களையும் பாடி, எண்ணெயும் சீயக்காயும் போல எதிரும் புதிருமாக இருந்த இருவேறு துருவங்களையும் இசைத்து இயங்கினார், இணைய மறுக்கும் வில்லின் இரு முனைகளை இழுத்துக் கட்டும் நாணைப் போல!

கும்பகோணம் மகாமகத் திருவிழாவில் இளம் வயதிலேயே ஒரு அரிய சாதனை படைத்தவர் எம்.எஸ்.

ஒருமுறை, பிரபல சினிமா டைரக்டர் கே. சுப்பிரமணியம் மகாமகக் கண்காட்சியின் கலைப் பகுதிப் பொறுப்பை ஏற்றிருந்தார்.

அந்த வருடம் எம்.எஸ்.ஸின் வாய் வழி மலர்ந்த தோய்மது நிறைந்த பாடல்களைக் கேட்க கூட்டம் கட்டுக்கடங்காமல் போனது. அதனால் மற்றொரு நாளும் எம்.எஸ்.ஸின் கச்சேரியை கே. சுப்பிரமணியம் ஏற்பாடு செய்ய வேண்டியிருந்தது.

இதுபோல ஒருவரது கச்சேரி, இரண்டு முறை அக்கண்காட்சியில் நடைபெற்றது அதுவே முதல் தடவை.

'எம்.எஸ். அம்மாவை அடிக்கடி சந்தித்து வரும் அன்பர்களில் திரு. நல்லி குப்புசாமி அவர்களும் ஒருவர். அவர் சொல்கிறார்:

"என் மூத்த மகளின் திருமணம் நிச்சயமானவுடனேயே நான் நிச்சயித்தது இரண்டு விஷயங்கள் : ஒன்று, திருமணத்தில் நாமகிரிப்பேட்டை கிருஷ்ணன் நாதஸ்வர இசை இடம் பெற வேண்டும். இன்னொன்று எம்.எஸ். அம்மாவின் தெய்வீகக் குரல் ஒலிக்க வேண்டும்.

இப்படி முடிவு செய்தபிறகே சத்திரம் பார்க்கத் தொடங்கினேன். எதுவும் கிடைக்கவில்லை. கடைசியில் உட்லண்ட்ஸ் ஓட்டல் திறந்த வெளியில் பிரத்யேகமாகப் பந்தல் போட ஏற்பாடு செய்து அதில்தான் திருமணம், வரவேற்பு என்று எல்லாமே நடத்தியாக வேண்டிய கட்டாயம். திறந்தவெளியில் எம்.எஸ். அம்மா பாடுவார்களா என்று எனக்குள் ஒரு பயம், ஐயம் இருந்தது. நேராகப் போய் தயங்கித் தயங்கி விவரம் சொன்னேன். 'அதனாலென்ன?' என்று பெருந்தன்மையுடன் வந்து அற்புதமாகக் கச்சேரி செய்து எங்கள் குடும்பத்தைப் பெருமைப்படுத்தினார்கள். அன்று தொடங்கிய நட்பு நாளொரு மேனியாக வளர்ந்து கொண்டிருந்தது.



பின்னர் நானும், என் நண்பர் சென்னைத் தொலைக்காட்சியின்

முன்னாள் இயக்குநர் ஏ. நடராஜன் அவர்களும் மாதம் ஒருமுறை எம்.எஸ். அம்மாவின் இல்லத்திற்குச் சென்று அவரைக் கண்டு நமஸ்கரித்து வாழ்த்துப் பெறுவதையும், பல்வேறு விஷயங்கள் குறித்து சிறிதுநேரம் பேசிக் கொண்டிருப்பதையும் வழக்க மாக்கிக் கொண்டோம்.

எம்.எஸ். அம்மாவின் விருந் தோம்பல் தன்னிகரில்லாதது. எத்த னையோ தடவை சதாசிவம் அவர்கள் எம்.எஸ். அம்மா, நான் மூன்றுபேர் மட்டும் அவரது வீட்டில் சாப்பிட்டி



ருக்கிறோம். ஒரு புதுவிதமான பானம் எம்.எஸ். அம்மா வீட்டில் தருவார்கள். ஹார்லிக்ஸ் சுக்கு கலந்த ஸ்பெஷல் பானம் அது. கேரளாவைச் சேர்ந்த ஒரு சமையல் கலைஞர். அவர் வீட்டில் வேலை செய்து வந்தார். அவரது கைவண்ணம் இந்த ஹார்லிக்ஸ், சுக்கு காம்பினேஷன். சாப்பிட ருசியாக, தொண்டைக்கு இதமாக இருக்கும்.

அவருக்கு 'சங்கீத கலாநிதி' விருது வழங்கப்பட்ட ஆண்டில், அந்த விருதை அவர் பெறுகின்ற நிகழ்ச்சி யில் அணிந்து கொள்ளவென்று பிரத்யேகமாக ஒரு பட்டுப்புடவை நெய்து அவருக்கு எங்கள் நல்லி நிறுவனம் சார்பில் அனுப்பி வைக்கப் பட்டது. சற்று வித்தியாசமான ஊதா கலர் புடவை அது. அனைவரின் கண்களையும் அந்தப் புடவை கொள்ளை கொண்டு விட்டது. மறுநாள் முதல் அதே மாதிரி கலரில் புடவை வேண்டும் என எங்கள் கடைக்கும் ஏராளமான கோரிக்கை கள். வாடிக்கையாளர்களின் விருப் பத்தை நிறைவேற்ற அப்புறம் அதே மாதிரி புடவைகளை நெய்து வந்தோம். 'எம்.எஸ். ப்ளூ' என்றே அந்த கலருக்குப் பெயர் நிலைத்து விட்டது.

கணவரின் மறைவுக்குப் பின்னால் இவரது உடல் நலமும் அவ்வப்போது தளர்ச்சியடைந்தது. ஒரு முறை உடல்நலக் குறைவு காரணமாக இசபெல்லா மருத்துவமனையில் எம்.எஸ். அம்மா அனு மதிக்கப்பட்டிருந்தார். யாராக இருந்தாலும் ஒரு சமயத்தில் ஒருவருக்கு மேல் அவர் படுக்கைக்கு அருகே நிற்கக் கூடாது என்று மருத்துவர்கள் கட்டளையிட்டிருந்தார்கள். நானும் நடராஜனும் போனோம். அந்தக் கட்டளையை மதித்து முதலில் நான் மட்டும் போய்ப் பார்த்தேன். என்னைப் பார்த்ததும் அவர் கேட்ட முதல் கேள்வி: "அவர் வரலியா?"

"அவர் வெளியே இருக்கிறார்" என்றேன். பிறரது நண்பர்களையும் மறக்காத பண்பு அது" என்கிறார் நல்லி.

(பாடுவார்)

# சரித்திரம் ஜோர்!

## மன்னரின் மனதை ரணமாக்கிய மகன்...

■ கௌதம நீலாம்பரன்

சிவாஜி-

இந்திய சரித்திரம், 'வீர சிவாஜி' என்று விளித்து, விழி விரிய நோக்கிப் போற்றிக் கொண்டாடும் மராட்டிய மாவீரனின் பெயர்.

ஒரு சாதாரணக் குடியானவ இளைஞனும், தன் வீரத்தாலும், விவேகத்தாலும் வெற்றிகளைக் குவித்து, அரியணையில் ஏறியமர்ந்து, நாடாளும் மன்னனாக முடியும் எனப் புதுச் சரித்திரம் உருவாக்கிய வெற்றிப் புரவலன்!

இந்த சத்ரபதி மட்டும் தோன்றியிருக்க

வந்தபிறகே பேசியதற்கு நன்றி.

பகவானே! உங்கள் பேச்சைக் கேட்க வேண்டும் என்பதற்காக கடந்த எட்டு ஆண்டுகளாகக் காத்திருக்கிறேன். கடந்த எட்டு ஆண்டுகளாக நான் வாழ்ந்தது துறவு வாழ்க்கையைத் தான். என்னையும் உங்கள் சிஷ்யையாக ஏற்றுக் கொண்டு எனக்கு மோட்சம் அளியுங்கள்!" என்று அந்தச் சிறுமி சொல்ல, முழுமனதோடு அவளுக்கு தீட்சை வழங்கினார் புத்தர்.

அருகிலிருந்த சீடர்கள் எல்லாம் புத்தம்! சரணம்! கச்சாமி என்று சொல்லி புத்தரைப் போற்றினார்கள்.

இந்தச் சிறுமி புத்தரின் தீட்சைக்காக எப்படியெல்லாம் கசிந்துருகிக் காத்திருந்தாளோ அதுபோல நாமும் கடவுளுக்காகக் கசிந்துருகிக் காத்திருக்க வேண்டும்.



ஏன்?

கடவுளுக்காக நாம் காத்திருக்கும்போது கடவுளை நோக்கி நம் மனத்தைச் செலுத்தும் போது, இந்த லௌகீக வாழ்க்கையின் அற்பமான விஷயங்களிலிருந்து நாம் எளிதில் விடுபட்டு வருகிறோம்.

"என் மகனை எவ்வளவு அன்பு காட்டி வளர்த்தேன்! வளர்ந்தபிறகு அவன் நம்மை வயோதிகர் இல்லத்துக்கு அனுப்பிவிட்டானே!" என்று கடவுளுக்காகக் காத்திருக்கும் எந்த தந்தையும் நினைக்க மாட்டார்.

"என் மாமியார் என்னைக் கொடுமைப் படுத்தியது மாதிரி நானும் என் மருமகளைக் கொடுமைப்படுத்த வேண்டும்!" என்று கடவுளுக்காகக் காத்திருக்கும் எந்த மாமியாரும் எண்ண மாட்டாள்.

செலவுக்குப் பணமில்லையே என்கிற புலம்பல் அவர்களிடம் இருக்காது. அதைச் சாப்பிட வேண்டும், இதைச் சாப்பிட வேண்டும் என்கிற ஆசை இருக்காது. எதையும் எதிர் பார்க்காமல் தவம் செய்யும் துறவிகள் போலத்தான் அவர்கள் இருப்பார்கள்.

கடவுளை நோக்கி நான் செல்லத் தயார். ஆனால் என்னை ஏற்றுக் கொள்வாரா இறைவன் என்கிற சந்தேகம் உங்கள் மனதில் இருக்கிறதா?

அப்படியொரு சந்தேகம் எதுவும் உங்கள் மனதின் ஏதோ ஓர் ஓரத்தில் இருந்தால்கூட அதை அடியோடு துடைத்து எறிந்துவிடுங்கள்.

'இவன் புண்ணியம் செய்தவன்! இவனை ஏற்றுக் கொள்ள வேண்டும். இவன் பாவம் செய்தவன்! இவனை ஏற்றுக் கொள்ளக் கூடாது!' என்று இறைவன் நினைப்பதே இல்லை.

இறைவன் முன்பு எல்லோருமே சமம்தான்! அந்த இறைவனுக்காகக் கசிந்துருகிக் காத்திருக்க ஆரம்பிப்போம். பிறகு, உங்கள் வாழ்வில் இன்பம் தானாகவே பெருகி ஓடும்.

(இன்னும் இன்பம் வரும்)

தொகுப்பு : ஏ.ஆர். குமார்

# இசையரசி எம்.எஸ்.

உருகவைக்கும் தொடர்

'கர்னாடகம்' என்ற புனைப்பெயரில் கல்கி இதழில் 'ஆடல் பாடல்' என்ற பகுதியில் இசை, நாட்டியம், சினிமா பற்றி விமர்சனங்களை எழுதி வந்தார், எழுத்தாளர் 'கல்கி!' ஏப்ரல் 1, 1942 கல்கி இதழில் எம்.எஸ். பற்றி அவர் எழுதுகிறார்:

'ஸ்ரீமதி எம்.எஸ். சுப்புலட்சுமியின் இசைத்தட்டு ஒன்று வெளியாகிறதென்றால் அதை ஒரு சங்கீத உற்சவமாகக் கொண்டாடுவது இசை உலகில் வழக்கமாகி விட்டது. 'ஸரகுன பாலிம்ப ஸமயமுரா' என்னும் கேதாரகௌள கீர்த்தனத்தை ஸ்ரீமதி எம்.எஸ். இந்த நெ. 18685 பிளேட்டில் பாடியிருக்கிறார்.

பல்லவியில் 'ஸரி எவ்வரு' என்னுமிடத்திலும் சரணத்தில் 'காத்ஸலேதா' என்னுமிடத்திலும் விழுந்திருக்கும் சங்கதிகளை ஒரு தடவை கேட்டுவிட்டால், மீண்டும் மீண்டும் ஆயிரந்

■ ஆர்.சி. சம்பத்

தடவை கேட்க ஆசை உண்டாகும். சரணத்தின் முடிவில் இரண்டாங் காலத்தில் பாடியிருக்கும் சிட்டா ஸ்வரம் அபரிமிதமான துரிதத்துடன் போகிறது. இவ்வளவு வேகத்திலும் ஸ்வரங்கள் ஒன்றோடொன்று கலந்து விடாமல் அதனதன் ஸ்தானத்தில் மாதுளம் பழத்திலுள்ள முத்துக்களைப் போல தனித்தனியாக ஜ்வலிக்கின்றன.' - இது கல்கியின் சிலாகிப்பு.

அப்போது தமிழிசை இயக்கம் தீவிரமாக வளர்ந்து வந்த நேரம். அப்போது (1942) தமிழிசைச் சங்க விழாவில் பேசிய ராஜாஜி, "நாதமும் உணர்ச்சியும் கலந்து உண்டாகும் அமுதத்திற்கு இசை என்று பெயர். நாம் அறியாத பாஷையில் நமக்குப் பொருளற்ற சப்தத்தைக் கொண்டு சம்பாதிக்கும் ஸ்வர இன்பம், குறைவுபட்ட இன்பமேயாகும். அதைவிட வெறும் வீணை, பிடில், புல்லாங்குழல், மிருதங்கம் இவைகளை வைத்துக் கொஞ்ச நேரம் கச்சேரி நடத்திவிட்டு முடிப்பது நலம். வாய்ப்பாட்டு வித்வான் களை நீண்ட நேரம் பாடச் சொல்லி தொண்டையை சிரமப்படுத்திக் கொள்ளச் செய்வானேன்? மொழியும் பொருளும் இருந்தால்தான் மானிடக்குரல் இசையாகும். இல்லாவிடில் வெறும் ஓசைதான்.





தாய்மொழியாகாத வேறு பாஷையில் பாடியதைக் கஷ்டப்பட்டு பொருள் உணர முடியுமானாலுங் கூட, தாய்பாஷையில் ஒரு பாட் டைக் கேட்பது போல், நம் முடைய உள்ளம் கரையாது; உணர்ச்சிப் பொங்காது.

இந்த உண்மை சிலருக் குப் புலப்படாமல் போவ தற்குக் காரணம், அவர்கள் ஆயுள் முழுவதும் தெரியாத பாஷையிலேயே பாட்டுக்கள் கேட்டுக் கேட்டு உண்டான பழக்கமேயொழிய வேறில்லை.." என்று எடுத் துரைத்தார்.

ராஜாஜியின் அறிவுரை யைத் தனது வாழ்வின் வழி காட்டுதலாகக் கொண் டிருந்த எம்.எஸ்.ஸும் தேவாரம், திருப்புகழ், குற் றாலக் குறவஞ்சி, ஆழ்வார் கள் பாசுரம் ஆகியவற்றி லிருந்து பற்பலப் பாடல் களை கர்னாடக இசை மேடைகளில் பாடி, கேட்

போர் நெஞ்சில் தேன்மாரிப் பொழிந்தார்.

ஆனால், இதற்கு கர்னாடக இசைப் பண்டிதர்களிடமிருந்து எதிர்ப்பு கிளம்பியது.

அந்நாளைய கல்கி இதழில் இதுபற்றி வெளிவந்துள்ள செய்தி:

'ஸ்ரீமதி எம்.எஸ்.சுப்புலட்சுமி தமது புரோகிராமில் நாலு தமிழ்க் கீர்த்தனங்களும், மற்ற கீர்த்தனங்கள் நாலும் போட்டு அனுப்பினார். தமிழல்லாத கீர்த்தனம் இன்னொன்றாவது புரோகிராமில் சேர்த்து விட வேண்டுமென்று அகாடமி நிர்வாகிகள் ரொம்ப ரொம்ப வற்புறுத்தினார்கள். ஒரு தெலுங்குப் பாட்டு அதிகமானால் கர்னாடக சங்கீதம் காப்பாற்றப்படும் என்று ஏன் நினைத்தார்களோ தெரியவில்லை. தங்கள் இஷ்டப்படி பாட வைக்கத் தங்களுக்குச் சட்டபூர்வமான உரிமை இருப்பதாகக் கூட பயமுறுத்தினார்கள். இதற்கெல்லாம் எம்.எஸ். அசையவில்லை. எட்டு கீர்த்தனங்களில் நாலு தமிழாய்த்தான் பாடினார். அவருடைய கச்சேரிக்குத் தான் எல்லா நாட்களையும் விட அதிகம் பேர் வந்திருந்தார்கள்.

அகாடமியார் இத்தகைய பாஷை துவேஷக் கொள்கையை அனுசரிப்பதினால் ஒன்றும் மோசம் முழுகிப் போய்விடாது என்பது நிச்சயம். பூனை கண்ணை மூடிக் கொண்டால் உலகம் அஸ்தமித்து விடாது. தமிழ் மக்களின் ஏகோபித்த விருப்பம் என்னும் மகத்தான பலம் தமிழ் இசை இயக்கத்துக்கு இருக்கிறது. தமிழிசையினால் கர்னாடக சங்கீதத்தின் பெருமையும் குன்றி விடாது. மாறாக மேன்மை அடையவே செய்யும்.





-(1.10.1943 'கல்கி' இதழ் 'ஆடல்பாடல்' பகுதி)

எம்.எஸ். அவர்களின் கச்சேரி, ஒருமுறை லண்டனில் நடந்த இந்தியத் திருவிழாவின்போது அரங்கேற்றப்பட்டது.

இந்திய அரசின் அழைப்பை ஏற்று, இந்த விழாவில் பங்கேற்றுப் பாடி, ஆங்கில இசை ரசிகர்களின் உள்ளங்களைக் கொள்ளை கொண்டார் எம்.எஸ்.! இதற்கு சன்மானமாக இந்திய அரசு, எம்.எஸ். அவர்களுக்குக் கணிசமான தொகை ஒன்றுக்கு 'செக்'கை அனுப்பித் தந்து பெருமை செய்தது.

ஆனால், எம்.எஸ். அதை ஏற்றுக் கொள்ளவில்லை. 'இந்திய தேசத்தின் பெருமையையும், அதன் இசை அருமையையும் உலகிற்கு எடுத்துக் காட்ட எனக்கு இப்படியொரு வாய்ப்பளித்த அரசுக்குத்தான் நான் நன்றி சொல்ல வேண்டும். நான் செய்த இந்தக் கச்சேரியை தேசத்திற்கு நான் ஆற்றியத் தொண்டாகவே நினைக்கிறேன். இதற்குச் சன்மானம் பெறுவது சரியாகாது' என்று அந்த 'செக்' கைத் திருப்பி அனுப்பினார் எம்.எஸ்.

எம்.எஸ். அவர்களின் வாழ்வில் அவருக்குக் கொடுக்கப்பட்ட ஒரு 'செக்', கொடுத்தவருக்கே திருப்பி அனுப்பப்பட்டது இது ஒன்றாகத் தான் இருக்கும். மற்றபடி, அவருக்கு வழங்கப்பட்ட காசோலைகள் எல்லாம் நற்பணிகளுக்கே அர்ப்பணிக் கப்படுவதுதான் வழக்கம்.

ஆதிசங்கரர் அருளிய பஜகோவிந் தம், ஸ்ரீவிஷ்ணு சகஸ்ரநாமம் இசைத் தட்டுக்களின் ராயல்டியை ஸ்ரீராம கிருஷ்ண மடத்திற்கென வழங்கினார். இதன்மூலம் பல லட்சங்கள் இந்த மடத்தின் நற்பணிகளுக்குக் கிடைத் திருக்கின்றன.

பத்து மொழிகளில் எம்.எஸ். பாடி வெளிவந்துள்ள ஓர் இசைத் தட்டின் ராயல்டி, நமது பண் பாட்டையும் கலாசாரத்தையும் உலகுக்கு எடுத்தியம்பி வரும் பாரதிய வித்யா பவனுக்கு அளித்தார்.

காமாட்சி சுப்ரபாத ராயல்டி வருமானம் அந்தக் கோவிலுக்கே தரப்பட்டது. எம்.எஸ். அவர்கள் சிங்கப்பூர், மலேசியா பயணத்தில் நிகழ்த்திய கச்சேரிகளின் சன் மானத்தை காமாட்சி அம்மன் கோவில் கோபுரத் திருப்பணிக்கே வழங்கியிருக்கிறார்.

நிதியுதவிக் கச்சேரிகள் என் றில்லை; சபா கச்சேரிகள், திருமண விழாக்களில் அவர் நடத்தும் இசை நிகழ்ச்சிகள் எல்லாவற்றின் மூலம் கிடைக்கும் தொகையையும் கூட அவர் பொதுப்பணிகளுக்கும் அறப்பணிகளுக்குமே வழங்கி வந்தார்.

மேற்கு ஜெர்மனியின் தலை நகரான பான் நகரில் 'லா - ரிடோன்ட்' அரங்கம் மிகப் புகழ் பெற்றது.

மேற்கத்திய இசை உலகின் மாமேதையும், 'மேலை நாட்டிசையின்







தந்தை என்று போற்றப்படுபவருமான பீத்தோவன் இந்த அரங்கிலேதான் தனது இசையை அரங்கேற்றினார்.

இந்த உலகப்புகழ் பெற்ற அரங்கில் இந்திய இசை மகள் எம்.எஸ்.ஸும் நமது கர்னாடக இசையை அரங்கேற்றி அமுதகானம் பொழிந்தார். எம்.எஸ். எந்த நாட்டின் இசையரங்கில் பாடினாலும், அங்கே நமது நாட்டுக்கும், நாட்டு மக்களுக்கும் பெருமையையும், புகழையும், மகிழ்ச்சியையும் தேடித்தர வேண்டும் என்பதில் முழு கவனத்தோடு இருப்பார்.

ஒரு பரிசளிப்பு விழாவின்போது, எம்.எஸ். தனது நன்றியுரையில் தம்முடைய ஆக்க சக்தியும், ஊக்க சக்தியுமான திரு. சதாசிவம் அவர்களே, தம்முடைய இசைக்கு மட்டுமன்றி, அறப்பணிக்கும் ஆதார மானவர் என்று "பொதுப் பணிக்காக நீங்கள் தருகிற இந்தப் பரிசுக்கு யதார்த்தத்தால் நான் பாத்திர மாகிறேன். ஆனால், நியாயப்படி இதற்குப் பாத்திரம் என் கணவரே" என்றார் உணர்ச்சி பெருக்குடன்.

அடுத்துப் பேசிய சதாசிவம், "சுப்புலட்சுமி என்னைப் புகழ்ந்திருப்பது, அவளது சுபாவத்துக்கு ஏற்றதேயாகும். ஆனால், என்னை நானாக ஆக்கியிருப்பது அவளுடைய சங்கீதம்தான் என்பதைத் தெரிந்து கொள்ளாமலே அவள் பேசுகிறாள்" என்றார்!

வண்டினம் வந்துத் துதிபாடி மதுவருந்தாவிட்டால், மலர்கள் மகரந்தச் சேர்க்கை அற்று பிறவிப் பயன் பெறாமல் மரித்துப் போகும் என்பது உண்மையென்றாலும், பூக்கள் தேன் சிந்தாவிட்டால் வண்டினமும் வயிறு காய்ந்து வாழ்விழந்து போகும் என்பதும் மறுக்கவியலாத மறுபக்க உண்மைதானே!

- அடுத்த இதழில் நிறைவுறும்.

# இசையரசி எம்.எஸ்.

உருக வைக்கும் தொடர்

தவ வலிமையினால் எமனையும் வெல்லலாம் என்கிறது மார்க்கண்டேய புராணம். அதுவும், கதை நடந்தது கைலாயத்திலோ, கங்கைக் கரையிலோ அல்ல; நம் தமிழ்நாட்டின் காவிரிக் கரையில், திருக்கடையூர் திருத்தலத்தில், “கோணிலா வாளும் அஞ்சேன்; கூற்றுவன் சீற்றம் அஞ்சேன்” என்று சம்பந்தப் பெருமான் சாற்றியதும் தனது தவ வலிமையின் மேலிருந்த தாளாத நம்பிக்கையில்தான்.

‘கூற்றம் குதித்தலும் கைகூடும்; நோற்றலின்
ஆற்றல் தலைப் பட்டவர்க்கு’

என்கிறார் வள்ளுவரும்.

திண்ணைப் பள்ளிக்கூடம் கூடச் சென்றறியாத குஞ்சம்மா, எப்படி ‘சேவா சதனம்’ படத்தின் மூலம் ‘கோகில கான எம்.எஸ். சுப்புலட்சுமி’யாகி, பின் சங்கீத கலாநிதியாகி, பத்மபூஷனாகி, பற்பல பல்கலைக்கழகங்களால் ‘டாக்டர்’ எம்.எஸ்.ஆகி வாழும் காலத்திலேயே ‘பாரத ரத்னா’ ஆனார்?

தவம் தான், இசையையே தவமாகக் கொண்டு, தேனும், நாணும் தீஞ்சுவைப் பாடல்களால் கேட்போரின் இதயங்களில் இன்ப விளக்

■ ஆர்.சி. சம்பத்

14

கேற்றி, அவர்களின் ஆன்மாவில் ஒலி சமைத்த, தனது தவ வலிமையால் தான் - இத்தனை புகழையும் எய்தினார்.

பாட்டுத் திறத்தாலே இவ் வையத்தைப் பாலித்திட வந்த எம்.எஸ்.ஸின் இசை பற்றி சங்கீத விமர்சகர் சுப்புடு எழுதுகிறார். "இசையைத் தவிர அவருக்கு வேறு ஒன்றுமே தெரியாது... 'எவன் ஒருவனுக்கு இறைவன் பெயரைச் சொன்ன உடனேயே உடல் சிலிர்ப்போ அல்லது கண்கள் பணிப்பதோ ஏற்படுகின்றனவோ, அவனுக்கு மறுபிறவி கிடையாது' என்கிறது மறை. இந்த நோக்கில் எம்.எஸ்.ஸுக்கு மறுபிறவி கிடையாது!

இசையினால் உலகம் உய்ய வேண்டும் என்பது நியதி. அவருடைய இசை பல தர்ம ஸ்தாபனங்களுக்கு பல லட்சங்கள் திரட்டித் தந்திருக்கிறது. இந்தக் கீர்த்தியும் பெருமையும் வேறு எந்த வித்வானுக்கும் கிட்டிய தில்லை.

மேலை நாடுகளில் 'இந்திய சங்கீதம்' என்றால் 'இந்துஸ்தானி சங்கீதம்' என்றுதான் பொருள். இத்தனைக்கும் நமது சங்கீதத்தின்



விரிவும் ஆழமும் வடக்கத்திய சங்கீதத்தில் கிடையா.

இந்தச் சூழ்நிலையில் எம்.எஸ். தான் முதன்முதலாக ஐ.நா. சபையிலும், பின்னர் அமெரிக்காவின் கோடிக்குக் கோடி பாடி, கர்நாடக சங்கீதத்தின் புகழ்க் கொடியை வானளாவப் பறக்கவிட்டு வந்தார்.

நடுவிலே ஒரு மேற்கத்திய மெட்டு வேறே!

ராஜாஜி ஒரு வசனம் எழுத, வானொலியைச் சேர்ந்த ஹாண்டல் மானுவெல் மேற்கத்திய சங்கீதத்தில் மெட்டமைக்க... எல்லாம் சரி, பாட வேண்டிய நிர்ப்பந்தம் எம்.எஸ்.ஸுக்கு அல்லவா ஏற்பட்டது!

வெகு கவலையளிக்கும் சோதனை இது. மேற்கத்திய சங்கீதத்தின் போக்கே வேறு. ஆதார சுருதி கிடையாது. ஸ்தாயிக்கு ஸ்தாயி தாவும் தெம்பு வேண்டும். பல்லவி அனுபல்லவி என்ற கணக்கு வரையறை கிடையாது. எங்கோ ஆரம்பித்து எங்கோ முடியும்.

இதைப் பரம சிரத்தையுடன் கற்றுக்கொண்டு தன்னம்பிக்கையுடன் ஐ.நா. சபையில் பாடி, இந்த விஷப் பரீட்சையில் தேறியது இவரது அபாரமான திறமைக்கு ஓர் எடுத்துக்காட்டு.

இதேமாதிரி வங்காளிப் பாட்டுகள் கற்றுக் கொள்ளும்போது இவர் பல அல்லல்களுக்கு உள்ளாகியுள்ளார். 'அந்தகாரா'வை 'ஒந்தகார' என்றும், 'விரஹ' என்பதை 'பிரொஹொ' என்றும் உச்சரிக்க வாயை கிழக்கு மேற்காக அசை போட்டு, நுனி நாக்கு









அண்ணாவியைத் தொட்டு, பரம வேதனைப்பட்டால்தான் வங்காளம் வெளியே வரும். துளி உச்சரிப்புப் பிசகினால் கூட, வங்காளம் வேதாளமாகிவிடும்!

பலதரப்பட்ட ரசிகர்களின் விருப் பத்தைப் பூர்த்தி செய்வதற்கு எம்.எஸ். எடுத்துக் கொள்ளும் சிரமத்தைக் குறிப்பிடவே இவற்றைக் கூறினேன். இதை ரசிகன் என்கிற முறையிலேயே சொல்கிறேன். எம்.எஸ். இசையில் விமரிசகனுக்கு இடமில்லை!" இவ்வாறு உறுதிபட எழுதுகிறார் சுப்புடு!

பார்த்தசாரதி என்பவர் ஸ்ரீவெங்க டேச சுப்ரபாதத்தைத் தமிழில் மொழி பெயர்த்தார். அதை நூலாக வெளி யிட்டு, அதன் மூலம் பெற்ற தொகையை அறப்பணிகளுக்கு அளித்து வந்தார் அவர். நண்பர் ஒருவர் மூலம் அந்நூல் அப்போதைய துணை ஜனாதிபதி ஆர்.வெங்கட்ராமன் கைகளுக்கு எட்டியது. நூலைப் புரட்டிப்பார்த்த அவர், அதன் கவிநயத்தால் கவரப்பட்டு, முழுவதையும் ஒரே மூச்சில் படித்த தோடல்லாமல், 'நல்ல சங்கீத வித்வான்களைக் கொண்டு இசையமைத்துக் கேசட்டுகளாக வெளியிடுவது பயனுள்ளதாயிருக்கும்' என்று பார்த்த சாரதிக்குக் கடிதமும் எழுதுகிறார்.



ஆர்.வி.யின் கடிதம் கண்டு உற்சாகமடைந்த பார்த்தசாரதி, எச்.எம்.வி. நிறுவனத்தை அணுகினார். ஆழ்வார் பாசுரங்களின் இன்னிசைச் சாயல் அப்படியே அந்த மொழி பெயர்ப்பிலும் இருப்பதைக் கண்ட அவர்கள், "இதை கேசட்டாக வழங்கத் தகுந்த குரல் திருமதி எம்.எஸ்.ஸுடையதுதான்" என்று கூறிவிட்டனர்.

பார்த்தசாரதியின் மொழி பெயர்ப்பு நூலைப் படித்த எம்.எஸ்.ஸும் அதைப் பாடித்தர மகிழ்ச்சியுடன் ஒப்புக்கொண்டார்.

'கௌசல்யா சுப்ரஜா' என்ற சமஸ்கிருத

சுப்ரபாதத்தின் மெட்டிலேயே எழுதப்பட்டு, பதிவு செய்யப்பட்ட இந்த கேசட் 1993-ல் வெளி வந்தது.

'கௌசல்யா சுப்ரஜா' என்ற அந்த மொழிபெயர்ப்புப் பாடல்.

"வந்துதித்தாய் ராமா நீ
கௌசலை தன் திருமகனாய்
சிந்துமொளிச் சிறுகாலை
திசை எங்கும் புலர்கிறது!
மந்திரங்கள் வாய்மொழிந்து
வந்தனைகள் புரிந்தருளச்
செந்திருக்கண் அருள்பொழிய
வேங்கடவா எழுந்தருள்வாய்!"





என்று தொடங்கி, இப்போது தமிழர் இல்லங்களில் எல்லாம் ஒலி நாடா மூலம் ஒலித்துக் கொண்டிருக்கிறது.

தமிழக அரசின் முன்னாள் தலைமைச் செயலாளர் சி.ஏ. ராமகிருஷ்ணனின் மனைவி திருமதி லீலா ஒரு பேட்டியில் சொல்கிறார்.

"என் அப்பா நல்ல சங்கீத ரசிகர். பெரிய வித்வான்கள் எல்லோருமே எங்கள் வீட்டிற்கு வந்து போவது வழக்கம். ஒரு முறை திருமதி எம்.எஸ்., தன் கணவருடன் வந்திருந்தார். என்னுடைய குழந்தை ஹேமாவுக்கு அப்போது மூன்று வயதிருக்கும்.

வீட்டில் உள்ள வேணு என்ற சமையற்காரன் ஹேமாவுக்குப் பலவித வேடிக்கைக் கதைகளைச் சொல்லி வைத்திருந்தான். அதை அவள் ராகம் போட்ட மாதிரி இழுத்துச் சொல்லும்போது, நாங்கள் எல்லோரும் கூடியிருந்து சிரிப்போம். எம்.எஸ். ஆசையோடு குழந்தையை எடுத்து வைத்துக்கொண்டு கொஞ்சினார்.

"மாப்பிள்ளை வந்தா சும்மா இருப்பாளா? ஜிலேபி, லட்டு எல்லாம் பண்ணினா" என்ற 'அத்திரிமாக்கு' கதையை எம்.எஸ்.ஸுக்குச் சொல்ல ஆரம்பித்தவுடனேயே அவருக்கு மகிழ்ச்சி தாங்கவில்லை!

"எவ்வளவு பேஷா கதை சொல்கிறாள்!" என்று



குழந்தையைப் பாராட்டினார். அருகில் இருந்த என் அப்பா, "எல்லாம் நல்லபடியாக இருந்து பெரியவளானால், அவள் கல்யாணத்திற்கு நீங்கள்தான் பாட்டுப்பாட வேண்டும்" என்று கேட்டுக் கொண்டார்.

"ஆஹா! பேஷா செய்யறேன்" என்று சம்மதம் தெரிவித்தார். பின்னாளில் ஹேமாவின் கல்யாண தேதி நிச்சயமானவுடனேயே எம்.எஸ். அவர்களிடம் சென்று கோரிக்கையை நினைவுபடுத்தினேன். அதே மாறாத புன்னகையுடன், "ஆஹா! பேஷா செய்யறேன்" என்று ஒப்புக்கொண்டு, கல்யாண கச்சேரியை வெகு சிறப்பாகச் செய்தார்." என்கிறார் திருமதி. லீலா. சொன்ன வாக்கை காப்பாற்றுவதிலும் அப்படி யொரு வைர நெஞ்சம்!

கங்கையின் தூய்மையைப் போல், கம்பனின் காவியம் போல், திங்கள் சடையான் சூடும் சங்கராபரணம்போல் இசையரசி எம்.எஸ்.ஸின் கானம் மனித குலம் உள்ளளவும், அதன் ஆத்மசுத்திக்கு அடிநாதமாய்த் திகழும்.

'கடமையைச் செய்; பலனில் பற்று கொள்ளாதே' என்ற கீதாசாரியனின் போதனையே அவரது வாழ்க்கை, பலருக்குப் பட்டும்படாமலும், சிலருக்குச் சுட்டும் சுடாமலும் சொல்லிக் கொண்டிருக்கும்.

"நாம் பிறந்த நாட்டுக்கு, நம்மை அன்புடன் நேசிக்கும் மக்களுக்கு பிரதி உபகாரமாக நம்மால் முடிந்த தொண்டையும், உதவியையும் செய்ய வேண்டும்" என்றார் எம்.எஸ்.

'சொல்லுதல் யார்க்கும் எளிய;
அரியவாம்
சொல்லிய வண்ணம் செயல்'

எம்.எஸ். -

செய்தார்;

செய்கிறார்;

செய்வார்.

பாரதியின் வார்த்தைகளிலேயே வாழ்த்து வோம்.

'வாயுரைக்க வருகுதில்லை;
வாழிநின்றன்
மேன்மையெல்லாம்!'

(நிறைந்தது)

இராஜகுமாரி மீரா தன் குழந்தை உள்ளத்தைக் கொள்ளை கொண்ட மாயக் கண்ணனை மணக்க விரும்பினாள். அவளுடைய விருப்பத்துக்கு மாறாகச் சித்தூர் ராணாவுக்கு அவள் மாலையிட நேர்ந்தது.

ஸ்ரீமதி எம்.எஸ். சுப்புலக்ஷ்மிக்கு அத்தகைய நிர்ப்பந்தம் எதுவும் ஏற்படவில்லை. இரண்டு மூன்று கதைகளை அவருக்குச் சொல்லி, எந்தக் கதையில் நடிக்க இஷ்டம் என்று கேட்டபோது, "மீராவாகத்தான் நடிப்பேன்" என்று அவர் தன் விருப்பத்தைத் தெரிவித்தார். அதன் பயனாக மீரா அநுபவித்த கஷ்டங்களையெல்லாம் ஸ்ரீமதி எம்.எஸ்.ஸும் ஏறக்குறைய அனுபவிக்க வேண்டி நேர்ந்தபோதிலும், அவற்றுக்கெல்லாம் அவருடைய சொந்த விருப்பமும் பிடிவாதமுமே காரணங்கள் ஆயின.



மீராவாக நடிப்பதென்றால் அது எளிதான காரியமா? மூர்மார்க்கெட்டைப் பிருந்தாவனமாகவும், கூவம் நதியை யமுனையாகவும் நினைத்துக்கொண்டு பக்தி பரவசத்துடன்

# மீரா யாத்திரை

எம்.எஸ். பற்றி அமரர் கல்கி எழுதிய கட்டுரை

நடித்துவிட முடியுமா?

"மாயக் கண்ணனைத் தேடி மீரா அலைந்த இடங்களுக்கெல்லாம் நானும் போவேன். மீரா தரிசித்த திருக்கோயில்களையெல்லாம் நானும் தரிசிப்பேன். அப்போது தான் உண்மையான மீரா இருதயத் துடன் என்னால் நடிக்க முடியும்" என்று படத்தின் பிரதான நடிகை சொன்னால்... அதற்கு மாறாக எப் படிப் படம் எடுப்பது சாத்தியமாகும்.

இதற்கிடையில், டைரக்டர் எல்லிஸ் ஆர்.டங்கன், ஆயிரம் பக்கங்கள் அடங்கிய 'இராஜஸ் தான்' என்னும் புத்தகத்தைக் கரதலப் பாடமாய்ப் படித்து, இராஜ புத்திரர்களின் வரலாறு, பழக்க வழக்கங்கள் ஆகிய வற்றை இராஜ புத்திர கன்னி கைகள் கல்யாணத்தின் போது

கையில் என்ன வர்ணமுள்ள வளை அணிந்திருந்தார்கள் என்பது முதற்கொண்டு தெரிந்து வைத்துக் கொண்டு, "கட்டாயம் வடநாட்டு யாத்திரை போகத்தான் வேண்டும்; இராஜபுத்திர நாட்டிலும் பிருந்தாவன துவாரகை க்ஷேத்திரங்களிலும், சரித்திர பூர்வமான தத்ரூபக் காட்சிகளை எடுத்து வர வேண்டும். இல்லாவிட்டால், படத்தில் உண்மை ஒளி வீசாது!" என்று தீர்மானமாகக் கூறினார்.

ஆகவே, நல்ல நாளில் மீரா யாத்திரை ஆரம்பமாயிற்று. ஸ்ரீ.டி. சதாசிவம், ஸ்ரீமதி எம்.எஸ். சுப்புலக்ஷ்மி, குழந்தை ராதா (பாலமீரா), டைரக்டர் டங்கன், கேமராமேன் ஜிதேன் முதலிய சுமார் இருபது பேர் அடங்கிய கோஷ்டியார், யுத்த காலத்து ரயில் நெருக்கடியை இன்னும் அதிகமாக்கிக் கொண்டு வட நாட்டுக்குக் கிளம்பினார்கள்.

நந்தகுமாரன் வளர்ந்து விந்தை பல புரிந்த பிருந்தாவனத்துக்கு முதன்முதலில் மீரா கோஷ்டி போய்ச் சேர்ந்தது. முதல் நாளன்று பிருந்தாவனத்தின் வீதிகளில் "பிருந்தாவனகி மங்கள லீலா" என்று ஆரம்பிக்கும் பிருந்தாவன கீதத்தைப் பாடிக் கொண்டு, ஸ்ரீமதி எம்.எஸ். சுப்புலக்ஷ்மி பஜனை ஊர்வலம் வந்ததின் பயனாக, பிறகு நாலு தினங்களிலும் பிருந்தாவனத்தின் மூலை முடுக்கு சந்து பொந்துகளில் எல்லாம், 'பிருந்தாவனகி மங்கள லீலா" ஒலி செய்ய



ஆரம்பித்தது. அந்தக் கீதம் அவ்வளவு தூரம் பிருந்தாவன வாசிகளின் மனதைக் கவர்ந்து விட்டது.

மீரா இந்தத் துயர உலக வாழ்வை நீக்க விரும்பிப் புண்ணிய யமுனா நதியில் முழுகிய கட்டத்தைப் படம் பிடித்தபோது, கதாநாயகி உண்மையாகவே பெரும் சோதனைகளுக்கு ஆளாக வேண்டியிருந்தது. அந்தக் காலத்தில் எப்படியோ தெரியாது; இந்தக் காலத்து யமுனை நதியில் பெரிய பெரிய ராட்சஸ ஆமைகள், மந்தை மந்தையாகக் குடி புகுந்திருக்கின்றன. அவற்றைக் கண்டாலே பயமாயிருக்கும். முதலையின் வாயிலிருந்து யானையைக் காத்த முராரியின் பேரில் பாரத்தைப் போட்டுவிட்டுத்தான் கதாநாயகி நதியில் இறங்க வேண்டியிருந்தது.

யமுனையில் மூழ்கிய மீராவைக் கிரிதர கோபாலன் படகோட்டி ரூபத்தில் வந்து காப்பாற்றுகிறான். இந்தக் காட்சியைப் படம் எடுத்தபோது, காப்பாற்ற வந்த படகினாலேயே கதாநாயகிக்கு ஆபத்து வரப் பார்த்தது.

தண்ணீருக்குள்ளிருந்து மீரா மேலே வரும் சமயத்தில் படகு தலைக்கு நேராக வந்து விடவே, தலை, படகிலே மோதி, வெளியில் வர முடியாமல் மூச்சு முட்டி, சிறிது நேரம் திக்குமுக்காடும்படி ஆகிவிட்டது. அன்று மீராவைக் காப்பாற்றிய மாயக் கண்ணதான் தென்னாட்டின் புகழ் விளங்கச் செய்யும் பாடகியையும் இன்று காப்பாற்றினார் என்று சொல்ல வேண்டும்.

பிருந்தாவனத்திலிருந்து மீரா கோஷ்டியார் ஜயப்பூர் சேர்ந்தார்கள். இராஜபுத்திர தேசத்தில் வீதி அழகுக்கும், வீடுகளின் அழகுக்கும் பெயர் போனது இந்தப் பட்டணம். இரத்தினக்கல் வர்ணம் கொண்ட சித்திர விசித்திரமான முகப்புகளை உடைய வீடுகளின் வரிசையைப் பார்த்துக்கொண்டே இருக்கலாம். இந்த அழகிய பட்டணத்துக்கு எட்டு மைல் தூரத்தில் 'புராணா காட்' என்று வழங்கும் இடத்தில் பழைய காலத்து வஸந்த மாளிகை ஒன்று இருக்கிறது. இந்த மாளிகை அமைந்துள்ள விஸ்தாரமான தோட்டத்தைச் சுற்றி கண்ணுக்கெட்டிய தூரம் வரிசையாக அமைந்துள்ள மணி மண்டபங்களின் அழகை எளிதில் வர்ணிக்க முடியாது.

அந்த மாளிகையைச் சேர்ந்த பூந்தோட்டத்திலே உலாவிக் கொண்டும், அங்குள்ள பளிங்கு நீர்த் தடாகத்தின் கரையில் உட்கார்ந்து கொண்டும், மீரா தன் குழந்தை உள்ளத்தைக் கவர்ந்து பரவசப் படுத்திய வேய்ங்குழலின் மோகன கீதத்தைப் பற்றிப் பாடுகிறார்.

இந்தக் காட்சி படம் எடுக்கப் பட்டபோது, ஜயப்பூரில் தற்சமயம் திவானாயுள்ள ஸர் மிர்ஸா இஸ்மேலின் மனைவியாரும், இன்னும் உயர்குலத்து இராஜபுத்திர மாதர் சிலரும் 'ஷூட்டிங்' பார்ப்பதற்காக வந்திருந்தார்கள். ஒரு பகல் முழுதும் அவர்கள் அங்கேயே இருந்து, அவ்வப்போது மீராவின் கானத்தைக் கேட்டு ஆனந்தித்தார்கள். அந்த இராஜபுத்திரப் பெண்மணிகளிலே சிலர் மீராவுக்கு இராஜபுத்திர வழக்கப்படி உடை உடுத்துவதற்கும், ஆபரணம் அணிவதற்கும் ஒத்தாசை செய்தார்கள். "மீரா படத்தை மதராஸி பாஷையில் ஏன் எடுக்கிறீர்கள்? ஹிந்தியில் எடுக்கக்கூடாதா?" என்று கேட்காதவர்கள் இல்லை.





■ மீரா யாத்திரையின்போது ஓவியர் மணியம், இயக்குனர் டன்கன், அமரர் கல்கி, புகைப்படக் கலைஞர் நாகராஜராவ்

ஜயப்பூரிலிருந்து மீரா கோஷ்டியினர் சரித்திரப் பிரசித்தி பெற்ற சித்தூருக்குச் சென்றார்கள்.



இராஜபுத்திர வீரத்துக்கு மகத்தான ஞாபகச் சின்னமாக விளங்குவது சித்தூர்க் குன்றின் மேல் அமைந்த கோட்டையாகும். இந்தக் கோட்டை மூன்று தடவை முஸ்லிம்களின் பெருந்தாக்குதலுக்கு ஆளாகியது. ஒவ்வொரு தடவையும் அக்கோட்டையிலிருந்து வீர புருஷர்களும் தீர நாரீமணிகளும் இறுதிவரை போரிட்டு உயிரை விட்டார்களேயன்றி, ஒருவராவது எதிரிகளுக்குப் பணிந்து உயிரைக் காத்துக் கொள்ளவில்லை.

அந்தப் பெயர் பெற்ற சித்தூர்க் கோட்டையின் மதில்களும், அதன் ஏழு வாசல்களும், கோட்டைக்குள்ளேயிருந்த அரண்மனைகளும் அழகிய மாளிகைகளும் இன்று இடிந்து பாழாய்க் கிடக்கின்றன.

அந்தப் பாழுங் கட்டடங்களுக்கு மத்தியில் இன்றளவும் அழியாமல், அழகு குன்றாமல் விளங்கும் கட்டடம் ஒன்றே ஒன்று இருக்கிறது. அதுதான் தேவி மீராவுக்காகச் சித்தூர் ராணா கட்டிக் கொடுத்த கண்ணன் திருக் கோயில். அவர்களுடைய மண வாழ்க்கையின் ஆரம்ப காலத்தில் மீராவைப் பற்றி ராணாவின் மனம் கெடாமலிருந்த நாளில், மீரா கேட்டு ராணா கட்டிக் கொடுத்த கோயில்.

அந்த அழகிய கோயிலில் கிரிதாரியின் சந்நிதியில் அமர்ந்து, ஸ்ரீமதி எம்.எஸ். சுப்புலக்ஷ்மி மீராவின் கீதங்களைப் பாடியபோது, "இதே இடத்தில் தேவி மீரா அமர்ந்து, இதே பாடல்களை பக்தி பரவசமாய்ப் பாடியிருக்கலாமல்லவா?" என்ற எண்ணமே எல்லாருடைய மனத்திலும் குடி கொண்டிருந்தது. எனவே, பாடும்போது, எம்.எஸ்.ஸூம், கண்ணீர் விட்டுவிட்டார். மற்றவர்களின் கண்ணிலும் நீர் துளித்தது. இதையெல்லாம் விட, அந்தக் கோயிலின் பூசாரி - கண் பார்வை மங்கிய கிழவர் - திடீரென்று ஆவேசம் வந்தவர்போல் கரதாளம் போட்டுக் கொண்டு, மீரா கீதத்தை அனுபவிக்க ஆரம்பித்த காட்சி அபூர்வமாயிருந்தது.

சித்தூரிலிருந்து மீரா கோஷ்டியினர் உதயபூருக்குச் சென்றார்கள். சித்தூர்க்கோட்டை மூன்றாவது தடவையும் எதிரிகளால் அழிக்கப் பட்ட பிறகு, மேவார் இராஜ வம்சத்தார் சித்தூரை விட்டுச் சென்று, எதிரிகள் அண்ட முடியாதபடி நாலு புறமும் மலை சூழ்ந்த இடத்தில் புதிய தலைநகரை ஸ்தாபித்துக் கொண்டனர். அந்தப் புதிய தலை நகரந்தான் உதயபூர். இன்றைக்குக்கூட உதயபூருக்குப் போவதற்கு மலைகளுக்கு நடுவே ஒரே ஒரு கணவாய் வழிதான் இருக்கிறது. அதன் மூலமாகவே



போவது சர்வ சாதாரணம்.

அழகிய உதயபூரின் நிர்மலமான நீல ஏரியில் மீராவும், ராணாவும் படகில் அமர்ந்து ஆனந்தமாகச் செல்லும் காட்சி இங்கே படம் பிடிக்கப் பட்டது.

உதயபூரில் உள்ள ஒரு சிங்கார வனத்தில், தாமரைத் தடாகம் ஒன்று இருக்கிறது. அதன் நாலு புறத்திலும் நீர்ப் பொழிவுகள் முத்துச் சொரிவது போல் நீர்த் துளிகளைப் பொழிந்து கொண்டிருக்கும். இன்னும் அத்தடாகத்தின் நாலு மூலைகளிலும் அமைக்கப்பட்டுள்ள நாலு யானைகளின் தும்பிக்கை வழியாகத் தண்ணீர் சொரிந்து கொண்டிருப்பது ஒரு விந்தையான காட்சி. இந்தத் தாமரைக் குளக்கரையிலே, நீர்ப் பொழிவுகளுக்கிடையிலே மீரா சிந்தனையிலாழ்ந்தவளாய் நடந்து செல்லும் காட்சி படம் எடுக்கப் பட்டது.

உதயபூரின் பிரசித்தி பெற்ற யானை ஊர்வலம் ஒன்றையும் மீராவுக்காகப் படம் எடுக்க வேண்டும் என்று விரும்பினார்கள். அதற்கு மகாராணாவின் அனுமதி தேவையாயிருந்தது. அனுமதி கிடைக்குமோ, என்னமோ என்ற சந்தேகமும் இருந்தது.

தென்னாட்டின் பிரசித்தமான பாடகி "மீரா" படம் சம்பந்தமாக உதயபூர் வந்திருக்கும் செய்தி அறிந்து, உதயபூர் உத்தியோக மண்டலத்தார் ஸர். டி. விஜயராகவாச்சாரியாரின் தலைமையில் ஒரு சங்கீதக் கச்சேரி ஏற்படுத்தினார்கள். கச்சேரி முடிவில் ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மிக்கும், குழந்தை

வண்டிப் பாதையும் ரயில் பாதையும் போகின்றன.

அந்தஸ்து மிகுந்த உதயபூரானது இந்தியாவிலேயே அழகிற் சிறந்த ஊர் என்று சொல்லலாம். உதயபூரில் உள்ள நீல நிற ஏரிகளைப் போல் அழகான காட்சிகள் உலகிலேயே வேறெங்கேயாவது உண்டா என்பது சந்தேகம். ஏரிக்கரைகளிலும் ஏரியின் மத்தியிலும் உள்ள அரண்மனைகளின் அழகோ சொல்ல முடியாது.

இப்போதுள்ள உதயபூர் மகாராணா பிராயத்திலும் அனுபவஞானத்திலும் மிகுந்தவர்; பிரஜைகளின் அபிமானத்தைக் கவர்ந்தவர். இந்தியாவிலேயே உயர்ந்த அந்தஸ்து வகிக்கும் சமஸ்தானத் தலைவராயிருந்தும், அவரிடம் ஆடம்பரமோ படாடோபமோ கிடையாது. எல்லாருடனும் சரளமாகப் பழகக்கூடியவர்... உதயபூர் அரண்மனைகளுக்குள்ளே யார் வேண்டுமானாலும் சர்வ சாதாரணமாய்ப் புகுந்து வேடிக்கை பார்க்கலாம். மகாராணா ஒரு அறையிலிருக்கும்போது, அதற்கு அடுத்த அறையில் ஜனங்கள் கூட்டங் கூட்டமாக வந்த வேடிக்கை பார்த்துவிட்டுப்

மீராவாக நடிக்கும் ராதாவுக்கும் மேற்படி உத்தியோக மண்டலத்தார் முத்துமாலைகள் பரிசளித்தார்கள்.

பின்னர், மகா ராணாவின் முன்னிலையிலும் ஸ்ரீமதி எம்.எஸ். சுப்புலக்ஷ்மியின் கச்சேரி நடந்தது. எம்.எஸ்.ஸின் கர்நாடக சங்கீதம், ஹிந்துஸ்தானி சங்கீதம் இரண்டையும் மகாராணா பெரிதும் பாராட்டியதுடன், மீரா கோஷ்டிக்கு வேண்டிய உதவியெல்லாம் அளிக்கும்படியும் உத்தரவிட்டார். அதன்பிறகு உதயபூர்



அரண்மனை யானைகளின் ஊர்வலம் 'மீரா' படத்துக்காக எடுக்கப்பட்டது.

உதயபூரிலிருந்து மீரா கோஷ்டியார், பிரசித்த சித்திரக்காரரும் "மீரா"வின் ஆர்ட் டைரக்டருமான ஸ்ரீகனுதேசாயின் அழைப்பின் பேரில் ஆமதாபாத்துக்குச் சென்றார்கள். அங்கே தென்னிந்தியர்களும், குஜராத்திகளும் ஆயிரக்கணக்காகக் கூடியிருந்த சபையில் ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மியின் சங்கீதக் கச்சேரி நடந்தது. கர்நாடகப் பாட்டும், ஹிந்துஸ்தானி பாட்டுமாக் மாற்றி மாற்றி எம்.எஸ். பாடிச் சபையோரைக் களிப்பித்தார். நாலு மணி நேரம் சேர்ந்தாற்போல் சங்கீதம் கேட்ப தென்பதையே அறிந்திராத குஜராத்திகள் எம்.எஸ்.ஸின் இன்னிசையைக் கேட்டுப் பிரமித்துப் போனார்கள். ஆமதாபாத்தின் மிகச் செல்வாக்குள்ள குடும்பங்களில் எல்லாம் 'மீரா"வுக்கு அழைப்பின் மேல் அழைப்பாக வந்தது!

தேவி மீரா தன் உள்ளங் கவர்ந்த கள்வனை நாடெங்கும் தேடி அலைந்து, பிறகு கடைசியாக துவாரகைக்கு வந்து கண்ணனுடைய பூரண அருளைப் பெற்று அவனுடைய பாத கமலங்களில் ஐக்கியமாகிறாள்.

மீரா கோஷ்டியின் யாத்திரையும், துவாரகையிலேதான் முடிவடைந்தது. துவாரகையின் வீதிகளில் 'மீரா'' கண்ணன் திருநாமத்தைப் பாடிக் கொண்டு சென்றபோது, பிருந்தாவனத்திலே கண்ட காட்சிகள் இங்கு இன்னும் அதிகமாய்த் தென்பட்டன. ஜனங்கள் திரள் திரளாகக் கூடி மீராவைப் பின் தொடர்ந்து சென்றார்கள். அநேகம் பேர் உண்மையிலேயே மீரா புனர் ஜன்மம் எடுத்து வந்துவிட்டதாக எண்ணி, மீராவுக்குரிய வழிபாடுகளைச் செய்ய ஆரம்பித்துவிட்டார்கள்! அப்படிச் செய்ய வேண்டுமென்று அவர்களைத் தடை செய்வது பிரம்மப்பிரயத்தனமாகிவிட்டது!

துவாரகையின் கோயில் படிகளின் மீது மீரா ஏறி, கண்ணன் சந்நிதியில் கதறிக்கொண்டு நுழைந்து, உணர்வற்று விழுகிற காட்சிகளில் ஸ்ரீமதி எம்.எஸ். சுப்புலக்ஷ்மி உண்மையாகவே உணர்விழந்து விழுந்துவிட்டார்.

**-1944**, கல்கி தீபாவளி மலரில் அமரர் கல்கி எழுதிய கட்டுரையிலிருந்து...

அட்டைப்படம் உதவி : எஸ்.வி.ராமன்

பெயரில் 'அவ்னி' சினி மேக்ஸ் என்ற கம்பெனியைத் துவக்கி 'கிரி' என்ற படத்தைத் தயாரித்தேன். படம் நல்ல விலைக்கு விற்றது. லாபம் வந்தது வெற்றிகரமாக ஓடி நல்ல பெயரும் கிடைத்தது.

எங்களுக்கு குலதெய்வம் பழனி யிலிருந்து உடுமலைப் பேட்டைப் போறவழியில் கொழுமம் அருகில் உள்ள ஐவர் மலையிலுள்ள சுவாமி தான். ஐவர் மலையைப் பற்றி சொல்ல வேண்டுமென்றால், 'பஞ்ச பாண்டவர்கள் பதினான்கு ஆண்டுகள் வனவாசம் முடிந்து ஒரு வருடம் ஒளிந்து வாழ்வதற்காக இந்த மலைக்கு வந்து தங்கும் போது அவர்கள் இங்குள்ள கோயிலை அமைத்தார்களாம். அந்த தெய்வம் தான் எங்களுக்குக் குலதெய்வம். இரண்டாயிரமடி உயரத்தில் பாறை மீதுள்ள அந்த கோயிலில் ஆடி அமாவாசை, ஆடிப் பதினெட்டு போன்ற நாட்களில் சிறப்பு பூஜை நடக்கும். சமீபத்தில் அந்த கோயி லுக்குச் சென்று என் குழந்தைகளுக்கு மொட்டை போட்டு காது குத்தினோம். ●

- சந்துரு

படங்கள்: சித்ராமணி

## குஷ்பு:

எனக்கு கடவுள் மீது தீவிரமான நம்பிக்கை கிடையாது. இருந்தாலும் குடும்பத்திற்கு விளக்கேற்ற வந்தவள் என்பதால் குடும்ப நலன் கருதி சுவாமி அறையில் விளக்கேற்றியபின்தான் மற்ற வேலைகளைச் செய்கிறேன். இது ஒரு மருமகளின் கடமை.



சபையின் அளவிற்குத் தக தன் ஆற்றலின் அளவைக் குறைத்துக் காட்டும் சின்னத்தனம் அவரிடம் என்றும் கிடையாதே! அன்று பூரணியின் பிறந்தநாள் விழாவில் நடந்த எம்.எஸ்.ஸின் பூரணமான மினி கச்சேரியைக் கேட்டவர்கள் பெரும் பாக்கியசாலிகள்.

ஒரு நிகழ்ச்சியில் நான் விருந்து சாப்பிட்டேன். நான் சாப்பிட்ட பிறகு தான் சாப்பிட்டார் எம்.எஸ். 'நீங்கள் சாப்பிட்டுவிட்டால் என்ன? என் பக்கத்தில் நான் சாப்பிட்டு முடியும் வரை உட்கார்ந்து கொள்ளுங்களேன். கொஞ்சம் பேசலாம்!' என்றார். அவரது அளவற்ற எளிமையில் எனக்கு மயக்கம் வந்தது. ஆத்மநாதன் அவர்களைப் போன்றே வயதில் குறைந்த எல்லோரையும் தாயன்போடு தன் மகனாகப் பார்க்கும் பக்குவம் அவருக்கு இருந்தது. என் பெரிய பேற்றை எண்ணியவாறே பல விஷயங்களைப் பேசி மகிழ்ந்தேன். கீதையில் 'கர்மத்தைச் செய். பலனை எனக்கு அர்ப்பணித்துவிடு. புகழை மனதளவில் துறந்துவிடு! எது வந்தாலும் ஏற்றுக்கொள்!' என்று கிருஷ்ணர் சொன்ன தத்துவத்தை நடைமுறையில் அனுசரித்தவர் எம்.எஸ்.

பிச்சைக்காரர்களைப் பார்த்தால் அவ்வளவு இரக்கம் கொள்வாராம் எம்.எஸ். பத்துரூபாய் நோட்டாகப் போடச் சொல்வாராம். கடையேழு வள்ளல்களோடு கூடச் சேர்ந்த எட்டாவது கடைசி வள்ளல் எம்.எஸ். இயல்பிலேயே சிவந்திருந்த அந்தக் கரம் கொடுத்துக் கொடுத்து மேலும் சிவந்தது. அந்த இசையரசி நவீன உலகின் சீதக்காதி.

## திருப்பூர் கிருஷ்ணன்

காந்தியும் நேருவும் சரோஜினி நாயுடுவும் இவர் சங்கீதத்தை ரசித்தார்கள். ஆட்டோக்காரர்களும் நெல் மூட்டை தூக்குபவர்களும் வீட்டு வேலை செய்பவர்களும்கூட இவர் இசையை ரசித்தார்கள். சங்கீத ஞானமுள்ளவர்களாலும் பாமரர்களாலும் ஒருசேரக் கொண்டாடப்பட்ட விதத்தில் இவர் இசை வித்தியாசமானது.

எக்ஸ்பிரஸ் அதிபர் ராம்நாத் கோயங்காவின் ஒரே



புதல்வர் பகவன்தாஸ் கோயங்கா, தந்தை உயிரோடு இருக்கும்போதே மாரடைப்பால் காலமானார். ராம் நாத் கோயங்கா வாழ்வில் நேர்ந்த பெரிய சோகம் அது. பல அரசியல் நெருக்கடிகளைத் தாங்கிய அந்த இரும்பு மனிதர், சொந்த வாழ்வின் கடும் சோகத்தையும் தாங்க வேண்டியிருந்தது. ஒருமுறை இல்லஸ்டிரேடட் வீக்லியில் பரமாச்சாரியாரைப் பற்றிக் கேட்ட போது 'வாழும் கடவுள்' (Living God) என்று குறிப்பிட்டார் அவர். பரமாச்சாரியார் மேல் கொண்ட பக்திதான் கோயங்காவைப் பல வழிகளில் நெறிப்படுத்திக் கொண்டிருந்தது. எம்.எஸ்., சதாசிவம் இருவருமே பரமாச்சாரியாரின் பரிபூரண அடியவர்கள் அல்லவா! சதாசிவம், கோயங்காவின் நெருங்கிய நண்பரும்கூட.

பி.டி.ஜி. என்று அழைக்கப்பட்ட பகவன்தாஸ் கோயங்கா காலமான செய்தி கேட்டதும் உடனடியாக எக்ஸ்பிரஸ் எஸ்டேட்டுக்கு விரைந்து வந்தார்கள் சதாசிவம் தம்பதியர். அவர்களின் வருகையால் ராம்நாத் கோயங்கா அடைந்த ஆறுதல் விவரிக்க இயலாதது. உடல் எடுக்கப்படும் வரை எம்.எஸ்.ஸின். விஷ்ணு சகஸ்ரநாமம் ஒலித்துக் கொண்டே இருந்தது. கூடவே ஆதிசங்கரரின் பஜகோவிந்தம் பாடலும்! புனரபி ஜனனம்..புனரபி மரணம்...அந்த சந்தர்ப்பத்தில் எக்ஸ்பிரஸ் எஸ்டேட்டில் கோயங்கா இல்லத்தில் கூடிய எக்ஸ்பிரஸ் பணியாளர்கள் அனைவரும் அந்தப் புனிதக் குரலில் நெகிழ்ந்து மௌனம் காத்தோம். அடுத்தவர் மரணங்களுக்கு ஆறுதல் சொன்ன குரல். வாழ்வின் நிலையாமையைப் புலப்படுத்தி மனதைப் பண்படுத்திய குரல். இப்போது

1947, அக்டோபர் 2-ந் தேதி மகாத்மா காந்தி தமது பிறந்த நாளன்று 'ஹரி தும்ஹரோ' பாடலை எம்.எஸ். பாடிக் கேட்க வேண்டுமென்று விருப்பம் தெரிவித்தார். சதாசிவத்துக்கு முதல் நாள் செய்தி தொலைபேசி மூலம் தெரிவிக்கப் பட்டது.

சுஜேதா கிருபளானி அகில இந்திய ரேடியோ வழியாக காந்திஜியின் விருப்பத் தைத் தெரியப்படுத்தினார். அதற்குச் சில தினங்களுக்கு முன்புதான் வானொலி நிலையம் மூலம் எம்.எஸ். துளசிதாஸ், கபீர்தாஸ், சூர்தாஸ், மீரா ஆகியோருடைய, சில 'பஜன்'களை இசை நாடாவில் பாடி, டில்லிக்கு அனுப்பி இருந்தார். ஆயினும் காந்தி, குறிப்பிட்ட பாடலைக் கேட்கவே விரும்பினார். எம்.எஸ். அந்தப் பாடலைக் கற்றிருக்கவில்லை. எனவே வேறு யாராவது அப்பாடலைப் பாடலாமே என்று சதாசிவம் பதில் அனுப்பினார்.

அன்று மாலையே மற்றொரு செய்தி வந்தது. "எம்.எஸ். அப்பாடலைப் படித் தால்கூடப் போதும்" என்று காந்திஜி கூறி விட்டாராம். உடனே வானொலி நிலையம் சென்று, தகுந்தவர்களைக் கொண்டு பாடலுக்கு இசை அமைக்கச் செய்து, எம்.எஸ். பாடி ஒலிப்பதிவு செய்து டில்லிக்கும் நாடா அனுப்பப்பட்டு, மகாத்மாவின் விருப்பம் பூர்த்தி செய்யப் பட்டது.

30.1.1948 அன்று காந்திஜி சுட்டுக் கொல்லப்பட்டார்.

வானொலியில் இந்தத் துக்கச் செய்தியைச் சொல்லி விட்டு எம்.எஸ். பாடிய 'ஹரிதும்ஹரோ' பாடலை ஒலிபரப்பினார்கள். இரண்டையும் செவி யுற்ற எம்.எஸ். மயக்கமுற்றாராம். சுமார் ஒரு வருட காலம் வரை அந்தப் பாடலை எம்.எஸ். தம் கச்சேரிகளில் பாடுவதைத் தவிர்த்தார்.

(இருபதாம் நூற்றாண்டின் சங்கீத மேதைகள் - சு.ரா. - அல்லயன்ஸ்.)



அந்தக் குரலுக்கு உரியவரே மரணமடைந்த போதும் ஆறுதல் தருவது ஒலிப்பேழையில் ஒலிக்கும் அதே குரல்தான். புனரபி மரணம்..




புனரபி ஜனனம்... எம்.எஸ்.ஸின் ஆலய மணிக்குரல் காலத்தை வென்று ரீங் கரிக்கிறது. நேற்றும் இன்றும் என்றும் நம் மனதில் சாந்தியையும் ஆறுதலையும் பக்தி யையும் பரப்பிக் கொண்டே இருக் கிறது. ●



**ஜெயேந்திரர் கைது தொடர்பான விசாரணையில் நடிகை ஸ்வர்ணமால்யாவும் விசாரணை வளையத்துக்கு வந்து விட்டார். இதுகுறித்து அவருடைய மனநிலை என்ன?**

'தற்சமயம் பத்திரிகைகள்ல வர்ற செய்திகளுக்கும் எனக்கும் எந்த சம்பந்தமும் இல்ல. இதுதான் உண்மை. பரமாச்சாரியார் இருந்தபோது எங்க தாத்தா அவரை தரிசிக்க மடத்துக்குப் போவார். தாத்தாவைத் தொடர்ந்து நாங்களும் மடத்துக்குப் போனோம். சாதாரண பக்தர்களாகப் போனோம். அதை பத்திரிகைகள் வேறுவிதமாகத் திரிக்க, இப்போது என்னையும் காரணமில்லாம விசாரிக்கிறாங்க!' என்று தனக்கு மிக நெருக்கமானவர்களிடம் ஸ்வர்ணமால்யா மனமுடைந்து கூறியிருக்கிறார்.

"இருபது வயசிலேயே எனக்குத் திருமணம் பண்ணிப் பார்க்கணும்னு என்னோட அப்பா - அம்மா ஆசைப் பட்டாங்க. அவங்களோட ஆசையை நிறைவேத்ததான் நானும் திருமணம் பண்ணிக்கிட்டேன். நான் கல்யாணம் பண்ணினவர் நல்லவர் இல்லைன்னு தெரிஞ்ச பிறகு, கல்யாணமும் இல்லைன்னு ஆகிப்போச்சு. என் திருமண முறிவு இருபது வயசிலேயே எனக்குக் கிடைச்ச மிகப் பெரிய பாடம். நான் அப்பாவிதான். இருபது வயதுக்கு மேல் ஆகிவிட்டாலும் மனதளவில் நான் ஒன்றும் அறியாத, இன்னொஸன்ட்டான பாப்பாதான். எல்லோருமே நல்லவங்கன்னு நினைச்சேன். ஆனால் ஏமாத்துறவங்க, பொய் சொல்றவங்களும் இருக்காங்கன்னு என் திருமணம் மூலம் தெரிஞ்சுக்

# நான் ஒண்ணும் தெரியாத பாப்பா

டான பாப்பாதான். எல்லோருமே நல்லவங்கன்னு நினைச்சேன். ஆனால் ஏமாத்துறவங்க, பொய் சொல்ற வங்களும் இருக்காங்கன்னு என் திருமணம் மூலம் தெரிஞ்சுக் கிட்டேன்.

சின்னவயசிலேயே திருமணம் நடந்து அது முறிஞ்சு போனால் வாழ்க்கையே முடிஞ்சு போனதாக அர்த்தமில்லை. எல்லோருடைய முன்னிலையிலும் ஜெயிச்சுக் காட்டணும்னு மீண்டும் சினிமாவுக்கு வந்தேன். தடைகளையெல்லாம் தாண்டி சாதிப்பேன்" என்று நம்பிக்கையோடு ஸ்வர்ண மால்யா கூறுகிறார். ●




- படம் : கோபால், ரவிசங்கர்

## ‘தேவுடா! தேவுடா!
## ஏழுமலை தேவுடா!
## சூடுடா! சூடுடா!
## எங்க பக்கம் சூடுடா!
## எங்கோநெ உள்ளோங்கள்
## எல்லோமே வைரங்கள்;
## நீ கொஞ்சம் –
## பட்டை தீட்டுடா!’

ரஜினியின் ‘சந்திரமுகி’ படத்திற்காக கவிஞர் வாலி எழுதும் பாடலின் பல்லவிதான் இது. அந்தப் பாடல் பற்றி கவிஞர் வாலியிடம் கேட்டபோது:

“டைரக்டர் பி. வாசு எனக்கு போன் பண்ணி சந்திரமுகி படத்தில் ரஜினி வரும்போது ஒரு ஓப்பனிங் சாங் வேண்டும். நீங்கள் எழுதினால் நல்லாயிருக்கும். தி.நகரிலிருக்கும் வித்யாசாகர் ஸ்டுடியோவுக்கு உடனே வரமுடியுமா? என்று கேட்டார். அங்கே ராம்குமார் பி.வாசு, ரஜினி எல்லோரும் இருந்தார்கள்.

வித்யாசாகர் வியக்கவைக்கும்படி ஒரு ட்யூனை கம்போஸ் பண்ணி என்னிடம் அதைப் பாடிக் காட்டினார். அதைக் கேட்டதுமே, ரஜினி ரசிகர்களுக்கு மிகப் பெரிய ஆவலை இந்தப் பாடல் ஏற்படுத்தும் என்று எனக்குப் புரிந்தது.

ரஜினி என்னிடம், ‘அன்று எம்.ஜி.ஆருக்கு ‘கொடுத்ததெல்லாம் கொடுத்தான், அது யாருக்காக கொடுத்தான்’ என்று எழுதினீர்களே அதுபோல் இந்தப் பாடலும் வேண்டும்’ என்றார்.

ரஜினி ரசிகர்கள் கேட்டால் எழுந்து துள்ளிக் குதித்து ஆட்டம் போடும்...

# எம்.எஸ். சுப்புலட்சுமி



டீன் ஏஜ்
எம்.எஸ்.
அன்றைய
வெள்ளித்
திரையின்
'காற்றினிலே
வரும் கீதம்!'



எம்.எஸ்.,
அகாலிதள்
தலைவர் மாஸ்டர்
தாராசிங், ராஜாஜி -
எட்டிப் பார்க்கும்
உற்சாக சதாசிவம்.



◀ இன்னொரு விருது... அன்றைய தமிழக கவர்னர் பிரபுதாஸ் பட்வாரி, எம்.ஜி.ஆர்., எம்.எல்.வி. யுடன்...



▶ இசைக்குயிலுக்கு மற்றொரு மகுடம் - டாக்டர். எம்.எஸ்.

பிரதமர் இந்திராகாந்திக்கு சால்வை மரியாதை... இந்திரா எம்.எஸ்.ஸின் ஆத்ம ரசிகை.

▲





1955-ல் சென்னையில் ஒரு மறக்கமுடியாத கச்சேரிக்குப் பின்... பாராட்டும் ஹெலன் கெல்லர். அருகே ரசிப்பவர்கள் காமராஜ், அப்போதைய மெட்ராஸ் கவர்னர் ஸ்ரீபிரகாசா, சதாசிவம்.

வெளிநாட்டுக் கச்சேரிக்கு ரெடி... இருபுறமும் ராதா, விஜயாவுடன் டி.ஹெச். வினாயகராம், டி.கே. மூர்த்தி, அழகிரிசாமி.





1948-ம் வருடம்
'இந்தியாவின் கவிக்குயில்'
சரோஜினி நாயுடுவுடன்
ஒரு விழா மேடையில்...



ஸ்ருதியோடு இணைந்த
சங்கீதமே ஆன்மாவைத்
தொடும்!



ஹிந்துஸ்தான்
சங்கீதத்தின்
சக்கரவர்த்தி
அல்லாடியா
கானுடன்...

சங்கீதத்தின் நடுவே
நகைச்சுவையும் உண்டு.
ஜோக்கைத் தொடரும்
குபீர்ச் சிரிப்பு.



தொகுப்பு: வி. சந்திரசேகரன்

# THE HINDU

INDIA'S NATIONAL NEWSPAPER



■ 'ஹிந்து' அலுவலகம் (1939)

ஆங்கிலேயர் ஆட்சி நடந்து கொண்டிருந்த காலம். அச்சுத்துறை இந்தியர்களுக்குப் புதிது. ஆட்சியாளர்களுக்கு ஆதரவாக அனைத்து மீடியாக்களும் செயல்பட்டுக் கொண்டிருந்தன. பிரிட்டிஷ்காரரர்களுக்குச் சொந்தமான ஆங்கிலோ - இந்திய பேப்பர்களில் இந்தியர்களுக்கு எதிரான செய்திகளே பிரசுரிக்கப்பட்டன. இதையெல்லாம் பார்த்த இந்திய இளைஞர்கள் தங்களுக்கென ஒரு பத்திரிகை வேண்டும் என்று விரும்பினர். ஆனால், அதற்குத் தேவையான பொருளாதாரமும், அனுபவமும் பெரிய சவாலாக முன்நின்றது.

இச்சவாலை எதிர்கொள்ள ஆறு இந்திய இளைஞர்கள் சபதம் செய்தனர். அவர்களது வயது என்ன தெரியுமா? இருபது மட்டுமே. அப்போதுதான் கல்லூரிப் படிப்பை முடித்தவர்கள். எந்த முன்அனுபவமும் இல்லாதவர்கள். பணபலமும் அவர்களுக்குக் கிடையாது. ஆனால், மனம் முழுவதும் நம்பிக்கைக்கும் துணிச்சலுக்கும் குறைவேயில்லை. இப்படியாக 1878

## வெற்றிப் படிகள்




இதுலே யாரு லாலு,
யாரு பாஸ்வான்னே
தெரியலையே...?!





நினைவலைகள்

டிசம்பர் 11. வானம்கூட அழுது, அஞ்சலி செலுத்திய கறுப்பு தினம்!

கானம் பாடிய வானம்பாடியைக் காலம் கவர்ந்து சென்ற துக்கம், சென்னை, கோட்டூர்புரத்தில் நாம் பார்த்த ஒவ்வொரு முகத்திலும் உறைந்திருந்தது.

இசையுலகின் முடிசூடா மகாராணியாக ஜொலித்தது மட்டுமல்ல... நல்ல மனைவியாக, தாயாக, பாட்டியாக... எல்லாவற்றையும்விட, யாருக்குமே தீங்கு நினைக்காத நல்ல மனுஷியாக வாழ்ந்த 'ரோல்மாடல்' பெண்மணி எம்.எஸ்.!

குரல் வழிப் பரிச்சயம் மட்டுமே கொண்டவர்கள்கூட அவரது பிரிவை எண்ணி உடைந்துபோகும் அளவுக்கு பாதிப்பை ஏற்படுத்திய இசைத் தாய். அந்த மகா மனுஷியுடன், பல வருடங்கள் தொடர்ந்து வாழ்க்கையிலும் மேடையிலும் இணைந்திருந்த சிலர், எம்.எஸ். பற்றி இங்கே நினைவுகூர்கிறார்கள்...

# காற்றினிலே கலந்த கீதம்!

**விக்கு விநாயக்ராம்:** *(எம்.எஸ்–ஸின் கச்சேரிகளில் கடம் வாசித்தவர்)*

''மகாபெரியவரிடம் எம்.எஸ். அம்மாவுக்கு இருந்த ஆழ்ந்த பக்தியினால்தானோ என்னவோ, பெரியவாளோட ஜெயந்தி நட்சத்திரமான அனுஷத்தன்னிக்கு அம்மா பகவானோடு கலந்திருக்கார்.

தனக்குனு எதுவும் வெச்சுக்காத தயாள குணம்! சதாசிவம் மாமாவும் அப்படித்தான். ஒருசமயம், உதவி கேட்டு வந்தவாளுக்கு என்ன கொடுக்கிறதுனு யோசிச்ச மாமா, சட்டுனு எம்.எஸ்.அம்மா பக்கம் திரும்பி, 'குஞ்சம்மா! உன் வளையலைக் கழட்டிக் குடேன்'னு சொல்ல, கொஞ்சமும் யோசிக்காம உடனே கழட்டிக் குடுத்த பரோபகாரி.



முதன்முதல்ல பாட்டுக்குனு வெளிநாடு போய், 'இண்டியன் மியூஸிக்' மட்டுமே தெரிஞ்ச மேல்நாட்டு

கணவருடன்...



ரசிகர்களுக்கு, கர்னாடக சங்கீதத்தை அறிமுகப்படுத்தினவங்க அம்மாதான்! பாடுறது தவிர, அம்மா வீணையும் மிருதங்கமும் நல்லா வாசிப்பாங்க.

அம்மா கச்சேரிகள்ல என்னால ஆயுசுக்கும் மறக்கமுடியாத கச்சேரி, மும்பை ஷண்முகானந்தா ஹால்ல நடந்த கச்சேரிதான்! கச்சேரி ஆரம்பிக்க வேண்டிய நேரத்துல கரண்ட் போயிடுச்சு. மைக் வேலை செய்யலை. எந்த லைட்டும் எரியலை. என்ன பண்ற துனு எல்லாருக்கும் குழப்பம். அம்மா துளியும் யோசிக்கலை! பெரியவாளை மனசுல நினைச்சுண்டு, மைக் இல்லாம லேயே பாட ஆரம்பிச்சார். ஹால்ல அங்கங்கே மெழுகுவத்திகள் எரிய, இருளும் ஒளியும் கலந்தாற்போன்ற அந்த ரம்மியமான வெளிச்சத்துல, தொடர்ந்து நாலு மணிநேரம் மனசை உருக்குற குரல்ல கச்சேரி பண்ணினார் அம்மா. அந்தப் பரவச அனுபவம், இறைவனோட சந்நிதியில மட்டுமே கிடைக்கக்கூடிய ஒண்ணு!"

**மாலா சந்திரசேகர்:** *(மூத்த மகள் ராதா விஸ்வநாதனின் மூத்த மருமகள் மாலா. புல்லாங்குழல் கலைஞர். பாட்டியின் மிகப் பிரியமான பேரனின் மனைவி என்பதாலும், இசைத் துறையிலேயே இருந்தவர் என்பதாலும், எம்.எஸ் – மாலாவுக்கு இடையேயான பந்தம் மிகவும் அந்நியோன்யமானது)*

"பாட்டி எங்களை விட்டுப் போன டிசம்பர் 11-ம் தேதி எனக்கு மறக்க முடியாத நாள். இருபது வருஷம் முன்னால இதே நாள்லதான், என்னோட நிச்சயதார்த்தம் நடந்தது.

விநாயக்ராம்



மாலா



ஸ்ரீராம்குமார்



இந்த மாமேதையின் குடும்பத்துக்கு மாட்டுப் பொண்ணாகி, அவங்க பக்கத்துலயே இருந்து, அவங்களோட ஒவ்வொரு அசைவையும் அணுஅணுவா ரசிக்கிற வாய்ப்பு கிடைச்சுது என்னோட பாக்கியம்.

சங்கீதத்துல மட்டுமல்ல, சமையல்லயும் பாட்டி எக்ஸ்பர்ட்! செய்கிற எந்தக் காரியத்துலேயும் ஒரு நறுவிசு இருக்கும். அவங்க காய்கறி நறுக்கினா, அவ்வளவு பக்குவமா ஒவ்வொரு துண்டும் ஒரே அளவா இருக்குறமாதிரி கச்சிதமா நறுக்குவாங்க. கோலம் போட்டாங்கன்னா, ஒரு மெல்லிசு நூல் அவங்க கையிலேர்ந்து தரையில் இறங்கற மாதிரி, விரல்கள் வழியா மாவு வழியும். பூத்தொடுத்தா, அதில் ஒரு அழகு. தலை வாரினா, அதிலே ஒரு பதவிசு. கச்சேரிக்குக் கிளம்பும் போதெல்லாம் பெரியவா கொடுத்த குங்குமத்தைத்தான் நெத்தியிலே அழகா வெச்சிட்டுப் போவாங்க. குங்குமம் இட்டுக்கறதுகூட வட்டமா, துளி பிசிர் இல்லாம இட்டுப்பாங்க.


டெல்லியில் டாக்டர் பட்டம் வாங்கியபோது...

காஞ்சிபுரத்துலேர்ந்து பாட்டிக்கு ஸ்பெஷலா தறியில நெய்து பட்டுப் புடவை வரும். கசமுசா டிஸைன் எல்லாம் இருக்காது. ப்ளெயின் கலர்கள்ல, பளிச்னு ஜரிகையோட இருக்கும். பாட்டிக்காக போட்ட ப்ளூ கலர்தான், 'எம்.எஸ். ப்ளூ'னு இன்னிக்கு வரைக்கும் பிரபலமாகியிருக்கு. பாட்டிக்கு ஜாதிப்பூன்னா உயிர். அதைத் தொடுத்து பாட்டி வெச்சுக்கிட்டா அந்தப் பூவுக்கே தனிப் பொலிவு வந்துடும்! ரஷ்யா, அமெரிக்கானு எங்கே போனாலும், தலையில பூ வெச்சுக்காம போனதே இல்லை!

பாட்டிக்குக் கோபம் வந்து நான் பார்த்ததேயில்லை. வீட்டுக்கு வந்து போற பெண்களுக்கு வெற்றிலை, பாக்கு, மஞ்சள், குங்குமம் கொடுக்காமல் அனுப்பினதே கிடையாது. பாட்டிக்குத் தொண்டைல டான்சில்ஸ் தொந்தரவு இருந்தது. ஆனா,



'இந்த நாட்டுக்குக் கடவுள் கொடுத்திருக்கிற மிகப் பெரிய பரிசு இவங்க குரல். அதுக்கு ஏதாவது ஆயிடுச்சுன்னா..?'னு சொல்லி, ஆபரேஷன் பண்ண மறுத்துட்டார் டாக்டர். அப்புறம் கடவுள் கிருபையால அது மருந்து, மாத்திரைலயே சரியாயிடுச்சு!

அவங்களுக்கு என் புல்லாங்குழல் வாசிப்பு பிடிக்கும். தான் குரல்ல பண்ணினதை, நான் குழல்ல பண்றேன்னு மனப்பூர்வமா என்னை ஆசீர்வதிச்சிருக்காங்க. என் ஜென்மத்துக்கு அது போதும்!"

**கௌரி ராம்நாராயண்: —**
*(சதாசிவத்தின் தங்கை பேத்தியும் பத்திரிகையாளருமான கௌரி, எம்.எஸ். அம்மாவின் செல்லம்.*



★ விதி ஒரு கதவை மூடும்போது, நம்பிக்கை இன்னொரு கதவைத் திறக்கிறது. திறந்த கதவைத் தேடிச் செல்லுங்கள்!

**காப்மேயரின் கலக்கல் மொழிகள்!**

குழந்தைப் பிராயத்திலிருந்தே எம்.எஸ். வீட்டில் வளர்ந்து, பல ஊர்களுக்குப் பாட்டியுடன் பயணம் செய்த அனுபவம் உள்ளவர்)

"பாட்டி அதிகம் படிக்கலையே தவிர தமிழ், இந்தி, சம்ஸ்கிருதம், தெலுங்கு, மலையாளம்னு பல மொழிகள் தெரியும். நான் வெளியூர்ல இருக்கறப்போ அடிக்கடி லெட்டர் போடுவா. 'கௌரி கண்ணா... போன கச்சேரில 'கௌரி'னு பாடறச்சே உன்னை நினைச்சுண்டேண்டா கண்ணு'னு பாட்டி எழுதுறது நேர்ல பேசற மாதிரியே இருக்கும்.



பாட்டிக்குத் தன் கையால எல்லாருக்கும் பரிமாறுவது பிடிச்ச விஷயம். பாட்டி யாருக்காவது சென்ட் பாட்டில் கொடுத்தாங்கன்னா, அவங்களைப் பாட்டிக்கு ரொம்பப் பிடிச்சிருக்குனு அர்த்தம்!"

**ஆர்.கே. ஸ்ரீராம்குமார்:** *(எம்.எஸ்–ஸின் கச்சேரிகளில் பல வருடம் வயலின் வாசித்தவர்)*

"என் தாத்தா ஆர்.கே. வெங்கட்ராம சாஸ்திரிகள் பிரபல வயலின் கலைஞர். அவரை எம்.எஸ். அம்மாவுக்கு ரொம்ப வருஷமா தெரியும்கிறதால எங்கள் வீட்டு விசேஷம் எல்லாத்துக்கும் அம்மாவும், சதாசிவம் மாமாவும் வந்துடுவாங்க! வர்றது மட்டுமில்லாம, நலங்கு, ஊஞ்சல் மாதிரியான சடங்குகள் நடக்கறப்போ, சுருதிப் பொட்டியை வெச்சிட்டுப் பாட ஆரம்பிச்சிடுவாங்க. எங்கம்மாவோட சீமந்தத்தின்போதும் வந்து பாடியிருக்காங்க! ஆக, நான் கர்ப்பத்துலயே எம்.எஸ் அம்மாவின் பாட்டைக் கேட்டு வளர்ந்தவன்!

என்ன உடம்புன்னாலும் அம்மாவுக்குக் காலங்கார்த்தால எழுந்து, ஃப்ரெஷ்ஷா குளிச்சாகணும். அப்புறம், அமைதியா பூஜை. ராத்திரி ரொம்ப நேரம் கண் முழிக்கிற வழக்கமே அம்மாவுக்குக் கிடையாது. எட்டு மணிக்கெல்லாம் சாப்பிட்டுட்டுப் படுத்துடுவாங்க! ரொம்ப எளிமையான வாழ்க்கை வாழ்ந்த மகா யோகி அம்மா! அவரது இடத்தை இனி யாராலும் நிரப்ப முடியாது!"



– **பிரேமா நாராயணன்**

படங்கள்: **என்.விவேக்**

பெயரில் 'அவ்னி' சினி மேக்ஸ் என்ற கம்பெனியைத் துவக்கி 'கிரி' என்ற படத்தைத் தயாரித்தேன். படம் நல்ல விலைக்கு விற்றது. லாபம் வந்தது வெற்றிகரமாக ஓடி நல்ல பெயரும் கிடைத்தது.

எங்களுக்கு குலதெய்வம் பழனி யிலிருந்து உடுமலைப் பேட்டைப் போறவழியில் கொழுமம் அருகில் உள்ள ஐவர் மலையிலுள்ள சுவாமி தான். ஐவர் மலையைப் பற்றி சொல்ல வேண்டுமென்றால், 'பஞ்ச பாண்டவர்கள் பதினான்கு ஆண்டுகள் வனவாசம் முடிந்து ஒரு வருடம் ஒளிந்து வாழ்வதற்காக இந்த மலைக்கு வந்து தங்கும் போது அவர்கள் இங்குள்ள கோயிலை அமைத்தார்களாம். அந்த தெய்வம் தான் எங்களுக்குக் குலதெய்வம். இரண்டாயிரமடி உயரத்தில் பாறை மீதுள்ள அந்த கோயிலில் ஆடி அமாவாசை, ஆடிப் பதினெட்டு போன்ற நாட்களில் சிறப்பு பூஜை நடக்கும். சமீபத்தில் அந்த கோயி லுக்குச் சென்று என் குழந்தைகளுக்கு மொட்டை போட்டு காது குத்தினோம். ●

**குஷ்பு:**

எனக்கு கடவுள் மீது தீவிரமான நம்பிக்கை கிடையாது. இருந்தாலும் குடும்பத்திற்கு விளக்கேற்ற வந்தவள் என்பதால் குடும்ப நலன் கருதி சுவாமி அறையில் விளக்கேற்றிய பின்தான் மற்ற வேலைகளைச் செய்கிறேன். இது ஒரு மருமகளின் கடமை.

**- சந்துரு**

**படங்கள்: சித்ராமணி**



# 2004

## சூப்பர் இசையரசி



'குறையொன்றுமில்லை...' என்று பாடி இசைக்குக் குறையே வைக்காத இசைக்குயில் எம்.எஸ்.சுப்புலட்சுமியின் மரணத்தால் தன் பட்டத்து இசையரசியை இழந்து பரிதவிக்கிறது இசை உலகம்.

# 2004 சூப்பர் பல்டி



மதமாற்றத் தடைச் சட்டம், கோவில்களில் ஆடுகள் பலியிடத் தடை, அரசு ஊழியர்கள் டிஸ்மிஸ் என்று தான் இயற்றிய அத்தனை ஆணைகளையும் தேர்தல் போட்ட சூட்டால் 'வாபஸ்' என்ற பெயரில் ஜெயலலிதா அடித்த இந்த பல்டிதான் இந்த ஆண்டின் சூப்பரோ சூப்பர்!

அப்ப யார் யாருங்க மேலெல்லாம் சந்தேகமோ அவங்களையெல்லாம் பிடிச்சுக் கொண்டு வருவாங்க.

கொண்டு வந்தவுடன், விசாரணை ஆரம்பிக்கும். முதல்ல துணியை அவுப்பாங்க... ஏதாவது எதிர்ப்பு சொன்னா அவ்வளவுதான், அன்னைக்கு முழுசும் இரண்டு காலையும் விரிச்சு வைச்சு அவங்க தொடை மேல ஏறியிருப்பாங்க. இப்படிப் பண்ணா பயங்கரமாக வலிக்கும். சிலபேரு அப்படியே ஒண்ணுக்குப் போயிடுவாங்க.

அப்புறமா கையைப் பின்னாடி மடக்கி வைச்சி, விலங்கு போடுவாங்க. சில போலீஸ்காரங்க முடியைப் பிடிச்சு சுவரில் மோதுவாங்க.

பொம்பளைங்கன்னா தனியா கொண்டு போவாங்க. அவங்களையே துணியைக் கழற்றச் சொல்லுவாங்க, அவுக்கலைன்னா எஸ்.டி.எஃப்.காரங்களே துணியை உருவிடுவாங்க. கூனிக் குறுகிப்போய் நிற்பாங்க பொம்பளைங்க.

அப்படி நிற்கிற பொம்பளைங்க மேல மிளகாய்த் தூளைக் கொட்டுவாங்க..." என ஆவேசப்படும் சிவனய்யா தொடர்ந்து கொஞ்சம் தண்ணீர் குடித்துவிட்டு மீண்டும் கொண்டு என்னையும் அழைத்துப் போனாங்க. அப்படிக் கொண்டு போனவங்க கையில குண்டு இல்லாத துப்பாக்கியைக் கொடுத்துட்டு சுட்டுக் கொன்னுட்டாங்க. அவங்களோட துப்பாக்கி சண்டை போட்டதில் இறந்து போனதாக வெளியே செய்தியைப் பரப்பிவிட்டாங்க.

அந்தப் பிணங்களை நான்தான் மலைப் பகுதியில் எடுத்து வீசினேன். இதில நான்கு பேர் எனக்குத் தெரிஞ்சவங்க. இப்படிப் பலமுறை நடந்திருக்கு. என்னுடைய ஞாபகப்படி இப்படி 66 பேரைச் சுட்டுக்கொன்னிருக்காங்க...

ஒரு தடவை ஒரு பொம்பளையை ஒரு இன்ஸ்பெக்டர் முகாமில் இரண்டு நாளாக மாறி மாறி கற்பழிச்சார். இப்படி இரண்டு பெண்களைக் கற்பழிச்சாங்க. நான் முகாமில் இருக்கும்போது எத்தனையோ தடவை இப்படி நடந்திருக்கு. இப்படி பாதிக்கப்பட்ட இரண்டு பொம்பளைங்க இன்னும் உயிரோடுதான்


வீரப்பன்

**"ஒவ்வொரு நாளும் சாவோடு போராடிட்டு இருந்தோம். கரண்ட் ஷாக் கொடுப்பாங்க, வானம் இடிஞ்சி தலைமேல விழுகிற மாதிரி வலிக்கும்!"**

தொடர்ந்தார்.

"ஒரு தடவை நல்ல மழை! மழைக்காலத்துல வெளியே போக மாட்டாங்க. போனாலும் ரொம்பக் கம்மிதான். அப்ப பிடிச்சி வைச்சிருந்த 20 பேருக்கு பச்சைநிற பேண்ட் சர்ட்டை போடச் சொன்னாங்க. அப்போதே எனக்கு ஏதோ நடக்கப் போவுதுன்னு தெரிஞ்சிடுச்சி.

எல்லாரையும் ஜீப்புல ஏற்றிக் இருக்காங்க" எனச் சொல்கிறார் சிவனய்யா.

கடைசியாகக் கிடைத்த தகவல்படி அதிரடிப்படைத் தலைவர் விஜயகுமார், "மனித உரிமை என்ற பெயரில் வீரப்பனுக்கு ஆதரவாகச் செயல்படும் சிலருக்கு விளக்கம் அளிக்கத் தேவையில்லை" எனக் கூறியுள்ளார்.

- ரா. சின்னத்துரை

# காற்றினிலே கலந்த கீதம்...!

அப்பொழுது சென்னை கீழ்பாக்கத்தில் இருந்த நியூட்டோன் ஸ்டுடியோவில் 'சகுந்தலை' படப்பிடிப்பு நடைபெற்று வந்தது. அந்தப் படத்தை மதுரை ராயல் டாக்கீஸார் தயாரித்தார்கள்.



அதில் சகுந்தலையாக எம்.எஸ். சுப்புலட்சுமி நடிக்க, பிரபல கர்நாடக சங்கீத வித்வான் ஜி.என். பாலசுப்ரமணியம் (ஜி.என்.பி.) துஷ்யந்தனாக இணைந்து நடிக்கும் காட்சிகள் படமாகி வந்தன.

'சகுந்தலை' படத்தை வெளிநாட்டுப் பட இயக்குநர் எல்லீஸ் ஆர்.டங்கன் இயக்கிக் கொண்டிருந்தார். அவருக்குத் தமிழ் தெரியாததால் தமிழ் கதாநாயக நடிகர் பாலசுப்ரமணியம் அவருடன் ஆங்கிலத்தில் காட்சிகளைக் குறித்துப் பேசுவார். திருமதி. எம்.எஸ்.ஸிடமும் டங்கன் என்ன பேசினார் என்று ஜி.என்.பி. விளக்குவார்.

'சகுந்தலை' படப்பிடிப்பைப் பத்திரிகையாளர்கள் பார்க்க, எம்.எஸ்.ஸின் கணவர் சதாசிவம் அனுமதிப்பதில்லை.

அவரது அந்தக் கண்டிப்பில் இருந்து விடுபட எனக்கு ஆசிரியர் கல்கி விசேஷ அனுமதி பெற்றுத் தந்திருந்தார். எனவே 'சகுந்தலை' படப்பிடிப்பை நான் சில நாட்கள் சென்று பார்க்க முடிந்தது.

எம்.எஸ். பெரும்பாலும் தனியே உட்கார்ந்திருப்பார். நகைச்சுவை ஜோடியான கலைவாணர் - டி.ஏ. மதுரம் வந்தால் அவர்களிடம் மட்டும் பேசுவார்! சிரித்து மகிழ்வார்! மற்றவர்களிடம் அப்படியெல்லாம் பேசுவது இல்லை. காரணம், கணவர் சதாசிவத்திற்கு அது பிடிக்காது.

ஒருநாள் சுப்புலட்சுமியின் இல்லத்து மாடியில் ஒரு விசேஷம் நடைபெற்றது. அதற்காக வைத்திருந்த விருந்தில் ராஜாஜி, ஆசிரியர் கல்கி, டி.கே.சி. மற்றும் பல பிரமுகர்கள் கலந்து கொண்டனர். உணவு பரிமாறப்பட்டு முடிவடைந்ததும் ராஜாஜி சுப்புலட்சுமியிடம் "தமிழில் ஒரு பாடல் பாடு!'' என்றார்.

எம்.எஸ். ராமாயணப் பாடலான, சீதாப்பிராட்டி மிதிலை அரண்மனை மாடத்தின் மீது நின்று, வீதியில் விசுவாமித்திரருடன் வந்து கொண்டிருக்கும் ஸ்ரீராமர், இலக்குவனைப் பார்த்து, - ராமனின் அழகில் லயித்து எழுதப்பட்ட பாடல் அது - 'யாரோ இவர் யாரோ - என்ன பேரோ!' என்று தொடங்கப்பெறும் அந்தப் பாடலை எம்.எஸ். இனிய குரலில் பாடினார். அனைவரும் அதை ரசித்தார்கள். ராஜாஜி சிரித்துக் கொண்டே வேடிக்கையாக "நான்தான் அருகில் இருக்கிறேனே, 'யாரோ' என்று கேட்கிறீர்களே? நான் ராஜகோபாலாச்சாரி!" என்று சொல்ல, அனைவரும் குலுங்கிச் சிரித்தார்கள்.

ராஜா சர்.அண்ணாமலை (செட்டியார்) தொடங்கிய தமிழ் இசை இயக்கத்தின் சார்பில் நடைபெற்ற இசை விழா, அப்போது சென்னை அரண்மனைக்காரத் தெருவில் உள்ள செயின்ட் மேரீஸ் ஹாலில் நடந்து கொண்டிருந்தது. ஒரு நாள் எம்.எஸ். பாடினார். மூன்று மணி நேரம் தமிழ்ப் பாடல்களாகவே அவர் பாடி ரசிகர்களை மகிழ்வித்தார்.

தமிழில் பல அருமையான பாடல்கள் இருக்கின்றன. மெட்டுகள் அமைத்தால் அவற்றைப் பல மணி நேரம் பாடமுடியும் என்று அந்த நிகழ்ச்சியில் நிரூபித்தார்.

அவர் கடைசியாக தமிழில் நடித்த படம் 'மீரா'. 'பாரத ரத்னா' விருது வாங்கிய இவர் அந்த விருதைவிட 'இசைப் பேரரசி' என்று அழைக்கப்படுவதைத் தான் பெரிதும் விரும்பினார்.

'காற்றினிலே வரும் கீதம்' பாடல் மூலம் பிரபலமான எம்.எஸ். சுப்புலட்சுமி இன்று காற்றினிலே கலந்து கீதமாகி விட்டார்!

- நவீனன்

**"கோடி கோடி உள்ளத்தில் உணர்வாய் வாழ்ந்த நீ, வானுலகிலும் இசையாய் இருப்பாய்!"**

–அப்துல் கலாம்



# காற்றினிலே...

* பட்டைத் தீட்டி ஒளிரச் செய்த கணவர் சதாசிவம்



* குடும்பத் தலைவி - மகள்கள் ராதா, விஜயாவுடன்...

* சுந்தரமான இல்லறம்



* கல்கி நிறுவன ஸ்தாபகர் - அமரர் கல்கி நூற்றாண்டில் திருமதி கல்கியுடன்...



அட்டை
வண்ணப்படம் :
**யோகா**



* இளமையில்...



* இசையரசி



* திரை நட்சத்திரம் (மீரா)



* சகுந்தலை திரைப்படத்தில்...

# சங்கீத தர்மம்

மண்ணில் விளையாடிக் கொண்டிருந்த சிறுமியைப் பந்து போல் தூக்கிப் போய் மேடையில் அமர்த்தி விட்டார்கள். அம்மா ஷண்முக வடிவின் வீணைக் கச்சேரி நடந்து கொண்டிருந்த மேடை! குஞ்சம்மாவுக்கு மேடையோ கச்சேரியோ புதிதல்ல... ஆனால் “பாடு” என்று அம்மா கேட்டது புதிது. எனினும் எந்தவிதத் தயக்கமும் இன்றி தொண்டையை விட்டுப் பாடியது குழந்தை-தெரிந்த சில பாடல்கள். பாடுவதற்கென்றே பிறந்தது போல் பாடியது! கைத்தட்டல் வானைப் பிளந்தது. அதன் பிறகு ஷண்முகவடிவு செய்த கச்சேரிகளில் ரசிகர்கள் எம்.எஸ். சுப்புலட்சுமியின் சிறு பங்கை ஆவலோடு எதிர்பார்க்க ஆரம்பித்தார்கள்.



மதுரை, ஷண்முகவடிவு சுப்புலட்சுமி மிக எளிய கலைக்குடும்பத்தில் பிறந்து, பாடகியாக வளர்ந்ததும், திரை நட்சத்திரமாகி ஜொலித்ததும், டி. சதாசிவத்தை திருமணம் செய்து கொண்டதும் ‘பாடும் பணியே பணியாய் அருள்வாய்’ என்று இசையை இறையர்ப்பணம் செய்து, செல்வத்தை சமுதாய நலனுக்கு அள்ளித் தந்ததும் வரலாறாகிவிட்டன.

ஆனால், மேடையில் முதன் முதலில் பாடிய அந்தக் குழந்தை உள்ளத்தின் கள்ளமற்ற அன்பும் நேசமும் மட்டும் இறுதிவரை மாறவே இல்லை.

திருச்சிக்குச் சென்றால், சின்னக் கடை வீதியில் எல்.என்.எஸ் மணி அய்யர் வீட்டில்தான் சதாசிவம் தம்பதி தங்குவது வழக்கம். தெருவிலும், திண்ணை வரையிலான ஐந்துபடிகளிலும் கூட்டம் நிறைந்து விடும் - எம்.எஸ்ஸைப் பார்க்க... ஒருமுறை மணி அய்யர் வீட்டு மூத்த பெண்மணி ஒருவர், “குஞ்சம்மா, இத்தனை ஜனங்க உன் பாட்டைக் கேட்க பணம் கொடுத்து கச்சேரிக்கு வர முடியுமா...? இவாளுக்காக ஒரு பாட்டு பாடேன்...'' என்று கேட்டுக் கொள்ள, சதாசிவம் அனுமதியுடன் திண்ணையில் வந்து நின்றார் எம்.எஸ். ‘‘கண்டதுண்டோ கண்ணன் போல்'' என்ற அமரர் கல்கியின் பாட்டை அவர் பாட, வீதியில் மேலும் கூட்டம் சேர்ந்து போக்குவரத்தே தடைப்பட்டது.

- “இப்போதும் அந்தக் காட்சி எங்கள் கண் முன்

பசுமையாக இருக்கிறது'' என்று விவரித்து நமக்கு எழுதியுள்ளனர் மணி அய்யரின் பெண்கள் ரேவதி ரமணி, இந்திரா நரசிம்மன்.

பிறிதொரு சமயம் ஒரு சிற்றூரில் மூன்று மணி நேரம் ஸ்ரீராம நவமி கச்சேரி. நிகழ்ச்சி அற்புதமாக நடந்து முடிந்து, களைத்துப் போய் குழுவினர் உறங்கவிருந்த நேரத்தில் ஒரு சில விவசாயக் குடிமக்கள் இரைக்க இரைக்க வந்து சேர்ந்தனர். "தொலை தூரத்திலிருந்து வருகிறோம்... குக்கிராமம்... நீண்ட தூரம் நடந்து வண்டி பிடித்து வருவதற்குள் கச்சேரி அனேகமாக முடிஞ்சு போச்சு... அம்மாவைப் பார்க்கணும்...'' நள்ளிரவை நெருங்கும் நேரம் என்றும் பாராமல், உடன் வந்திருந்த கௌரி ராம்நாராயணுடன் (ஆனந்தியின் மகள்) தங்கியிருந்த கிராமத்து வீட்டின் வாசல்படியில் அமர்ந்தபடி, அந்த எளியவர்களுக்காக 'குறையொன்றுமில்லை' பாடினார் எம்.எஸ்.

இரண்டாண்டுகளுக்கு முன் காலில் எலும்பு முறிவு ஏற்பட்டு இஸபெல் மருத்துவமனையில் இருந்த நேரம். அறுவைச் சிகிச்சை முடிந்த நிலையில் அவரைக் காண ஒரு பெரிய செவிலியர் குழுவே வந்தது. மெள்ள அவரை எழுப்பி சாய்வாக உட்கார வைத்தனர்... "அம்மா, உங்க பாட்டைக் கேட்கணுமே...'' என்றனர். புன்னகை செய்துவிட்டு அவர்களுக்காக "கஞ்சதளாயதாக்ஷி'' என்ற தீக்ஷிதர் கீர்த்தனையைத் தாளம் போட்டுக் கொண்டு பாடினார் எம்.எஸ். உலகத்துக்கே ஒரு பிரார்த்தனை போல் ஒலித்த அந்தக் குரலையும் பாடலையும் கேட்டு, நெகிழ்ந்துபோய் நின்றுவிட்டனர் செவிலியர்கள்.

ஐ.நா சபையானாலும் சரி, ஆஸ்பத்திரி அறையானாலும் சரி, சின்னக் கடை வீதி திண்ணையானாலும் சரி... தன்னையே உருக்கி வார்த்துத்தான்

---

# வாசகர்களின் அஞ்சலி

என் ஒரே மகள் பிறக்கும்போதே கேட்கும் திறனின்றிப் பிறந்தாள். ஆனால் படிப்பிலும் மற்ற எல்லாவற்றிலுயம் சிறந்து விளங்கினாள். காமிராவுக்கு ஏற்ற முகம். 1984ல் மங்கை பத்திரிகையில் ஊனமுற்றோர் ஆண்டுக்காக அட்டைப் படத்தில் போடப் பேட்டி எடுத்தார்கள். அப்போது நிருபர் 'உன் ஆசை என்ன. நான் நிறைவேற்றுகிறேன்' என்று என் பெண் அமுதாவைக் கேட்டார்.

''என் அம்மா



மறுபடியும் மறுபடியும் எம்.எஸ். அம்மாவின் பாட்டைக் கேட்க ஆவலோடு ஓடுவார்கள். 'ஏன் இப்படி க்ரேஸியாக இருக்கிறீர்கள்?' என்று கேட்டேன். 'அவர்கள் குரல் இனிமையும் பக்தியும் நிறைந்தது' என்பார்கள். என்னால் குரலைக் கேட்க முடியாது. அவரை நேரில் ஒரு முறை காண ஆவலாக இருக்கிறது'' என்றாள். ஏற்பாடு செய்தார்கள்.

அப்போது நுங்கம்பாக்கத்தில் சுதந்திரா பார்க் எதிரில் வீடு. எம்.எஸ். அம்மா எளிமையான

பாடினார் எம்.எஸ். சுப்புலட்சுமி.

இப்பேர்பட்ட பாடகர் உலகத்துக்கே சொந்தமாகிப் போனதில் ஆச்சர்யம் என்ன!

இதன் காரணமாகவே அவர் குடும்பத்து உறுப்பினர்கள் அவர் மீதும், அவரது பொன்னான நேரத்தின் மீதும் அதிகம் உரிமை கொண்டாடாமல் இருக்க கஷ்டப்பட்டு முயன்றனர்; தங்களைக் கட்டுப்படுத்திக் கொண்டனர். ஆனால் "அம்மா, " "குஞ்சக்கா", "குஞ்சம்மா" என்று அழைத்து வளைய வந்த குடும்பத்தின் மூத்த தலைமுறையையும், "அம்முப் பாட்டி" என்று வியந்த அடுத்த தலைமுறையையும் 'அம்மூஸ்' என்று செல்லமாக உரிமையுடன் பெயரிட்ட மூன்றாவது தலைமுறையையும், தமது அரவணைப்பில் இழுத்து இழுத்து வைத்துக் கொண்டு, அன்பைப் பொழிந்தார் எம்.எஸ்.



குழந்தைப் பருவத்தில் அவர் கையால் நிலாச் சோறு வாங்கிச் சாப்பிட்டதும் வளரும் பருவத்தில் உடுத்தவும் பழகவும், அவர் கற்றுத் தந்ததும், சத்

---

புடைவையில் தம்பூராவுடன் பாடிக் கொண்டிருந்தார்கள். என் மகளை அன்புடன் உபசரித்து ஆசீர்வதித்தார்கள்.

லக்ஷ்மியும், சரஸ்வதியும் ஒருங்கிணைந்த தெய்வீக முகம், அன்பு, எளிமை எங்கள் இருவர் நெஞ்சிலும் நிரந்தரமாகத் தங்கிவிட்டது. எப்போதும் எங்கள் நெஞ்சில் வசிக்கிறார்கள்.

– கமலா சீனிவாசன்,
சென்னை - 90

இரண்டு வருடங்களுக்கு முன் என்னுடைய மகன் திருமலை, அவனது மனைவி சுதா, குழந்தைகளுடன் பஹரைனிலிருந்து வந்திருந்தான். குழந்தைகள் அனன்யா, அபிநயா 'ஹனுமான் சாலிஸா' நன்றாகக் கற்றுக் கொண்டிருந்தார்கள். என் மகன் தன் குழந்தைகளை எம்.எஸ். அம்மா எதிரில் பாட வைத்து ஆசீர்வாதம் வாங்கும் தன் ஆசையை வெளியிட்டான். ஸ்ரீமதி ராதா விஸ்வநாதன் அதற்கு அனுமதி வாங்கித் தந்தார்கள். நாங்களும் குழந்தைகளை அழைத்துக் கொண்டு போனோம். சிரித்த முகத்துடன் வரவேற்று, தாமே தம் கையால் குழந்தைகளுக்கு ஸ்ருதி சேர்த்துக் கொடுத்து 'ஹனுமான் சாலிஸா' பாடச் சொன்னார். அவர்கள் பாடும்போது அம்மா கண்களை மூடிக் கொண்டு மெய்மறந்து அனுபவித்தது என் கண் முன்னாலேயே நிற்கிறது.

– லக்ஷ்மி ராகவன் அசோக்நகர்

நம்முடைய தேகமும் உள்ளமும் ஆண்டவனின் கோயில். அதை படு சுத்தமாக வைத்துக் காப்பது, நமது



யம் - தர்மத்தின் நிலையான முக்கியத்துவத்தை அவருடைய வாழ்க்கையை அருகிலிருந்து பார்த்து உணர்ந்து கொண்டதும், இறையருளால் அவர் குடும்பத்தினருக்கு வாய்த்தவை. "நேரமில்லை" என்று நாம் சர்வ சாதாரணமாக இன்று கூறும் காரணத்தை அவர் சொல்லிக் கேட்டதேயில்லை! உலகுக்காகவே வாழ்ந்தவர் என்றாலும், எளிய சந்தோஷங்களை அனுபவிக்கவும் வழங்கவும் என்றுமே எப்போதுமே தயாராயிருந்தார்.

குடும்பத்தினர் மட்டுமில்லை, நண்பர்கள் வட்டத்திலும் சரி, ஓரிருமுறை மட்டுமே சந்தித்தவர்களும் சரி... "எம்.எஸ்.ஸுக்கு என்னிடம் தனிப் பிரியம் உண்டு தெரியுமா" என்று தவறாமல் சொல்லக் கேட்டதுண்டு. ஆயிரம் பேர் அடங்கிய கூட்டத்திலும் தெரிந்த முகம் ஒன்று தென்பட்டால், உடனே அடையாளம் தெரிந்து கொள்வார்... "விசாலத்துடைய அம்மா தானே...? சௌக்கியமா...?" என்று ஆரம்பித்து, ஓரிரு கணங்களில் குடும்பத்தையே விசாரித்து விடுவார்.

வாழ்வின் இறுதி நாட்களில் சென்னை இஸபெல் மருத்துவமனையில் இருந்தபோது டாக்டர் சி.வி. கடமை- என்ற முதறிஞர் ராஜாஜியின் சொல்லின்படி வாழ்ந்து காட்டிய திருமதி எம்.எஸ். அவர்கள், இந்த நூற்றாண்டின் ஒப்பற்ற பெண்மணி!

**- சிம்மவாஹினி,**
**வியாசர் காலனி**

பகவான் ஸ்ரீசத்ய சாயிபாபாவின் பொற்பாத கமலங்களில் சேர்ந்தார் திருமதி எம்.எஸ். அவருடைய பஜனைப் பாடல்களையும், விஷ்ணு சஹஸ்ரநாமம், பஜகோவிந்தம் முதலிய ஏராளமான சொத்துக்களையும் நாம் பாடி அவருக்கு அஞ்சலி செலுத்துவோமாக!

**- டி.ஏ.நாகராஜன்,**
**திருப்பத்தூர்**

பாடிப் பாடி கனிந்த குரல்
கொடுத்துக் கொடுத்து சிவந்த கைகள்
அன்பை மட்டுமே பொழிந்த இதயம்
அகிலத்தையும் அரவணைக்கும்
கண்கள்.

**- எஸ்.ஜெயராமன்,**
**பெங்களூர் - 32**

தாபித்தாய் சாம்ராஜ்யம்!
இசையின் ராஜ்யம்!
தனி ராஜ்யம்! ஈடில்லா
எம். எஸ்ஸின் ராஜ்யம்!
சோபிக்கும் இசை வீச்சில்
குவலயமே
சொல்லவொண்ணா
மயக்கத்தில் சொக்கி நிற்கும்!

**- ரெ. மல்லபிள்ளை,**
**ஆத்தூர்**

அறுபதுகளில் இருமுறை அவர் பிலாயில் கச்சேரி செய்ய வந்தார். ஒருமுறை அவர், சதாசிவ அத்தான், ராதா மூவரும் எங்கள் வீட்டில் காலை டிபனுக்கு வந்தார்கள். அப்போது நான் சமையலில் கற்றுக்குட்டி என்றாலும் என் கைவண்ணத்தை அவர்கள் ரசித்துச்

கிருஷ்ணசாமி தலைமையிலான மருத்துவக் குழு அவரைக் கண்ணும் கருத்துமாக கவனித்துச் சிகிச்சை அளித்து வந்தது. டாக்டர் சி.வி.கே வந்தபோதெல்லாம் கரம் குவித்துப் புன்னகை செய்தார். இரவுப் பணிக்கு வந்த நர்ஸ் சிஸ்டர் நிர்மலாவின் கன்னத்தைத் தடவி, ''சாப்பிட்டாச்சா?'' என்று விசாரித்தார். பேசுவதற்கு சக்தி இருந்தவரை, இந்த விசாரிப்பும் நிகழ்ந்தது.

தாம் வாழும் காலத்தில் பிறர் வாழ்வை மலர்விக்க இயன்றதனைத்தும் செய்ய வேண்டும் என்று, சிறிதும் பெரிதுமாக அவர் செய்தவற்றைச் சொல்லியோ எழுதியோ மாளாது.

அவரை அறிந்தவர்கள் ஒவ்வொருவர் உள்ளத்திலும் ஒரு வாழ்நாள் முழுவதும் நினைத்து நினைத்து அசைபோடும் அளவுக்கு ஞாபகங்கள் இருக்கும்.

அவரை அருகிருந்து அறியாதவர்களுக்கும்கூட, அவர் இசையும் வாழ்வும் பணியும் ஊக்கமளித்து வழிகாட்டும்.

'சத்யம் வத - தர்மம் சர' என்பது நமது வேத வாக்கு.

- சத்தியத்தைப் பேசு. தர்மத்தை வெறுமே பேசிப் பயனில்லை; வாழ்ந்துதான் காட்ட வேண்டும் என்பது இதன் பொருள்.

எம்.எஸ். சுப்புலட்சுமியின் வாழ்க்கை இந்த இலக்கணத்தை உள்ளடக்கிய காவியம். சத்திய ஒளியுடன் அவர் சங்கீதம் வெளிப்பட்டது. வாழ்க்கை தர்மமும் சங்கீத தர்மமும் வேறல்ல என்பதை உலகுக்கு உணர்த்திக் கொண்டேயிருக்கிறது.

- சீதா ரவி

---

சாப்பிட்டது இன்னும் என் நினைவில் பசுமையாக உள்ளது!! அவரைப் போன்ற எளிமையான குணம் யாருக்கு வரும்?

- இந்திரா, சென்னை - 14

கர்நாடக சங்கீதம்
பூலோக முடுக்குகளிலெல்லாம்
புகுந்தது போதாதென்று
வானுலகச் சந்துகளிலும் பரவ
வழியாகிச் சென்றாயோ?
- சு.காசி விஸ்வநாதன், சென்னை - 44

ஊன் கலந்து உயிர் கலந்து
உவப்பூட்டும் உன் இசையால்
வான் உலகை மகிழ்வூட்ட
வாஞ்சையுடன் சென்றாயோ?

செவி நிரப்பும் உன்னுடைய
சங்கீதப் பேரலைகள்
புவியிருக்கும் நாள்வரைக்கும்
புகழ் கொண்டே நிற்கு மம்மா!
- இளங்கம்பன், பழனி



(அஞ்சலி தொடரும்)

ஒருமுறை பெங்களூரில் எம்.எஸ். கச்சேரி செய்ய வந்திருந்தார். ரசிகர் கூட்டம் அலைமோதியது. அன்று சாலையில் போக்குவரத்து நிறுத்தப்பட்டது. ஒரு கர்நாடக இசைக் கச்சேரிக்காக போக்குவரத்து நிறுத்தப்பட்ட அதிசயத்தை, நான் அன்றுதான் முதன் முதலாகக் கண்டேன். இரண்டு கிலோ மீட்டர் தூரத்துக்குக் கார்களின் வரிசை. அடேயப்பா! என்ன கூட்டம்! என் வாழ்நாளில் மறக்க முடியாத நிகழ்ச்சி அது.

பம்பாயில் என் வீட்டுக்கு வரும் சமயங்களில் நிச்சயம் உணவருந்திவிட்டே போவார். சமையல் ஆகிக் கொண்டிருக்கும்போது மெல்ல என் மனைவியின் காதுகளில் "காரம், புளி வேண்டாம்" என்று கிசுகிசுப்பார். அவருக்கிருக்கும் உரிமைக்கு அவர் கட்டளையே இடலாம். ஆனா லும் மிக மெல்லிய குரலில், பக்குவமாகச் சொல்வதுதான் எம்.எஸ்.ஸின் தனிப் பண்பு.

- **ஏ.எஸ். ராமன்** எழுதிய கட்டுரையிலிருந்து
*(முன்னாள் ஆசிரியர் - இல்லஸ்ட்ரேடட் வீக்லி)*

# அள்ளிக்கொடுத்த அன்னை!

அன்னை கஸ்தூரிபா காலமான போது காந்திஜிக்கு ஆறுதல் அளிக்கக் கூடிய ஏதாவது ஒன்றைச் செய்ய வேண்டுமென்று, சில முக்கியஸ்தர்கள் கூடி யோசனை செய்தனர். அந்த முக்கியஸ்தர்கள் ராஜாஜி, கல்கி கிருஷ்ணமூர்த்தி, சதாசிவம்-எம்.எஸ். சுப்புலக்ஷ்மி தம்பதியர் மற்றும் தமிழ்நாட்டில் காந்திஜியின் ஹரிஜன இயக்கத்தை நடத்தி வந்த எல்.என். கோபாலஸ்வாமி. காந்திஜியின் அனுமதியுடன் கஸ்தூரிபா நினைவு நிதி ஒன்றை ஆரம்பிக்க வேண்டும் என்றும், எம்.எஸ். தமிழ் நாட்டில் சில இடங்களில் கச்சேரி செய்து அதில் வசூல் ஆகும் முழுப் பணத்தை யும், கஸ்தூரிபா காந்தி நினைவு நிதிக்காக காந்திஜியிடம் அளிப்பதென்றும் முடிவு செய்தார்கள்.



* பாரதிய வித்யாபவனில் நடந்த 'எம்.எஸ். சிரத்தாஞ்சலி' நிகழ்ச்சியில்... (படம் : யோகா)

கச்சேரி நடந்த ஐந்து ஊர்களிலும் ஒன்றை ஒன்று . மிஞ்சும்படி கச்சேரிகளை கட்டியதுடன், வசூலும் ஜோராக இருந்தது. கச்சேரிகள் முடிந்த சில நாட்களில் கோபாலஸ்வாமி, எம்.எஸ். கச்சேரிகள் மூலம் ரூபாய் ஒரு லட்சத்துக்கும் அதிகமாக வசூல் ஆயிற்று என்றும், இந்தப் பணம் சீக்கிரமே காந்திஜியிடம் வழங்கப்படும் என்றும் பத்திரிகைகள் வாயிலாகத் தெரிவித்திருந்தார். (அந்தக் காலத்தில் ஒரு லட்சம் ரூபாய் என்பது இன்றைய ஒரு கோடி ரூபாய்க்குச் சமம்).

இந்த இசை நிகழ்ச்சிகள் ஒரு மகத்தான முன் உதாரணம்.

மயிலை கபாலீஸ்வரர் கோயில் புனருத்தாரணத்துக்காகவும் அதைத் தொடர்ந்து கும்பாபிஷேகத்துக்காகவும், சென்னையில் ஒரு கச்சேரி செய்து அந்தப் பணம் மொத்தத்தையும் கோயிலுக்கு அளித்தார்.

இன்ப கானத்தையும், தாராள நிதி உதவியையும் அள்ளி அள்ளிக் கொடுத்த அன்னை, இன்று நம்மிடையே இல்லை என்பதை உள்ளம் ஏற்க மறுக்கிறது.

- கோபு, சென்னை-20

நெற்றி நிறைய குங்குமத்தையும் முகம் நிறைய கண்ணியத்தையும் சுமந்து கொண்டு, அந்தத் தாய் 'தேவாதி தேவா சதாசிவா' என்று பாடும்போது, வைர மூக்குத்தியின் மின்னலும், நாண மின்னலும் முகத்தில் இழையோடியதைப் பார்த்திருக்கிறேன். அர்த்தம் தெரியாத, ராகம் தெரியாத என்னையும், ஆனந்த பரவசத்தோடு ஆகாயத்தில் பறக்க விட்ட அந்த அன்னையின் ஆத்ம சாந்திக்காக இறைவனைப் பிரார்த்திக்கிறேன்.

- அமானுல்லா, கொச்சி

## எம்.எஸ். நினைவுகள்

தேனினும் இனிய குரலால் மனதை உருக்கும் வண்ணம் அவர்கள் பாடும்போது மற்றவர்கள் மனத்தைத் தொட்டு கண்களைப் பனிக்கச் செய்வது எதனால் என்றால் அவர்களது ஆத்மானுபவமேதான் (ஈலா கனி விவரிம்பலேனு சால ஸ்வானுபவவேத்யமே) அதை ஒரு வேள்வியாகவே செய்து வந்தார். அவரது அடக்கம், காஞ்சிமுனிவரிடம் அவர் வைத்திருந்த எல்லையற்ற பக்தி, கணவரிடம் கொண்டிருந்த பெருமதிப்பு, விளம்பரமின்றி வாரி வழங்கும் வள்ளல் தன்மை என எத்துணை நற்குணங்கள்! பட்டங்களும் விருதுகளும் அவரை அடைந்து பெருமை பெற்றன என்றால் மிகையாகாது.

- தஞ்சை, கல்யாணபுரம் ஆராவமுதாச்சார்யார்



* ராதாவிஸ்வநாதன், திருமதி. ஏ.எஸ்.ராமனுடன் எம்.எஸ்.




* இனிமை குரலில் மட்டுமல்ல...
(வீணை கே.எஸ். நாராயணசாமியுடன்)

**ஊ**னும் உடலும் உயிரும் உருகிக் கரையும்
உவமிக்கவொணா உம்பரும் உய்த்துணரும்
அற்புத பல்லிசைப் பகலவனன்றோ அவள்!
பகலவன் மறைந்ததாகச் சரித்திரம் உண்டோ!
எப்பாலும் விரிந்து எல்லாமாய் நிறைந்து நிற்கும்
அற்புதமே! என்றும் நீ வாழ்ந்திருப்பாய்
பிரபஞ்சத்தின் உயிர்மூச்சாய்!

**- ரா. கல்யாணசுந்தரம்**
**சென்னை - 116**



* இசையின் ஜீவ நதிகள் (டி.கே.பி.,
பால சரஸ்வதி, எம்.எஸ்., எம்.எல்.வி)

* காதில் தேன் பாயக் காத்திருக்கும் கூட்டம்



**ம**துரமான மதுரை மண்ணில்
மலர்ந்த மல்லிகை மலராய்
ஏழிசையில் ஏற்றம் பெற
எழிலிசைக் குடும்பத்தில் தோன்றிய
இன்னிசைக் குயில்!

அபார சங்கீத ஞானத்தால்
வீடு நாடு தேசம் தாண்டி
அகிலமெங்கும் இசையால்
வேள்வி செய்து உச்சமாய்
ஐக்கிய நாடுகள் சபையில்
குரலிசையால் அகிலத்தையே
குளிரச் செய்த பேரரசி!

சிவமான... சதாசிவமான
அன்புக் கணவனை இழந்த பின்
இசை மேடைக்கு ஓய்வு தந்து
மறையுவா நாளில் உயிர்நீத்து
நிரந்தரமாய் உடலுக்கு ஓய்வு தந்து
காற்றினிலே கீதமாய்க் கலந்து
நிறையுவா நாளாய் என்றும்
இன்ப கீதமாய் பரந்து வாழ்கவே!

உலகம் விழிக்கச் சுப்ரபாதம்
பாடிய அன்னை கண்மூட
நீலாம்பரி பாடியது யாரோ?

**- ஈஷ்வர்**